

கி.வா.ஜ. 100
நூற்றாண்டு வெளியீடு

# பெரிய புராண விளக்கம்

பகுதி 8

கி. வா. ஜ.

1/2



## கி.வா.ஜகந்நாதன்

தமிழ்த் தாத்தாவின் தலை மாணக்கராகத் திகழ்ந்து அல்லயன்ஸ் தாத்தாவின் குடும்பத்தில் ஒருவராகத் திகழ்ந்து; என்றென்றும் பழமைக்கும், புதுமைக்கும் பாலமாகத் திகழ்ந்து, பல தலைமுறைகளுக்கும் மேலாகப் பயன் தரக்கூடிய தமிழ்ப் பொக்கிஷத்தை வழங்கிச் சென்றவர்.

இவரது எழுத்தில் இருக்கும் ஆழம், கனம் - இரண்டும் இவரது புலமையின் ஆற்றலையும், பரந்த சிந்தனையின் வீச்சையும் காட்டும்.

இவரது பேச்சிலிருந்து பிறக்கும் ஒவ்வொரு வாக்கியத்திலும் ‘சிலேடை’ புலப்படும்.

(தமிழ்) தாய்க்கு இனிய மகனாகி, ஆசானுக்குச் சிறந்த மாணாக்கராகி, ‘கலைமகளு’க்கே ஆசிரியராகத் திகழ்ந்த அபூர்வ மனிதர்.

*- பதிப்பகத்தார்*

1/2

# பெரிய புராண விளக்கம்

பகுதி-8

(திருநாவுக்கரசு நாயனார் புராணம் - பாகம் -3)

கி. வா. ஜகந்நாதன்




கலா நிலையம்
ப.எண். 244, ராமகிருஷ்ணா மடம் சாலை,
மயிலாப்பூர், சென்னை - 600 004.

1/2

# ஆசி கேட்கும் அன்பு தாசன்

வயதாகிவிட்டால் என்ன! பழைய நினைவுகளும் மறந்தா போகும்! முதுமை என்பது உடலில் ஏற்படுமே ஒழிய உள்ளத்தில் அல்ல. பெரும்பாலான மக்கள் வயது ஏற ஏற, தன் இளமைக் கால பருவத்தை எண்ணி எண்ணி வியந்து மகிழ்ந்து, அந்தக் காலம் மறுபடியும் வராதா என ஏங்குவர். பணக்காரர்கள், தனக்குச் செல்வம் வந்து சேரும் முன் இருந்த காலத்தை எண்ணி எண்ணி ஏங்கி, நாம் அன்றைய நிலையில் எவ்வளவு மகிழ்ச்சியாக இருந்தோம், அந்த மகிழ்ச்சி இன்றைக்குக் கிடைக்காதா என்று ஏங்குபவர்கள்தான் அதிகம். ஆனால், முதியவருக்கு இளமையும் வராது; செல்வம் படைத்தவருக்கு தன் பழைய நிலைக்குப் போகவும் முடியாது. இதுதான் இயல்பு. நாம் ஏதோ ஒரு பெரிய தத்துவத்தை இங்கே உதிர்த்துவிட்டோம் என்று யாரும் தயவு செய்து எண்ணி ஏமாற வேண்டாம். இந்த இயல்புதான் வாழ்க்கை; இந்த வாழ்க்கைதான் இலக்கியம்.

கோவலன், கண்ணகி, மாதவி இவர்களின் வாழ்க்கை இலக்கியம்தான் சிலப்பதிகாரம்; ராமன், இலட்சுமணன், சீதை இவர்களது வாழ்க்கை இலக்கியம்தான் கம்பராமாயணம்; பொதுவாக மனிதர்களுடைய வீட்டினுள்ளும், வெளியேயும் நடக்கும் நிகழ்ச்சிகளை விளக்குவதுதான் அகநானூறு, புறநானூறு. 'ஒரு பெண் நடந்து வந்தாள்', 'ஒரு ஆண்மகன் நடந்து வந்தான்' என்பது போன்ற தொடர்களை எழுதுவது நிகழ்ச்சி. ஆனால், இதையே, 'அந்த மான் விழியாள் அன்னம் போல அழகுபட நடந்து வந்தாள்' என்றும், 'அந்தக் கட்டிளங்காளையைப் போன்ற ஆண்மகன் மதம்பிடித்த யானையைப் போல, வீறு கொண்டு நடந்து வந்தான்' என்று உபமானம் உபமேயங்களுடன், இயற்கை யின் அழகையும் சேர்த்துச் சொல்லும் போது, அது இலக்கியமாகிறது.

இயல்பான வாழ்க்கை நிகழ்ச்சியை, இலக்கியமாக மாற்றுவது ஒரு தனிக் கலை! இதற்கு ஆற்றலுடன் கூடிய சிந்தனை அவசியம். நம்மிடையே வாழ்ந்த பல மேதாவி களுக்கு இத்தகைய ஆற்றலும் அறிவும் மிகுந்திருந்தது. ஔவையார், கம்பர், இளங்கோவடிகள், ஒட்டக்கூத்தர் என்று செல்லும் இந்த முடிவிலா பட்டியலின் விவரம் நமக்குத் தேவையில்லை. ஆனால், இவர்கள் இது போலச் செய்த அரிய இலக்கியங்களைப் புரிந்து கொண்டு, அதற்குத் தெளிவான, ஆழமான, இலக்கியத் தரம் குறையாமல், அழகு தமிழில் விளக்கம் சொன்னவர்களும், சொல்பவர்களும் பலர் உண்டு. இவர்கள் இன்றைய சூழலில், மக்கள் எளிதில் புரிந்து கொள்ளும் மொழி நடையில், காலத்திற்கேற்ற சொற்களைப் பயன்படுத்தி, பழமைக்கும் புதுமைக்கும் பாலமாக அமைந்தனர். இப்படிப்பட்டவர்களில் குறிப்பிடத்தக்கவர் 'வாகீச கலாநிதி' கி.வா. ஜகந்நாதன் அவர்கள்.

தொல்காப்பியம் என்றாலே, புரிந்து கொள்வது மிகவும் கடினம் என்ற நிலையை மாற்றி, 'பயப்படாதீர்கள்' என்ற தொடரை 'கலைமக'ளில் எழுதினார். கவிதை புனைவது கவிஞர்களின் வேலை என்ற கலக்கத்தை கவி பாடலாம் என்ற நூலின் மூலம் போக்கினார். கம்ப ராமாயணத்தில் இருக்கும் தமிழின் அழகையும், நடையின் நளினத்தையும் அழியா அழகு என்ற நூலின் மூலம் அழகுபட விளக்கியுள்ளார். திருமுருகாற்றுப்படை விளக்கத்தின் மூலம் மோட்சத்திற்கு 'வழிகாட்டி'யுள்ளர். கந்தர் அநுபூதி என்னும் கடலில் மூழ்கி, அதிலுள்ள முத்துக்களை எடுத்துக் கோத்து ஞான மாலையைத் தந்த ஞானப்பிரகாசனார் அவர்.

கி.வா.ஜ. அவர்களின் தமிழ் நடையில் கடினம் இருக்காது; ஆனால், கன்னித் தமிழ் மிளிரும்படி ஒரு கலைஞன் தியாகம் இருக்கும். காவியத்தை ஒவியமாக்கி, சித்திர மேகலையுடன் இலங்கைக் காட்சிகளைக் காட்டி, தமிழுக்கு ஒரு புதுமெருகு ஊட்டி, தமிழை ஒரு அதிசயப் பெண்ணாக்கி, விளையும் பயிர் முதல் பெரிய புராணம் வரை பேசியிருக்கிறார், வாழும் தமிழாக எழுதியிருக்கிறார்.

இவரது முருகன் பெருமையையும், கந்தவேள் கதையமுதத்தையும் படிக்கும் தமிழ் அன்பர்களின் ஒரு சாண் வயிறு கண்டிப்பாக நிரம்பி விடும் தன்மை கொண்டது. தமிழ் நாவல்களின் தோற்றமும் வளர்ச்சியும் பற்றி கூறும் போது, அது அறுந்த தந்தியாக இல்லாமல், பவழ மல்லியாக மணக்கும், நவக்கிரகம் போல நிரம்பி வழியும் ஆற்றல் படைத்தது. கிழவியின் தந்திரத்தை சகல கலா வல்லியாக மாற்றிய நாம் அறிந்த கி.வா.ஜ, சின்ன ராஜா அல்ல; ஒரு

ஆத்ம ஜோதி. இவருடைய நாடோடிப் பாடல்களும், தமிழ்ப் பழமொழிகளும், வாழ்க்கைச் சுழலை கண்டறியாதன கண்டேன் என்று விளக்கி, நமக்கு அமுத மொழியினால் தமிழ் உதயத்தைக் காட்டிய அகஸ்தியர்.

அல்லயன்ஸ் நிறுவனர் குப்புஸ்வாமி ஐயர், கி.வா.ஜ. அவர்களைத் தன் குடும்பத்தில் ஒருவராகக் கருதிப் பழகிவந்தார். கி.வா.ஜ. அவர்களும், இவரைத் தன் தந்தையாகக் கருதி வந்தார். அந்தக் காலக் கட்டங்களில் ஒருவருக்கொருவர் கலந்தாலோசிக்காமல் எந்தக் காரியத்தையும் செய்ய மாட்டார்களாம். கி.வா.ஜ. வின் முதல் நூலான வழிகாட்டி குப்புஸ்வாமி ஐயரால் வெளியிடப்பட்டது. அதே போல் அல்லயன்ஸ் அச்சகம் ஆரம்பித்த போது, கி.வா.ஜ.வின் உதயம் என்ற நூல்தான் முதன் முதலாக அச்சிடப்பட்டது. இந்த நூல் இதற்கென்றே பிரத்தியேகமாக எழுதப்பட்டதாம்.

கி.வா.ஜ. அவர்களின் தமிழ் ஆற்றலைக் கண்டு வியந்தவர் அல்லயன்ஸ் ஐயர். அல்லயன்ஸ் ஐயர், கி.வா.ஜ., கா.ஸ்ரீ.ஸ்ரீ., த.நா. குமாரசாமி, கு.ப.ரா., த.நா. சேனாபதி, தி.ஜ.ர என்ற குழுமத்தின் சேர்க்கைதான் 'அல்லயன்ஸ்'. கஷ்டப்பட்டு, நஷ்டப்பட்டு இருப்பினும் இஷ்டப்பட்டு பதிப்புப் பணியில் ஈடுபட்ட இவர்களெல்லாம் தமிழ் மொழியை வளர்த்தார்கள் என்று சொல்வதைவிட, தமிழ் மொழியின் அழகையும், அந்த அழகினுள் பொதிந்துள்ள இலக்கிய நயத்தையும் தொடர்ந்து தமிழ் மக்களுக்கு வழங்கி வந்தனர் என்று சொன்னால் பொருந்தும். தேச சேவையிலும், மொழி வளர்ச்சியிலும் ஈடுபட்ட இவர்கள், இலக்கிய அழகையும் படம் பிடித்துக் காட்டி சாதனையாளர்கள்.

கி.வா.ஜ.வுடன் அல்லயன்ஸ் ஐயர் பாராட்டிய நெருக்கம், நம்பிக்கை எல்லாம் மற்ற எழுத்தாளர்களுக்கு சிறிது சஞ்சலத்தை ஏற்படுத்தாமல் இல்லை. இதை அவர்கள் ஐயரிடம் நேராகவே கேட்டும் விட்டனர். அதற்கு ஐயர் அமைதியாக, 'கி.வா.ஜ. எழுத்திலும், வாக்கிலும் சரஸ்வதி தேவி குடி கொண்டிருக்கிறாள். அவருடைய பெருமையெல்லாம் இப்போது உங்களுக்குத் தெரியாது. ஆனால் தெரியும் போது நான் இருக்க மாட்டேன். அப்போது நீங்கள் எல்லாம் இதை உணர்வீர்கள்' என்று கூறிய வாக்கு, அப்படியே பலித்தது. *1940* களில் கி.வா.ஜ. அடிக்கடி வெளியூர்களுக்குச் சென்று இலக்கிய, ஆன்மிக சொற்பொழிவு ஆற்றி வந்தார். மக்களிடையே இவரது சொற்பொழிவு பெரிய வரவேற்பைப் பெற்றது. அந்தச் சமயங்களிலெல்லாம், அல்லயன்ஸ் ஐயர் கி.வா.ஜ.வைத் தமது காரில் ரயிலடிவரை விடச் சொல்வாராம். அதே போல, ஊரிலிருந்து திரும்பும் போது, அவரை அழைத்துவரத் தமது காரை அனுப்புவாராம். கி.வா.ஜ.வின் மீது தாம் கொண்ட அன்பையும், நம்பிக்கையையும் பல சமயங்களில் அல்லயன்ஸ் ஐயர் இது போன்ற செயல்களின் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்.

கி.வா.ஜ. அவர்களின் பேச்சிலும், எழுத்திலும், மொழியின் அழகு மட்டுமல்ல, சிலேடையும் உதிரும். சாதாரணமாக இந்தக் கலை எல்லோருக்கும் வந்து விடாது. தற்சமயம் இது, கலைஞர் மு. கருணாநிதி அவர்களிடம் இயல்பாய் அமைந்திருக்கின்றது. அல்லயன்ஸ் ஐயருக்கு நெருக்கமாக இருந்த பல எழுத்தாளர்கள் 'கலைமகள்' காரியாலயத்தில் வேலை பார்த்து வந்தனர். தினமும் அவர்கள் வேலை நேரம் முடிந்த பின்பு 'அல்லயன்ஸ்'ஸில் கூடுவது

வழக்கம். ஒரு சமயம், அல்லயன்ஸ் ஐயரின் துணைவியார், இவர்களுக்கு 'உப்புமா' செய்து கொடுத்தார். அதைக் கையில் வாங்கிக் கொண்ட கி.வா.ஜ., ''உப்புமா என்றால் என்ன தெரியுமா?'' என்று கேள்வி கேட்டுவிட்டு, விளக்கமும் கொடுத்தாராம். உப்புமாவை சாப்பிட்டதும் தாகம் எடுக்குமாம். உடனே தண்ணீர் குடிப்போம். வயிற்றிலுள்ள உப்புமாவும், தண்ணீரும் சேர்ந்து வயிற்றை 'உப்ப'ச் செய்துவிடும். அதனால் 'உப்புமா' என்று பெயர் வந்தது' என்று சொன்னாராம். இப்படிப் பல தகவல்களை எனது தந்தையார் அவ்வப்போது சொன்னது உண்டு. அவற்றிலிருந்து சிலவற்றை நான் இந்தச் சமயத்தில் பகிர்ந்து கொள்கிறேன்.

கி.வா.ஜ. அவர்கள் திருவல்லிக்கேணியில் குடியிருந்த போது, அவரது குழந்தைக்கு உடல் நலம் சரியில்லாத நேரங்களில், கி.வா.ஜ.வின் துணைவியாரும், தமக்கையாரும் - நேராக மைலாப்பூரிலுள்ள அல்லயன்ஸ் ஐயர் வீட்டிற்கு வந்து விடுவார்களாம். குழந்தைக்கு மருத்துவ வசதிகளை ஏற்படுத்தித் தந்து, தனது வீட்டிலேயே பகல் பொழுது தங்கி ஓய்வெடுக்கச் சொல்லி, மாலையில் சூரிய வெப்பம் தணிந்த பிறகு ரிக்ஷாவில் அனுப்பிவைப்பாராம் அல்லயன்ஸ் ஐயர். இந்தச் செய்தியை மதுகரம் அம்மையார் சொல்லும் போதெல்லாம், அவரது வாயிலிருந்து வந்த வார்த்தைகளை விட, கண்களிலிருந்து பெருகிய கண்ணீர்தான் அதிகம். அன்பினால் விளைந்த இந்தப் பண்பை கி.வா.ஜ. அவர்களே ஒரு முறை கடிதம் மூலம் வெளிப்படுத்தியுள்ளார். 'ஸ்ரீ குப்புஸ்வாமி ஐயர் அவர்களுக்கு... நீங்கள் செய்த உதவிக்கு நன்றி தெரிவிக்க வார்த்தைகளே இல்லை... நான்

அனுமான் அல்ல, என் மார்பைத் திறந்து காட்ட. இருந்தாலும் மனத்திலிருந்து சொல்கிறேன் நன்றி' என்று எழுதியுள்ளார்.

அல்லயன்ஸ் ஐயர் கடைசிவரை மிகவும் எளிமையாகவே வாழ்ந்து வந்தார். எங்கு சென்றாலும் 'டிராமி'ல்தான் செல்வார். அப்படி செல்லும் போதுகூட ஏதாவது 'புரூப்' படித்துக் கொண்டுதான் செல்வார். அப்போது ஏதாவது சந்தேகம் வந்துவிட்டால், 'காபியிங் பென்சி'லால் உள்ளங்கையில் குறித்து வைத்து, நேராக கி.வா.ஜ. அவர்கள் வீட்டிற்குச் சென்று 'துப்பு, துப்பு' அதாவது துப்பு கிடைத்துவிட்டது என்று கூறுவாராம். கி.வா.ஜ. அவர்களும் சிரித்துக் கொண்டே, இரண்டு கைகளையும் நீட்டி, 'துப்புங்கள், ஏந்திக் கொள்கிறேன்' என்று சிலேடையாகச் சொல்வாராம்.

''தமிழ்நாட்டின் மிகச் சிறந்த எழுத்தாளர்களில் ஒன்றிரண்டு பேரைத் தவிர, மற்ற அத்தனைபேர் புத்தகங் களையும் ஐயர் போட்டிருக்கிறார். இதற்கென்ன காரணம்? பிரசுரத் தொழிலில் தமிழ் நாட்டில் உள்ள மற்றவர்களைவிட இவர் என்ன பெரிய நிபுணரா? பணம் பெருத்தவரா? இலக்கியச் சுவை நிறைந்தவரா? எப்படி அவரிடம் எல்லா எழுத்தாளர்களும் சிக்கினார்கள்?'' என்று வேறு சில பிரபல பிரசுரகர்த்தர்களே ஆச்சரியப்படுகிறார்கள். இதற்கு ஒரு முக்கிய காரணம் உண்டு... ''அவர் எந்த எழுத்தாளரையும் - அவர் சிறந்தவரோ இல்லையோ - மிக மிகக் கண்ணியாகவும் மதிப்போடும் வரவேற்று உபசரிக்கும் அருங்குணம் ஐயரிடம் இயல்பாய் அமைந்திருந்தது... ஒவ்வோர் எழுத்தாளருக்கும் தாம் ஒரு வள்ளலாக இருக்க வேண்டும் என்பதுதான் ஐயரின் உள்ளூற ஆசை'' என்று தி.ஜ.ர. அவர்கள் எழுதியுள்ளார்.

கி.வா.ஜ. அவர்களின் கடைசி காலக் கட்டத்தில், அவருடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அப்போதெல்லாம் அவர், என் பாட்டனாரைப் பற்றி மிகவும் உயர்வாகப் பேசுவார். அவர் வீட்டிற்கு விருந்தினர் எவரேனும் வந்தால், இன்னாருடைய பேரன் என்று பெருமையுடன் அறிமுகம் செய்து வைப்பார். அந்தச் சமயங்களில் அவருடைய முகத்தில் மகிழ்ச்சி பொங்கும். ஒரு நாள் 'புரூப்' எல்லாம் படித்து முடித்த பிறகு, அவர் என்னிடம், ''பேரன் என்றால் என்ன என்று சொல்?'' என்று கேட்டார். பெருங்கடல், காலி லோட்டாவைப் பார்த்து, 'உன்னிடம் எவ்வளவு தண்ணீர் இருக்கிறது?' என்று கேட்பது போல இருந்தது. அவரிடம் நான் கொண்ட நெருக்கத்தினால், அசடு வழிய சில பதில்களைக் கூறினேன். பிறகு, அவரே சொன்னார்: 'பெயரைச் சொல்பவன் பேரன். குப்புஸ்வாமி ஐயரின் பெயரைச் சொல்பவன் ஸ்ரீநிவாசன்' - என்று முதுகில் ஒரு தட்டுத் தட்டி அனுப்பி விட்டார். அதன் பிறகு சிறிது நாள்களிலேயே அவர் இறைவனடி சேர்ந்துவிட்டார்.

என் பாட்டனார் இறைவனடி சேர்ந்த போது, கி.வா.ஜ. அவர்கள் இரண்டு வெண்பாக்களை இயற்றினார். அவை:

அண்டும் விரோதியாண்டடவணி ஈரேழில்
கொண்ட முருகன் திருத்தாள் கூடினன் - மாண்டுதமிழ்
நூலைக் குவித்து நுவல் குப்புஸ்வாமி பேர்
கேலு மந்தன ருளனாம் கோ.
அன்பில் உயர்ந்தோன் நன் காற்றுபகாரத்துயர்ந்தோன்
தன்புடையே நன்மை தனை ஓரான் - இன்சொல்லான்
மாநடராஜப் பேரான் வாய்த்த குப்புசாமியைய ரென்ற
பெயர் கொண்ட அவர்.

இப்படி என் பாட்டனாரைப் பாராட்டிய கி.வா.ஜ., தன் கடைசி காலத்தில் என்னை என் பாட்டனாருடன் ஒப்பிட்டுப் பாராட்டிக் கூறிய போது, நன்றி சொல்ல அப்போது எனக்குத் தோன்றவில்லை; ஆனால், இப்போது சொல்ல நினைக்கும் போது அவர் உயிருடன் இல்லை. அவருடைய நூற்றாண்டில் அவர் எழுதிய நூல்களை வெளியிடுவதன் மூலம் அந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த நன்றியின் மூலம் அந்த இருவரின் ஆத்மாக்களும் மகிழ்ந்து, நம் மீது ஆசி அருளட்டும்.

- அல்லயன்ஸ் ஸ்ரீநிவாஸன்.

# பதிப்புரை

பெரிய புராண விளக்கத்தின் எட்டாவது பகுதியாகிய இந்நூல் திருநாவுக்கரசு நாயனார் புராணத்தின் இறுதி பாகம். இதில் திருநாவுக்கரசு நாயனார் புராணத்தில் வரும் கச்சி முதலிய தலவழிபாடு, காளத்தி தரிசனம், கயிலை யாத்திரை, கயிலைக் காட்சி, பூந்துருத்தி அடைதல், பிற தலங்களைக் காணுதல், சோதனையில் வெற்றி, இறைவனடி எய்துதல் ஆகிய பகுதிகள் அடங்கி யுள்ளன.

*- பதிப்பகத்தார்*

# திருநாவுக்கரசு நாயனார் புராணம்
## பாகம் - 3

பெரிய புராணத்தில் 5-வது ஆக விளங்கும் திருநின்ற சருக்கத்தில் முதலாவதாக இருக்கும் திருநாவுக்கரசு நாயனார் புராணத்தில் வரும் 318-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'''இந்த உலகத்தில் வாழும் மக்கள் உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம் திருவதிகை வீரட்டானத்தில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் நம்பராகிய வீரட்டானேசுவரர் தாம் வழங்கிய பெரிய திருவருளால் சூலையை அளித்து முன் ஒரு காலத்தில் ஆளாகக் கொண்டருளிய திருத்தொண்டராகிய திருநாவுக்கரசு நாயனார் நம்முடைய திருத்தலமாகிய காஞ்சீபுரத்திற்கு எழுந்தருளும் பாக்கியத்தை அடைந்தோம்.'' என எண்ணிக் காலை நேரத்தில் மலர்ச்சியை அடையும் தாமரை மலர்களைப் போல காஞ்சீபுரத்தில் வாழும் மக்களுடைய வதனங்கள் யாவும் மிகவும் மலர்ச்சியை அடைந்து மகிழ்ச்சி சிறந்து ஓங்கி நிற்க ஆனந்தம் தழைத்து ஓங்கிய திருவுள்ளங்களைத் தாங்குபவர்கள் ஆனார்கள்.' பாடல் வருமாறு:

"'ஞாலம் உய்யத் திருவதிகை
நம்பர் தம்பேர் அருளினால்
சூலை மடுத்து முன்ஆண்ட
தொண்டர் வரப்பெற் றோம்' என்று
காலை மலரும் கமலம்போல்
காஞ்சி வாணர் முகமெல்லாம்
சால மலர்ந்து களிசிறப்பத்
தழைத்த மனங்கள் தாங்குவார்."

ஞாலம் - இந்தப் பூமண்டலத்தில் வாழும் மக்கள்; இட ஆகுபெயர். உய்ய - உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம். த்: சந்தி. திருவதிகை - திருவதிகை வீரட்டானத்தில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும்; ஆகுபெயர். நம்பர் தம் - தம்முடைய அடியவர்களுக்குப் பல வகையான நம்பிக்கைகளை உண்டாக்குபவராகிய வீரட்டேசுவரர். தம்: அசைநிலை. அந்த நம்பிக்கைகள் இன்ன என்பதை வேறு ஓரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. பேர் அருளினால் - வழங்கிய பெரிய திருவருளினால். சூலை - சூலை நோயை; வயிற்று வலியை. மடுத்து - அளித்தருளி. முன் - முன்பு ஒரு காலத்தில். ஆண்ட - தடுத்து ஆட்கொண்ட. தொண்டர் - திருத்தொண்டராகிய திருநாவுக்கரசு நாயனார். வர - நம்முடைய நகரமாகிய காஞ்சீபுரத்திற்கு எழுந்தருளி வர. ப்: சந்தி. பெற்றோம் - அவ்வாறு எழுந்தருளியதாகிய பாக்கியத்தை நாம் அடைந்தோம். என்று - என எண்ணி. காலை - காலை நேரத்தில். மலரும் - மலர்ச்சியை அடையும். கமலம் போல் - தாமரை மலர்களைப் போல; ஒருமை பன்மை மயக்கம். காஞ்சி - காஞ்சீபுரத்தில். வாணர் - வாழும் மக்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். முகம் - வதனங்கள்; ஒருமை பன்மை மயக்கம். எல்லாம் -

யாவும். சால - மிகவும். மலர்ந்து - மகிழ்ச்சியினால் மலர்ச்சியை அடைந்து. களி - ஆனந்தம். சிறப்ப - சிறந்து ஓங்க. த்: சந்தி. தழைத்த - இன்பம் தழைக்கப் பெற்ற. மனங்கள் - திருவுள்ளங்களை. தாங்குவார் - தாங்குபவர்கள் ஆனார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

இந்தத் தலத்தைப் பற்றிக் காந்தாரப் பண்ணில் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"கரவாடும் வன்னெஞ்சர்க்
கரியானை கரவார்பால்
விரவாடும் பெருமானை
விடையேறும் வித்தகனை
அரவாடச் சடைதாழ
அங்கையினில் அனலேந்தி
இரவாடும் பெருமானை
என்மனத்தே வைத்தேனே."

அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருநேரிசை வருமாறு:

"படமுடை அரவினோடு பனிமதி யதனைச்சூடிக்
கடமுடை உரிவைமூடிக் கண்டவர் அஞ்சஅம்ம
இடமுடைக் கச்சிதன்னுள் ஏகம்பம் மேவினான்றன்
நடமுடை ஆடல்காண ஞாலந்தான் உய்ந்தவாறே."

அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருவிருத்தம் வருமாறு:

"ஓதுவித் தாய்முன் அறவுரை
காட்டி அமணரோடே
காதுவித் தாய்கட்ட நோய்பிணி
தீர்த்தாய் கலந்தருளிப்

போதுவித் தாய்நின் பிணிபிழைக்
கிற்புளியம் வளார்ால்
மோதுவிப் பாய்உகப் பாய்முனி
வாய்கச்சி ஏகம்பனே.''

அந்த நாயனார் பாடியருளிய மற்றொரு திருக்குறுந் தொகை வருமாறு:

''பண்டு செய்த பழவினை யின்பயன்
கண்டும் கண்டும் களித்திகாண் நெஞ்சமே
வண்டு லாமலர்ச் செஞ்சடை ஏகம்பன்
தொண்ட னாய்த்திரி யாய்துகள் தீரவே.''

அந்த நாயனார் பாடியருளிய மற்றொரு திருக்குறுந் தொகை வருமாறு:

''பூமே லானும் பூமகள் கேள்வனும்
நாமே தேவர் எனாமை நடுக்குறத்
தீமே வும்முரு வாதிரு வேகம்பா
ஆமோ அல்லற் படஅடி யோங்களே.''

அந்த நாயனார் பாடியருறிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''தாயவன்காண் உலகுக்குத் தன்னொப் பில்லாத்
தத்துவன்காண் மலைமங்கை பங்கா என்பார்
வாயவன்காண் வரும்பிறவி நோய்தீர்ப் பான்காண்
வானவர்க்கும் தானவர்க்கும் மண்ணு ளோர்க்கும்
சேயவன்காண் நினைவார்க்குச் சித்த மாரத்
திருவடியே உள்கிநினைந் தெழுவார் உள்ளம்
ஏயவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காணவனென் எண்ணத் தானே.''

அந்த நாயனார் பாடியருளிய மற்றொரு திருத்தாண்டகம் வருமாறு:

"முந்தைகாண் மூவரினும் முதலா னான்காண்
மூவிலைவேல் மூர்த்திகாண் முருக வேட்குத்
தந்தைகாண் தண்கடமா முகத்தி னார்க்குத்
தாதைகாண் தாழ்ந்தடியே வணங்கு வார்க்குச்
சிந்தைகாண் சிந்தாத சித்தத் தார்க்குச்
சிவனவன்காண் செங்கண்மால் விடைஒன் றேறும்
எந்தை காண் எழிலாரும் பொழிலார்கச்சி
ஏகம்பன் காணவனென் எண்ணத் தானே."

இந்தத் தலத்தைப் பற்றித் தக்கேசிப் பண்ணில் சுந்தர மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"வரங்கள் பெற்றுழல் வாள ரக்கர்தம்
வாலிய புரம்மூன் றெரித் தானை
நிரம்பிய தக்கன்றன் பெரு வேள்வி
நிரந்த ரஞ்செய்த நிற்கண் டகனைப்
பரந்த தொப்பு கழாறாமை நங்கை
பரவி ஏத்தி வழிபடப் பெற்ற
கரங்கள் எட்டுடைக் கம்பனெம் மானைக்
காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே."

பட்டினத்துப் பிள்ளையார் பாடியருளிய திரு வேகம்பம் உடையார் திருவந்தாதியில் வரும் சில பாடல்கள் வருமாறு:

"மெய்த்தொண்டர் செல்லும் நெறியறி
யேன்மிக நற்பணிசெய்
கைத்தொண்டர் தம்மிலும் நற்றொண்டு
வந்திலன் உண்பதற்கே
பொய்த்தொண்டு பேசிப் புறம்புற
மேஉன்னைப் போற்றுகின்ற
இத்தொன்டன் என்பணி கொள்ளுதி
யோகச்சி ஏகம்பனே."

''ஏகம்ப னேஎன்னை ஆள்பவ
னேயிமை யோர்க்கி ரங்கிப்
போகம்பன் னாளும் கொடுக்கின்ற
நாயக பொங்கு மைவாய்
நாகம்பொன் னாரம் எனப்
பொலிவுற்று நன்னீர ணியும்
ஆகம்பொன் மாமலை ஒப்பவ
னே என்பன் ஆதரித்தே.''

''அருளைத் தருகம்பர் அம்பொற்
கயிலையுள் எம்மை யாம்
பிருளைக் கரிமறிக் கும்மிவ
ரைய குறுத்தி யெய்ய
வெருளக் கலைகணை தன்னொடும்
போயின வில்லி மைக்கும்
மருளைத் தருசொல்லி எங்கோ
வினையுண் டில் வையகத்தே.''

''படையால் உயிர் கொன்று தின்று
பசுக்களைப் போலச் செல்லும்
நடையால் அறிவின்றி நாண்சிறி
தின்றி நகும் குலத்திற்
கடையாப் பிறக்கினும் கச்சியுள்
ஏகம்பத் தெங்களையா
ளுடையான் கழற்கன்ப ரேவலர்
யாவர்க்கும் உத்தமரே.''

அந்தப் பட்டினத்துப் பிள்ளையார் பாடியருளிய திருவேகம்ப மாலையில் வரும் சில பாடல்கள் வருமாறு:

''அறந்தான் இயற்றும் அவனிலும்
கோடி அதிகம் இல்லம்
துறந்தான் அவனிற் கதகோடி
உள்ளத் துறவுடை யோன்

மறந்தான் அறக்கற் றறிவோ
டிருந்திரு வாதனை யற்
றிறந்தான் பெருமையை என்சொல்லு
வேன்கச்சி ஏகம்பனே."

"நல்லார் இணக்கமும் நின்பூசை
நேசமும் ஞானமுமே
அல்லாது வேறு நிலையுள
தோவக மும்பொருளும்
இல்லாளும் சுற்றமும் மைந்தரும்
வாழ்வும் எழிலுடம்பும்
எல்லாம் வெளிமயக் கேஇறை
வாகச்சி ஏகம்பனே."

அவர் பாடியருளிய திருவேகம்ப விருத்தம் ஒன்று வருமாறு:

"அன்னை எத்தனை எத்தனை அன்னையோ
அப்பன் எத்தனை எத்தனை அப்பனோ
பின்னை எத்தனை எத்தனை பெண்டிரோ
பிள்ளை எத்தனை எத்தனை பிள்ளையோ
முன்னை எத்தனை எத்தனை சென்மமோ
மூடனாயடி யேனும் அறிந்தி லேன்
இன்னம் ஏத்தனை எத்தனை சென்மமோ
என்செய் வேன்கச்சி ஏகம்ப நாதனே."

அவர் பாடியருளிய கச்சி திரு அகவலில் வரும் சில அடிகள் வருமாறு:

"தருக்கிய காமுகர் சாரும் படுகுழி
செருக்கிய காமுகர் சேரும் சிறுகுழி
பெண்ணும் ஆணும் பிறக்கும் பெருவழி
மலம்சொரிந் திழியும் வாயிற் கருகே

கலம்சொரிந் திழியும் தண்ணீர் வாயில்
இத்தை நீங்கள் இனிதென வேண்டா
பச்சிலை இடினும் பத்தர்க் கிரங்கி
மெச்சிச் சிவபத வீடருள் பவனை
முத்தி நாதனை மூவா முதல்வனை
அண்டர் அண்டமும் அனைத்துள புவனமும்
கண்ட அண்ணலைக் கச்சியிற் கடவுளை
ஏக நாதனை இணையடி இறைஞ்சுமின்
போக மாதரைப் போற்றுதல் ஒழிந்தே.''

இரட்டைப் புலவர்கள் பாடியருளிய ஏகாம்பர நாதர் உலாவிலிருந்து சில கண்ணிகள் வருமாறு:

''ஓது திருநகரி ஓரேழினும் சிறந்த
ஆதி நகர்காஞ்சி அந்நகரிற் - போதநலம்
மன்னி வளர்வ தொருமாவுண் டதனிழற்கீழ்க்
கன்னிஎமை உனக்குக் காணலாம் - சொன்னபடி
ஆகம பூசை புரியஇனி தவ்விடத்துப்
போகஎன அமரர் போற்றிசைப்ப - ஏகிப்
பொருப்பரையன் ஏவலோடு போந்துபல கோடித்
திருத்தகு மாதர் உடன்சேர - விருப்புடனே
தென்றிசையிற் சென்று திருவாய் மலர்ந்தஉயர்
நன்று திகழ் காஞ்சி நகரெய்தி.''

இலக்கண விளக்கப்பாட்டியலில் வரும் ஒரு பாடல் வருமாறு:

''குடிமகனைக் கலிவெண்பாக் கொண்டு
விழைதொல் குடிமுதல் விளங்கஉரைத்தாங்
கிழைபுனை நல்லாரிவர் மணிமறுகின்
மற்றவன் பவனிவர வேழ்பருவம்
உற்றமா னார்தொழப் போந்ததுலாவாம்
ஐந்துமுதல் ஏழாண்டு பேதை

எட்டுமுதல் நான்காண்டு பெதும்பை
ஆறிரண்டொான் றேயாகும் மங்கை
பதினான் காதிபத் தொன்பான்காறும்
எதிர்தரு மடந்தைமே லேயாறும்அரிவை
ஆறுதலையிட்ட இருபதின்மே லோர்
ஆறும் தெரிவை எண்ணைந்து பேரிளம் பெண்எண்டு
றோரும் பருவத்தோர்க் குரைத்தனரே.''

பிறகு வரும் 319-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'அந்தக் காஞ்சி மாநகரத்தில் வாழும் மக்கள் தாங்கள் வாழும் மாடங்கள் உயரமாக நிற்கும் திருவீதிகளினுடைய பக்கங்கள் எல்லாவற்றிலும், அழகைப் பெற்ற தங்களுடைய திருமாளிகைகளினுடைய முன்பு உள்ள வாசல்களில் தோரணங்களையும் உயரமாக உள்ள வாழை மரங்களோடு கமுக மரங்களையும் வரிசை வரிசையாக நட்டு வைத்து நீர் நிரம்பிய தங்கத்தால் செய்த பூரணகும்பத்தையும், திருவிளக்குகளையும், இதழ்கள் அமைந்துள்ள மலர்களைக் கட்டியிருக்கும் மாலைகளைச் சுற்றித் தொங்க விட்டிருந்த நறுமணம் கமழும் பந்தல் களையும், ஆடி அசையும் துவசங்களையும், தங்களோடு எடுத்துக் கொண்டு வந்து அந்தத் தொண்டை நாட்டில் அழகு பெற்றதும் நெடுங்காலமாகப் புகழ் பெற்று விளங்குவதுமாகிய காஞ்சி மாநகரத்தை அந்த மக்கள் அலங்காரங்களைப் புரிந்து வைத்தார்கள்.' பாடல் வருமாறு:

''மாட வீதி மருங்கெல்லாம்
மணிவா யில்களில் தோரணங்கள்
நீடு கதலி யுடன்கமுகு
நிரைத்து நிறைபொற் குடம்தீபம்
தோடு குலவு மலர்மாலை
சூழ்ந்த வாசப் பந்தர்களும்

ஆடு கொடியும் உடன்எடுத்தங்
கணிநீள் காஞ்சி அலங்கரித்தார்.''

மாட - அந்தக் காஞ்சி மாநகரத்தில் வாழும் மக்கள் தாங்கள் வாழும் மாடங்கள்; ஒருமை பன்மை மயக்கம். வீதி - உயரமாக நிற்கும் திருவீதிகளினுடைய; ஒருமை பன்மை மயக்கம். எல்லாம் - எல்லாவற்றிலும். மணி - அழகைப் பெற்ற. வாயில்களில் - தாங்கள் வாழும் திருமாளிகைகளுக்கு முன்பு உள்ள வாசல்களில். தோரணங்கள் - மாவிலைகள், தென்னங்குருத்தோலைகள், மாலைகள் முதலியவற்றைக் கட்டித் தொங்க விட்ட தோரணங்களையும். நீடு - உயரமாக உள்ள. கதலியுடன் - வாழை மரங்களோடு; ஒருமை பன்மை மயக்கம். கமுகு - பாக்கு மரங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். நிரைத்து - வரிசை வரிசையாக நட்டு வைத்து. நிறை - நீர் நிரம்பிய. பொன் - தங்கத்தால் செய்யப் பெற்ற. குடம் - பூரண கும்பத்தையும். தீபம் - திருவிளக்குகளையும்; ஒருமை பன்மை மயக்கம். தோடு - இதழ்கள்; ஒருமை பன்மை மயக்கம். குலவு - அமைந்துள்ள. மலர் - மலர்களைக் கட்டியிருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். மாலை - மாலைகளை; ஒருமை பன்மை மயக்கம். சூழ்ந்த - சுற்றித் தொங்கவிட்டிருந்த. வாச - நறுமணம் கமழும். ப்: சந்தி. பந்தர்களும் - பந்தல்களையும். ஆடு - காற்றில் அசைந்து ஆடும். கொடியும் - துவசங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். உடன் - தங்களோடு. எடுத்து - எடுத்துக் கொண்டு வந்து. அங்கு - அந்தத் தொண்டை நாட்டில். அணி - அழகைப் பெற்றதும்; ஆகு பெயர். நீள் - நெடுங்காலமாகப் புகழைப் பெற்று விளங்குவதுமாகிய. காஞ்சி - காஞ்சி மாநகரத்தை. அலங்கரித்தார் - திருநாவுக்கரசு நாயனாரை வரவேற்கும் பொருட்டு அந்த மக்கள் அலங்காரங்களைப் புரிந்து வைத்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு உள்ள 320-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தக் காஞ்சி மாநகரத்தில் வாழும் திருத்தொண்டர்கள் கூட்டமாகக் கூடிக் கொண்டு தங்களுடைய நகரமாகிய காஞ்சீபுரத்திற்கு எழுந்தருளி வரும் அந்தத் திருநாவுக்கரசு நாயனாரை எதிர்கொண்டு வரவேற்பதற்காகத் தங்களுடைய திருமாளிகைகளிலிருந்து எழுந்து வந்து இனிய சுவையைப் பெற்ற செய்யுட் சொற்களுக்கு அரசராகிய திருநாவுக்கரசு நாயனாரிடத்தில் தாங்கள் தங்கள் திருவுள்ளங்களில் மேற்கொண்ட சைவ வேடத்தின் தோற்றப் பொலிவோடும் அந்தக் காஞ்சீ புரத்தில் மக்கள் நடக்கும் திருவீதிகளில் திருப்பணியைப் புரியும், தேவர்கள் தெரிந்து கொள்வதற்கு அரியவையாக உள்ள திருவலகுகள் முதலாக இருக்கும் அவற்றைத் தங்கள் கைகளில் எடுத்துக் கொண்டு இண்டை மலரை அணிந்த சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற் பெற்றவராகிய திருவதிகை வீரட்டானேசுவரருடைய பக்தராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனாரை எதிர்கொண்டு வரவேற்றார்கள்.' பாடல் வருமாறு:

"தொண்டர் ஈண்டி எதிர்கொள்ள
 எழுந்து சொல்லுக் கரசர்பாற்
கொண்ட வேடப் பொலிவினொடும்
 குலவும் வீதி பணிசெய்யும்
அண்டர் அறிதற் கரியதிரு
 அலகு முதலாம் அவைஏந்தி
இண்டை புனைந்த சடைமுடியார்க்
 கன்பர் தம்மை எதிர்கொண்டார்."

தொண்டர் - அந்தக் காஞ்சி மாநகரத்தில் வாழும் திருத்தொண்டர்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஈண்டி - கூட்டமாகக் கூடிக் கொண்டு. எதிர் கொள்ள - தாங்கள்

வாழும் நகரமாகிய காஞ்சீபுரத்திற்கு எழுந்தருளி வரும் அந்தத் திருநாவுக்கரசு நாயனாரை எதிர்கொண்டு வரவேற்பதற்காக. எழுந்து - தாங்கள் வாழும் திருமாளிகைகளிலிருந்து புறப்பட்டு வந்து. சொல்லுக்கு - இனிய சுவையைப் பெற்ற செய்யுட் சொற்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். அரசர்பால் - அரசராகிய திருநாவுக்கரசு நாயனாரிடத்தில். கொண்ட - தங்கள் திருவுள்ளங்களில் விரும்புமாறு கொண்ட. வேட - சைவ வேடத்தினுடைய. ப்: சந்தி. பொலிவினொடும் - தோற்றப் பொலிவினோடும். குலவும் - மக்கள் நடந்து செல்லும். வீதி - திருவீதிகளில்; ஒருமை பன்மை மயக்கம். பணி - பெருக்குவதாகிய திருப்பணியை. செய்யும் - புரியும். அண்டர் - தேவர்களும்; ஒருமை பன்மை மயக்கம். அறிதற்கரிய - தெரிந்து கொள்வதற்கு அரியவையாக உள்ள. திரு அலகு.- திரு அலகுகள்; துடைப்பங்கள்; ஒருமை பன்மை மயக்கம். முதலாம் - முதலாக இருக்கும். அவை - அந்தக் கருவிகளை. ஏந்தி - தங்களுடைய கைகளில் எடுத்துக் கொண்டு. இண்டை - இண்டை மலரை. புனைந்த - அணிந்த. சடை - சடாபாரத்தை. முடியார்க்கு - தம்முடைய தலையின் மேற் பெற்றவராகிய திருவதிகை வீரட்டானேசு வரருடைய; உருபு மயக்கம். அன்பர் தம்மை - பக்தராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனாரை. தம்: அசை நிலை. எதிர் கொண்டார் - எதிர் கொண்டு வரவேற்றார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

சிவபெருமான் இண்டை மலரை அணிந்திருத்தல்: ''இண்டைச் சடையான் இமையோர் பெருமான்.'', ''இண்டை கொண்ட செஞ்சடை முடிச்சிவன்.'', ''இண்டை சேர்க்கும் சடை ஏடகத் தெந்தையே.'', ''இண்டை புனைவுண்ட சடை.'', ''இண்டைகுடி கொண்ட சடை எங்கள் பெருமானதிடம்.'', ''இண்டை புனைந்தெரு

தேறி.'' என்று திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாரும், ''இண்டைசேர் சடையானை என் மனத்தே வைத்தேனே.'', ''இண்டையைத் திகழ வைத்தார்.'', ''இண்டை கொண்டேற நோக்கி.'', ''வார் சடை மேல் இண்டை.'', ''முருகார் நறுமலர் இண்டை தழுவி வண்டே முரலும் பெருகாறடைசடைக் கற்றையினாய்.'', ''இண்டை செஞ்சடை வைத்த இயல்பினான்.'', ''வளர் சடைக் கிண்டை மாலை புனைந்தும்.'', ''இண்டைச் செஞ்சடையன்.'', ''இண்டை வண்ணமும்.'', ''தூயநீற்றார் இண்டைச் சடை முடியார்.'', ''இண்டைச் சடை முடியாய் என்றேன் நானே.'', ''இண்டைச் சடை சேர் முடியார்.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''இண்டை மலர் கொண்டு.'', ''இண்டை மாமலர்ச் செஞ்சடை யானை.'', ''இண்டை கொண்டன் பிடை அறாத தொண்டர் பரவும் சோற்றுத் துறையே.'' என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், ''இண்டைவார் சடை முடியார்.'', ''இண்டைச் சுருக்கும் தாமமுடன்.'' என்று சேக்கிழாரும் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு உள்ள 321-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'தம்மை எதிர் கொண்டு வரவேற்றுத் தம்மை வணங்கும் சீர்த்தியைப் பெற்ற அடியவர்களை வணங்கி விட்டு அப்பால் எழுந்தருளி திருமதிலை தனக்குச் சுற்றிலும் கொண்டு புனைந்துள்ள காஞ்சி மாநகரத்தில் உள்ள ஒரு திருவீதிக்குள் எழுந்தருளி ஆகாய கங்கையாறு குதித்துக் கொண்டு இறங்கிய சடாபாரத்தைத் தம்முடைய தலையில் மேற் பெற்றவராகிய ஏகாம்பரேசு வரர் எழுந்தருளியிருக்கும் சிவப்பாக விளங்கும் தங்க விமானத்தைப் பெற்ற அந்த ஈசுவரருடைய திருக் கோயிலை அதிர்ந்து முழங்கும் மேகத்தை ஒத்த

நீலமணியைப் போன்ற திருக்கழுத்தைப் பெற்றவராகிய திருவதிகை வீரட்டானேசுவரர் தடுத்து ஆட் கொண்ட திருநாவுக்கரசு நாயனார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

"எதிர்கொண் டிறைஞ்சும் சீரடியார்
தம்மை இறைஞ்சி எழுந்தருளி
மதில்கொண் டணிந்த காஞ்சிநகர்
மறுகுட் போந்து வானநதி
குதிகொண் டிழிந்த சடைக்கம்பர் .
செம்பொற் கோயில் குறுகினார்
அதிர்கொண் டலைநேர் மணிமிடற்றார்
ஆண்ட திருநா வுக்கரசர்."

எதிர்கொண்டு - தம்மை எதிர்கொண்டு வரவேற்று. இறைஞ்சும் - தம்மை வணங்கும். சீர் - சீர்த்தியைப் பெற்ற. அடியார் தம்மை - அடியவர்களை; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசை நிலை. இறைஞ்சி - தாமும் வணங்கிவிட்டு; 'தாம்' என்றது திருநாவுக்கரசு நாயனாரை. எழுந்தருளி - அப்பால் எழுந்தருளி. மதில் - திருமதிலை. கொண்டு - தனக்குச் சுற்றிலும் பெற்று. அணிந்த - தனக்கு அலங்காரமாகப் புனைந்துள்ள. காஞ்சி நகர் - காஞ்சி மாநகரத்தில் உள்ள. மறுகுள் - ஒரு திருவீதிக்குள். போந்து - தாம் எழுந்தருளி. வானநதி - ஆகாய கங்கையாறு. குதிகொண்டு - குதித்துக்கொண்டு. இழிந்த - இறங்கிய. சடை - சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற் பெற்ற. க்: சந்தி. கம்பர் - ஏகாம்பரேசுவரர் எழுந்தருளி யிருக்கும். செம் - சிவப்பாக விளங்கும். பொன் - தங்க விமானத்தைப் பெற்ற; ஆகு பெயர். கோயில் - அந்த ஏகாம்பரேசுவரர் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலை. அதிர் - அதிர்ந்து முழங்கும். கொண்டலை - மேகத்தை. நேர் - போன்ற. மணி - நீல மணியை ஒத்த. மிடற்றார் - திருக் கழுத்தைப் பெற்றவராகிய திருவதிகை வீரட்டானேசுவரர்.

ஆண்ட - தடுத்து ஆட்கொண்ட. திருநாவுக்கரசு - திருநாவுக்கரசு நாயனார். குறுகினார் - அடைந்தார்.

பிறகு வரும் 322-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் ஏகாம்பரேசுவரர் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலுக்கு முன்னால் உயரமாக நிற்கும் கோபுரவாசலில் அந்த நாயனார் தரையில் விழுந்து ஏகாம்பரேசுவரரை வணங்கிவிட்டு பிறகு தரையிலிருந்து எழுந்து நின்றுகொண்டு தம்முடைய திருவருட் செல்வத்தை வழங்கும் ஏகாம்பரேசுவரருடைய திருக்கோயிலினுடைய அழகிய முற்றத்தை அந்த நாயனார் அடைந்து கருப்பதித்தலைப் பெற்ற தங்கத்தை அணிந்த விமானத்தைப் பெற்ற காஞ்சீபுரத்தில் எழுந்தருளியிருக்கும் அந்த ஏகாம்பரேசுவரருடைய திருக்கோயிலை அந்த நாயனார் சுற்றி வலமாக எழுந்தருளுபவராகிய அந்த நாயனார் சிவப்பாக இருக்கும் தங்கம் தோன்றும் இமயமலை அரசனுடைய புதல்வியும், பூங்கொடியைப் போன்றவளும் ஆகிய காமாட்சி அம்மை தம்மைக் கட்டித் தழுவிக் கொள்ளக் குழைவை அடைந்த மாணிக்கத்தைப் போன்ற சிவப்பான திருமேனியைப் பெற்ற பெருமையைப் பெற்ற வாழ்வைப் போன்ற ஏகாம்பரேசுவரரை அவருடைய சந்நிதியில் தரிசித்து விட்டுத் தரையில் விழுந்து அந்த ஈசுவரரை வணங்கி விட்டுத் தம்மிடமிருந்து ஒரு காலத்திலும் விட்டுப் போகாத பக்தியை அந்த நாயனார் பெருகுமாறு செய்தருளினார்.' பாடல் வருமாறு:

"திருவா யிலினைப் பணிந்தெழுந்து
செல்வத் திருமுன் றிலைஅணைந்து
கருவார் கச்சி ஏகம்பர்
கனக மணிமா ளிகைசூழ்ந்து

வருவார் செம்பொன் மலைவல்லி
தழுவக் குழைந்த மணிமேனிப்
பெருவாழ் வினைமுன் கண்டிறைஞ்சிப்
பேரா அன்பு பெருக்கினார்.''

திருவாயிலினை - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் ஏகாம்பரேசுவரர் எழுந்தருளி யிருக்கும் திருக்கோயிலுக்கு முன்னால் உயரமாக நிற்கும் கோபுரவாசலில்; உருபு மயக்கம். ப்: சந்தி. பணிந்து - அந்த நாயனார் தரையில் விழுந்து ஏகாம்பரேசுவரரை வணங்கிவிட்டு. எழுந்து - பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு. செல்வ - தம்முடைய திருவருட் செல்வத்தை தம்முடைய அடியவர் களுக்கு வழங்கும். த்: சந்தி. திருமுன்றிலை - ஏகாம்பரேசு வரருடைய திருக்கோயில் உள்ள அழகிய முற்றத்தை. அணைந்து - அந்த நாயனார் அடைந்து. கரு - கருப்பதித் தலை; ஆகுபெயர். ஆர் - பெற்ற. கச்சி - காஞ்சீபுரத்தில் எழுந்தருளியிருக்கும். ஏகம்பர் - அந்த ஏகாம்பரேசு வரருடைய. கனகம் அணி - தங்கத்தை அணிந்த. மாளிகை - பெற்ற. சூழ்ந்து - அந்த ஏகாம்பரேசுவரருடைய திருக்கோயிலை அந்த நாயனார் சுற்றி வலமாக. வருவார் - எழுந்தருளுபவராகிய அந்த நாயனார். செம் - சிவப்பாக இருக்கும். பொன் - தங்கம் தோன்றும். மலை - இமயமலை அரசனுடைய புதல்வியும்; திணை மயக்கம்; ஆகுபெயர். வல்லி - பூங்கொடியைப் போன்றவளும் ஆகிய காமாட்சியம்மை; உவம ஆகுபெயர். தழுவ - தம்மைக் கட்டித் தழுவிக் கொள்ள. க்: சந்தி. குழைந்த - குழைவை அடைந்த. மணி - மாணிக்கத்தைப் போன்ற; உவம ஆகுபெயர். மேனி - சிவப்பான திருமேனியைப் பெற்ற. ப்: சந்தி. பெருவாழ்வினை - பெருமையைப் பெற்ற வாழ்வைப் போன்ற ஏகாம்பரேசுவரரை; உவமை

ஆகுபெயர். முன் - அவருடைய சந்நிதியில். கண்டு - தரிசித்து விட்டு. இறைஞ்சி - தரையில் விழுந்து அந்த ஈசுவரரை வணங்கிவிட்டு. ப்: சந்தி. பேரா - தம்மிடமிருந்து ஒரு காலத்திலும் விட்டுப் போகாத. அன்பு - பக்தியை. பெருக்கினார் - அந்த நாயனார் பெருகுமாறு செய்தருளினார்.

பிறகு வரும் 323-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் தாரை தாரையாக அமைந்து பொழியும் தம்முடைய கண்களிலிருந்து அருவியைப் போல வழியும் நீர் தம்முடைய திருமேனியில் உள்ள ஒவ்வொரு மயிர்காலிலும் உண்டாகும் புளகாங்கிதம் நிறைந்திருந்த தம்முடைய திருமேனிக்கு வெளியிடங்களில் நீர் அலைகளைப் போல வழியப் பக்தியினால் தம்முடைய திருமேனியில் உள்ள எலும்பு களுக்குள் சென்று அலை பாயச் செய்ய தம்மிடம் சேர்ந்துள்ள திருவுள்ளத்தில் திருவிழிகளால் பெற்ற பிரயோசனத்தை அந்த நாயனார் அடைந்து ஆனந்த சாகரத்தில் முழுகி இன்பத்தை அடையுமாறு அழகிய ஏகாம்பரேசுவரரைத் தம்மிடம் அமைந்துள்ள திருவுள்ளத் தில் பதியுமாறு வைத்துக் கொண்டு நெடுங்காலமாக விளங்கும் ஒரு திருப்பதிகத்தை அந்த நாய்னார் பாடியருளுபவரானார்.' பாடல் வருமாறு:

"வார்ந்து சொரியும் கண்ணருவி
மயிர்க்கால் தோறும் வரும்புளகம்
ஆர்ந்த மேனிப் புறம்பலைப்ப
அன்பு கரைந்தென் புள்ளலைப்ப
சேர்ந்த நயனப் பயன்பெற்றுத்
திளைப்பத் திருவே கம்பர்தமை
நேர்ந்த மனத்தில் உறவைத்து
நீடும் பதிகம் பாடுவார்."

வார்ந்து - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் தாரை தாரையாக அமைந்து. சொரியும் - பொழியும். கண் - தம்முடைய கண்களிலிருந்து; ஒருமை பன்மை மயக்கம். அருவி - மலையிலிருந்து குதிக்கும் அருவியைப் போல வழியும் நீர்; உவம ஆகு பெயர். மயிர்க்கால் தோறும் - தம்முடைய திருமேனியில் உள்ள ஒவ்வொரு மயிர்க் காலிலும். வரும் - உண்டாகும். புளகம் - புளகாங்கிதம்; மயிர்க்கூச்சு. ஆர்ந்த - நிறைந்திருந்த. மேனி - தம்முடைய திருமேனிக்கு. ப்: சந்தி. புறம்பு - வெளியிடங்களில்; ஒருமை பன்மை மயக்கம். அலைப்ப - நீர் அலைகளைப் போல வழிய. அன்பு - பக்தியினால். கரைந்து என்பு - தம்முடைய திருமேனியில் உள்ள எலும்புகளுக்கு; ஒருமை பன்மை மயக்கம். உள் - உள்ளே சென்று. அலைப்ப - அலைபாயச் செய்ய. சேர்ந்த - தம்மிடம் சேர்ந்துள்ள. நயனப்பயன் - திருவுள்ளத்தில் திருவிழிகளால் பெற்ற பிரயோசனத்தை. பெற்று - அந்த நாயனார் அடைந்து. த்: சந்தி. திளைப்ப - இன்பத்தை அடையுமாறு. த்: சந்தி. திருவேகம்பர்தமை - அழகிய ஏகாம்பரேசுவரரை. நேர்ந்த - தம்மிடம் சேர்ந்துள்ள. மனத்தில் - திருவுள்ளத்தில். உறவைத்து - ஏகாம்பரேசுவரரைப் பதியுமாறு வைத்துக் கொண்டு. நீடும் - நெடுங்காலமாக விளங்கும். பதிகம் - ஒரு திருப்பதிகத்தை. பாடுவார் - அந்த நாயனார் பாடியருளுபவரானார்.

பிறகு வரும் 324-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் ''கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை'' என்று தொடங்கி அந்த ஏகாம்பரேசுவரரைப் புகழ்தல் ஆகிய இனிய சுவையைப் பெற்ற செய்யுட் சொற்களைக் கொண்ட மாலையாகிய ஒரு

திருப்பதிகத்தைப் அந்த நாயனார் பாடியருளிய பிறகு பகைவர்களாகிய தாரகாட்சன், வித்யுன்மாலி, வாணன் என்னும் மூன்று அசுரர்களுக்கு உரிய பறக்கும் கோட்டைகளாகிய மூன்று புரங்களை எரித்தருளியவரும், இடப வாகனத்தை ஓட்டுபவரும், வெண்மையான பற்களைப் பெற்ற பாம்புகளாகிய மாலைகளை அணிந்த வரும் ஆகிய ஏகாம்பரேசுவரருடைய திருக்கோயிலுக்குள் இருக்கும் அழகிய முற்றத்தினுடைய வெளிப் பக்கத்தை அந்த நாயனார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

"'கரவாடும் வன்னெஞ்சர்க்
கரியானை' என்றெடுத்துப்
பரவாய சொல்மாலைத்
திருப்பதிகம் பாடியபின்
விரவார்தம் புரம்எரித்த
விடையவனார் வெள்ளெயிற்றின்
அரவாரம் புனைந்தவர்தம்
திருமுன்றிற் புறத்தணைந்தார்."

'கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை' என்று - 'கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானை' என. எடுத்து - அந்தத் திருநாவுக்கரசு நயானார் தொடங்கி. ப்: சந்தி. பரவு - அந்த ஏகாம்பரேசுவரரைப் புகழ்தல்; முதல் நிலைத் தொழிற் பெயர். ஆய - ஆகிய. சொல் - இனிய சுவையைப் பெற்ற செய்யுட் சொற்களைக் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். மாலை - மாலையாகிய. த்: சந்தி. திருப்பதிகம் - ஒரு திருப்பதிகத்தை. பாடிய - அந்த நாயனார் பாடியருளிய. பின் - பிறகு. விரவார் தம் - பகைவர்களாகிய தாரகாட்சன், வித்யுன்மாலி, வாணன் என்னும் மூன்று அசுரர்களுக்கு உரிய; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசை நிலை. புரம் - பறக்கும் கோட்டைகளாகிய மூன்று புரங்களை; ஒருமை

பன்மை மயக்கம். எரித்த - எரித்தருளியவரும்; வினையாலணையும் பெயர். விடையவனார் - இடபவாகனத்தை ஓட்டுபவரும்; வினையாலணையும் பெயர். வெண் - வெண்மையாகிய. எயிற்றின் - பற்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். அரவு - பாம்புகளாகிய; ஒருமை பன்மை மய்ககம். ஆரம் - மாலைகளை; ஒருமை பன்மை மயக்கம். புனைந்தவர் தம் - அணிந்தவருமாகிய ஏகாம்பரேசுவரருடைய. தம்: அசைநிலை. திருமுன்றில் - திருக் கோயிலுக்கு முன்னால் விளங்கும் அழகிய முற்றத்தினுடைய. முன்றில் - இல்முன்; முன் பின்னாகத் தொக்க தொகை. புறத்து - வெளிப் பக்கத்தை. அணைந்தார் - அந்த நாயனார் அடைந்தார்.

இந்த நாயனார் பாடியருளிய 'மனத்துள் வைத்த திருப்பதிகத்தில்' வரும் இறுதிப் பாசுரம் வருமாறு:

"அடுத்தானை உரித்தானை அருச்சுனற்குப் பாசுபதம்
கொடுத்தானைக் குலவரையே சிலையாகக் கூரம்பு
தொடுத்தானைப் புரமெரியக் கனைமல்கு கயிலாயம்
எடுத்தானைத் தடுத்தானை என்மனத்தே வைத்தேனே."

பிறகு வரும் 325-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் தம்முடைய திருக்கரங்களால் அமைந்த உழவாரத் திருத் தொண்டினையும் வேறு பல திருத் தொண்டுகளையும் அதிகமாக மிக்கு வளரும் விருப்பத்தோடும் புரிந்து கொண்டே எல்லாச் செந்தமிழ் மொழியில் அமைந்த மாலையாகிய ஒரு திருப்பதிகத்தையும் அந்த நாயனார் பாடியருளியமையைப் போலக் கரிய நிறம் அமைந்த திருக்கழுத்தைப் பெற்றவராகிய கச்சித் திருமயானத்தில் உள்ள மயானேசுவரர் திருக்கோயிலை அந்த நாயனார்

வலமாக வந்து உண்மையாகிய பேராவல் உண்டாக அந்த மயானேசுவரரை வணங்கி விட்டு விருப்பத்தோடு காஞ்சீபுரத்தில் அந்த நாயனார் தங்கிக் கொண்டிருக்கும் காலத்தில்.' பாடல் வருமாறு:

"கையார்ந்த திருத்தொண்டு
கழியமிகும் காதலொடும்
செய்யாநின் றேஎல்லாச்
செந்தமிழ்மா லையும்பாடி
மையார்ந்த மிடற்றார்திரு
மயானத்தை வலம்கொண்டு
மெய்யார்வம் உறத்தொழுது
விருப்பினொடு மேவும்நாள்."

இந்தப் பாடல் குளகம். கை - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் தம்முடைய திருக்கரங்களால்; ஒருமை பன்மை மயக்கம். ஆர்ந்த - அமைந்த. திருத்தொண்டு - உழவாரத் திருத் தொண்டினையும் வேறுபல திருத் தொண்டுகளை யும்; ஒருமை பன்மை மயக்கம். கழிய - அதிகமாக. மிகும் - மிக்கு வளரும். காதலொடும் - விருப்பத்தோடும். செய்யா நின்றே - புரிந்து கொண்டே. எல்லாச் செந்தமிழ் - எல்லாச் செந்தமிழ் மொழியில் அமைந்த. மாலையும் - மாலையாகிய ஒரு திருப்பதிகத்தையும். பாடி - அந்த நாயனார் பாடியருளி. மை - மையைப் போல. ஆர்ந்த - கரிய நிறம் அமைந்த. மிடற்றர் - திருக்கழுத்தைப் பெற்றவராகிய. திருமயானத்தை - கச்சித்திருமயானத்தில் உள்ள மயானேசுவரர் திருக்கோயிலை; இட ஆகு பெயர். வலம் கொண்டு - அந்த நாயனார் வலமாக வந்து. மெய் - உண்மையாகிய. ஆர்வம் - பேராவல். உற - உண்டாக. த்: சந்தி. தொழுது - அந்த மயானேசுவரரை வணங்கி விட்டு. விருப்பினொடு - விருப்பத்தோடு. மேவும் - காஞ்சீபுரத்தில் அந்த நாயனார் தங்கிக் கொண்டிருக்கும். நாள் - காலத்தில்.

பிறகு வரும் 326-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் சீர்த்தி வளர்ந்து வரும் திருமதில் சுற்றியுள்ள காஞ்சீ மாநகரத்தில் உள்ள திருமேற்றளி முதலாக இருக்கும் கங்கையாற்றினுடைய புனல் தங்கியிருக்கும் சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற் பெற்றவராகிய சிவபெருமானார் எழுந்தருளித் தங்கியிருக்கும் திருக்கோயில்களுக்கு அந்த நாயனார் எழுந்தருளி பேராவல் தமக்கு உண்டாகத் திருமேற்றளி நாதரைத் தரையில் விழுந்து வணங்கி விட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு அந்தத் திருமேற்றளி நாதரைத் துதித்துவிட்டு தாம் ஆராய்ந்து அமைத்த செந்தமிழ் மொழியில் அமைந்த செய்யுட் சொற்களாகிய மலர்களால் அமைதியைப் பெற்ற மாலைகளாகிய பல திருப்பதிகங்களை அந்தத் திருமேற்றளி நாதருக்கு அணிந்து விட்டுத் தமக்குத் தக்கவையாக இருக்கும் உழவாரத் திருத் தொண்டினையும் வேறு பல திருத்தொண்டுகளையும் புரிந்து கொண்டு காஞ்சீபுரத்தில் தங்கிக் கொண்டிருந்தார்.' பாடல் வருமாறு:

"சீர்வளரும் மதிற்கச்சி
நகர்த்திருமேற் றளிமுதலாம்
நீர்வளரும் சடையவர்தாம்
நிலவியுறை ஆலயங்கள்
ஆர்வமுறப் பணிந்தேத்தி
ஆயந்ததமிழ்ச் சொல்மலரால்
சார்வுறுமா லைகள்சாத்தித்
திருத்தொண்டு செய்திருந்தார்."

சீர் - சீர்த்தி. வளரும் - வளர்ந்து வரும். மதில் - திருமதில் சுற்றியுள்ள. கச்சிநகர் - காஞ்சி மாநகரத்தில் உள்ள. த்: சந்தி. திருமேற்றளி முதலாம் - திருமேற்றளி

முதலாக இருக்கும். நீர் - கங்கையாற்றின் புனல். வளரும் - தங்கியிருக்கும். சடையவர் தாம் - சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற்பெற்றவராகிய சிவபெருமானார். தாம்: அசைநிலை. நில்வி - எழுந்தருளி. உறை - சிவபெருமானார் எழுந்தருளியிருக்கும். ஆலயங்கள் - திருக்கோயில்களுக்கு அந்த நாயனார் எழுந்தருளி. ஆர்வம் - பேராவல். உற - தமக்கு உண்டாக. ப்: சந்தி. பணிந்து - திருமேற்றளி நாதரைத் தரையில் விழுந்து வணங்கி விட்டு. ஏத்தி - பிறகு 'தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு. ஆய்ந்த - தாம் ஆராய்ந்து அமைத்த. தமிழ் - செந்தமிழ் மொழியில் அமைந்த. ச்: சந்தி. சொல் - செய்யுட் சொற்களாகிய; ஒருமை பன்மை மயக்கம். மலரால் - மலர்களால்; ஒருமை பன்மை மயக்கம். சார்வுறு - அமைதியைப் பெற்ற. மாலைகள் - மாலைகளாகிய பல திருப்பதிகங்களை. சாத்தி - அந்தத் திருமேற்றளி நாதருக்கு அணிந்து விட்டு. த்: சந்தி. திருத்தொண்டு - தமக்கு ஏற்றவையாகிய உழவாரத் திருத்தொண்டினையும் வேறு பல திருத் தொண்டுகளையும்; ஒருமை பன்மை மயக்கம். செய்து - புரிந்து கொண்டு. இருந்தார் - அந்த நாயனார் காஞ்சீபுரத்தில் தங்கிக் கொண்டு இருந்தார்.

திருமேற்றளி: இது காஞ்சீபுரத்தில் உள்ள ஒரு திருக்கோயில். இது தொண்டை நாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவர் திரு மேற்றளி நாதர். அம்பிகை காமாட்சி அம்மை. தீர்த்தம் விஷ்ணு தீர்த்தம். இந்தத் திருக் கோயில் காஞ்சீபுரத்திற்கு மேற்குத் திசையில் உள்ள பகுதியாகிய பிள்ளைப் பாளையத்தில் உள்ளது. திருமால் சிவகாரூபத்தை அடையும் பொருட்டுத் தவத்தைப் புரிந்து கொண்டிருந்து திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு

திருப்பதிகத்தால் சிவ சாபத்தைப் பெற்ற தலம் இது. இங்கே இரண்டு சந்நிதிகள் உள்ளன. ஒன்று ஓதவுருகீசர் சந்நிதி. அந்த ஈசர் திருமாலினுடைய உருவத்தோடு இருந்தவர். திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடி யருளிய ஒரு பாசுரத்தால் சிவலிங்கப் பெருமானுடைய திருவுருவமாய் உருகினார். மற்றொன்று திருமேற்றளி ஈசுவரர் சந்நிதி. இந்தக் கோயில் உள்ள தெருவின் முனையில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருடைய திருக்கோயில் உள்ளது. அதற்கு அருகில் அவர் பாடியருளிய பாசுரத்தை உற்றுக் கேட்டருளிய முத்தீசுவரருடைய திருக் கோயில் உள்ளது. திருக்கச்சி மேற்றளியைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திருநேரிசை வருமாறு:

"விண்ணிடை விண்ண வர்கள்
விரும்பி வந்திறைஞ்சி வாழ்த்தப்
பண்ணிடைச் சுவையின் மிக்க
கின்னரம் பாடக் கேட்பார்
கண்ணிடை மணியின் ஒப்பார்
காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
எண்ணிடை எழுத்தும் ஆனார்
இலங்குமேற் றளிய னாரே."

இந்தத் திருப்பதிகத்தில் இறுதியில் வரும் திருநேரிசை வருமாறு:

"தென்னவன் மலை எடுக்கச்
சேயிழை நடுங்கக் கண்டு
மன்னவன் விரலால் ஊன்ற
மணிமுடி நெரிய வாயால்
கன்னலின் கீதம் பாடக்
கேட்டவர் காஞ்சி தன்னுள்

இன்னவற் கருளிச் செய்தார்
இலங்குமேற் றளிய னாரே."

இந்தத் தலத்தைப் பற்றி நட்டராகப் பண்ணில் சுந்தரமூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"நிலையாய் நின்னடியே
நினைந்தேன் நினைத்தலுமே
தலைவா நின்னினையப்
பணித்தாய் கலமொழிந்தேன்
சிலையார் மாமதில்சூழ்
திருமேற் றளிஉறையும்
மலையே உன்னையல்லால்
மகிழ்ந்தேத்த மாட்டேனே."

பிறகு வரும் 327-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அந்தக் காஞ்சி மாநகரத்தில் அவ்வண்ணம் வீற்றிருந்து தங்கிக் கொண்டிருக்கும் காலத்தில் புகழோடு நிலைபெற்று விளங்கும் திருமாற்பேற்றுக்கு எழுந்தருளி வந்து அடைந்து மணிகண்டேசுவரரை வணங்கி விட்டுச் செந்தமிழ் மொழியில் அமைந்த ஒரு திருப்பதிகத்தை அந்த நாயனார் பாடியருளித் தம்முடைய தலையின் மேல் பிறைச் சந்திரனை அணிந்தவராகிய சிவபெருமானார் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் தலங்கள் பலவற்றிற்கும் எழுந்தருளி அந்தத் தலங்களில் கோயில் கொண்டிருக்கும் சிவபெருமான்களை வணங்கி விட்டுக் காஞ்சி மாநகரத்தைத் தம்முடைய திருவுள்ளத்தில் தொடர்ச்சியாக வந்துள்ள பெரியதாக இருக்கும் விருப்பத்தோடு அடைந்து அந்தக் காஞ்சீபுரத்தை அந்த நாயனார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

"அந்நகரில் அவ்வண்ணம்
அமர்ந்துறையும் நாளின்கண்
மன்னுதிரு மாற்பேறு
வந்தணைந்து தமிழ்பாடிச்
சென்னிமிசை மதிபுனைவார்
பதிபலவும் சென்றிறைஞ்சித்
துன்னினார் காஞ்சியினைத்
தொடர்ந்தபெரும் காதலினால்."

அந்நகரில் - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அந்தக் காஞ்சி மாநகரத்தில். அவ்வண்ணம் - அவ்வாறு. அமர்ந்து - வீற்றிருந்து. உறையும் - தங்கிக் கொண்டிருக்கும். நாளின் கண் - காலத்தில். மன்னு - புகழோடு நிலை பெற்று விளங்கும். திருமாற்பேறு - திருமாற்பேற்றுக்கு. வந்து - எழுந்தருளி வந்து. அணைந்து - அடைந்து. தமிழ் - செந்தமிழ் மொழியில் அமைந்த. பாடி - ஒரு திருப்பதிகத்தை அந்த நாயனார் பாடியருளி. ச்: சந்தி. சென்னிமிசை - தம்முடைய தலையின் மேல். மதி - பிறைச் சந்திரனை. புனைவார் - அணிந்தவராகிய சிவ பெருமானார். பதி - எழுந்தருளியிருக்கும் தலங்கள்; ஒருமை பன்மை மயக்கம். பலவும் - பலவற்றிற்கும். சென்று - எழுந்தருளி. இறைஞ்சி - அந்தத் தலங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்களை வணங்கிவிட்டு. த்: சந்தி. காஞ்சியினை - காஞ்சி மாநகரத்தை. த்: சந்தி. தொடர்ந்த - தம்முடைய திருவுள்ளத்தில் தொடர்ச்சியாக வந்துள்ள. பெரும் - பெருகி எழும். காதலினால் - விருப்பத்தோடு; உருபு மயக்கம். துன்னினார் - அடைந்தார்.

திருமாற்பேறு: இது தொண்டை நாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவருடைய

திருநாமங்கள் மால்வணங்கீசுவரர், மணிகண்டேசுவரர் என்பவை. அம்பிகையின் திருநாமங்கள் கருணை நாயகி, அஞ்சனாட்சி அம்மை என்பவை. இது பாலாற்றங்கரையில் உள்ளது. இந்தத் தலம் காஞ்சீபுரத்திலிருந்து வடக்கே பளூர் என்னும் ஊர் வகையிலும் சென்று அங்கிருந்து தென் மேற்குத் திசையில் 2½ மைல் தூரம் சென்றால் அந்த இடத்தில் உள்ளது. வடமொழியில் இந்தச் சிவத்தலத்திற்கு 'ஹரிச்சக்கரபுரம்' என்று பெயர். குபன் என்னும் மன்னனுக்காகத் திருமால் ததீசி முனிவரோடு போர் புரியத் தம்முடைய சக்கராயுதம் அந்த முனிவருடைய வஜ்ரத்தைப் போன்ற திருமேனியில் பட்டு தன்னுடைய வாய் மடிந்து விட்டமையால் வேறு ஒரு சக்ராயுதத்தைப் பெற எண்ணி, சலந்தராசுரனைக் கொன்ற சக்ராயுதம் சிவ பெருமானிடத்தில் இருப்பதைத் தெரிந்து கொண்டு அந்த ஆயுதத்தைப் பெறுவதற்காக அந்தத் திருமால் இந்தத் தலத்துக்கு எழுந்தருளிவந்து மால்வணங்கீசுவரரை ஒவ்வொருநாளும் ஆயிரம் செந்தாமரை மலர்களைக் கொண்டு அருச்சனை புரிந்து வந்தார். மால்வணங்கீசுவரர் அந்தத் திருமாலினுடைய பக்தியின் ஆற்றலைத் தெரிந்து கொள்ளும் பொருட்டு ஒரு நாள் ஒரு தாமரை மலரை மறைத்தருள, அந்தத் திருமால் சகசிரநாம அருச்சனை புரியும் காலத்தில் ஒரு திருநாமத்துக்குத் தாமரை மலர் குறைவாக இருப்பதைக் கண்டு வருந்தித் தம்முடைய கண்ணையே பறித்து அந்த மால்வணங்கீசுவரருக்கு அணிந்து விட்டுத் தாம் புரிந்த பூசையை நிறைவேற்றினார். அந்தச் சமயத்தில் மால்வணங்கீசர் வெளிப்பட்டு எழுந்தருளி திருமாலுக்கு 'சுதரிசம்' என்னும் சக்கரா யுதத்தையும் தம்முடைய கண்ணைப் பிடுங்கி அருச்சனை புரிந்தமையினால் 'பதுமாட்சன்' என்னும் திருநாமத்தையும் வழங்கியருளினார். இந்தச் சிவத்தலத்தில் ஒரு கணநேரம்

தங்கியிருந்தவர்களுக்கும் முக்தியை வழங்க வேண்டு மென்று திருமால் அந்த மால்வணங்கீசுவரரைக் கேட்டுக் கொண்டார். அவ்வாறே அந்த மால்வணங்கீசுவரர் திருவருளை வழங்கி விட்டு மறைந்தருளினார். இது சந்திரனும் பூசித்த தலம். ''மன்னிமாலொடு சோமன் பணி செய, மன்னும் மாற் பேற்றடிகளை'' என்று தேவாரத்தில் வருவதைக் காண்க. இது இக் காலத்தில் திருமால்பூர் என வழங்கும். இந்தத் தலத்தைப் பற்றிப் பழந்தக்கராகப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

''சால மாமலர் கொண்டு சரணென்று
மேலை யார்கள் விரும்புவர்
மாலி னார்வழி பாடுசெய் மாற்பேற்று
நீல மார்கண்ட நின்னையே.''

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திரு விருத்தம் வருமாறு:

''மாணிக் குயிர்பெறக் கூற்றை
உதைத்தன மாவலிபால்
காணிக் கிரந்தவன் காண்டற்
கரியன கண்ட தொண்டர்
பேணிக் கிடத்துப் பரவப்
படுவன பேர்த்து மஃதே
மாணிக்கம் ஆவன மாற்பே
றுடையான் மலரடியே.''

அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருக்குறுந் தொகை வருமாறு:

''ஆலத் தார்நிழ லில்அறம் நால்வர்க்குக்
கோலத் தால்உரை செய்தவன் குற்றமில்

மாலுக் காரருள் செய்தவன் மாற்பேறு
ஏலத் தான்தொழு வார்க்கிடர் இல்லையே.''

அந்த நாயனார் பாடியருளிய மற்றொரு திருக்குறுந்தொகை வருமாறு:

''ஏதும் ஒன்றும் அறிவில ராயினும்
ஓதி அஞ்செழுத் தும்முணர் வார்கட்குப்
பேதம் இன்றி அவரவர் உள்ளத்தே
மாதும் தாமும் மகிழ்வர்மாற் பேறரே.''

அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''பிறப்பானைப் பிறவாத பெருமை யானைப்
பெரியானை அரியானைப் பெண்ஆண் ஆய
நிறத்தானை நின்மலனை நினையா தாரை
நினையானை நினைவோரை நினைவோன் தன்னை
அறத்தானை அறவோனை ஐயன் தன்னை
அண்ணல்தனை நண்ணரிய அமரர் ஏத்தும்
திறத்தானைத் திகழொளியைத் திருமாற் பேற்றெம்
செம்பவளக் குன்றினைச்சென் றடைந்தேன் நானே.''

பிறகு வரும் 328-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் காஞ்சிபுரத்திற்கு எழுந்தருளி ஏகாம்பரேசுவரரை, ''ஏகம்பன் காண் அவன் என் எண்ணத்தான்'' என்ற சொற்றொடர் வரும் ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளி அந்த ஏகாம்பரேசுவரரை வணங்கி வாழ்த்திவிட்டுத் தன்னுடைய வாமபாகத்தில் பெண்ணாகிய பார்வதி தேவியினுடைய திருவுருவத்தைப் பெற்றவனை, பசுமையாகிய கண்களைப் பெற்ற இடபத்துவசத்தை உயர்த்திப் பிடித்தவனை, பாம்புகளைத் தன்னுடைய அணிகலன்களாக மகிழ்ந்து அணிந்து

கொண்டவனை, அழகு பெருகி எழும் விபூதியைத் தன்னுடைய திருமேனி முழுவதும் பூசிக்கொண்ட அழகைப் பெற்றவனை அடைந்து அவனை வணங்கி விட்டு அந்த நாயனார் ஆனந்தத்தை அடைந்தார்.' பாடல் வருமாறு:

"'ஏகம்பன் காண் அவன்என்
எண்ணத்தான்' எனப் போற்றிப்
பாகம் பெண் உருவானைப்
பைங்கண் விடை உயர்த்தானை
நாகம் பூண் உகந்தானை
நலம் பெருகும் திருநீற்றின்
ஆகம் தோய் அணியானை
அணைந்து பணிந் தின்புற்றார்."

'ஏகம்பன்காண் அவன் என்எண்ணத்தான்' என - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் காஞ்சீபுரத்திற்கு எழுந்தருளி ஏகாம்பரேசுவரரை 'ஏகம்பன்காண் அவன் என் எண்ணத்தான்' என்று வரும். என: இடைக்குறை. ப்: சந்தி. போற்றி - ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளி அந்த ஏகாம்பரேசுவரரை வாழ்த்தி வணங்கிவிட்டு. ப்: சந்தி. பாகம் - தன்னுடைய வாமபாகத்தில். பெண் - பெண்ணாகிய காமாட்சி அம்மையினுடைய. உருவானை - திருவுருவத்தைப் பெற்றவனை. ப்: சந்தி. பைம் - பசுமையாக இருக்கும். கண் - கண்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். விடை - இடபத்தை. உய்ர்த்தானை - உயர்த்திப் பிடித்த அந்த ஏகாம்பரேசுவரனை. நாகம் - பாம்புகளை; ஒருமை பன்மை மயக்கம். பூண் - அணிகலன்களாக; ஒருமை பன்மை மயக்கம். உகந்தானை - மகிழ்ந்து அணிந்து கொண்ட அந்த ஈசுவரனை. நலம் - அழகு. பெருகும் - பெருகி எழும். தீருநீற்றின் - விபூதியை.

இன்: வேண்டாவழி வந்த சாரியை. ஆகம் - தன்னுடைய திருமேனி முழுவதும். தோய் - பூசிக் கொண்ட. அணியானை - அழகைப் பெற்ற அந்த ஈசுவரனை. அணைந்து - அடைந்து. பணிந்து - வணங்கிவிட்டு. இன்புற்றார் - ஆனந்தத்தை அடைந்தார்.

''ஏகம்பன் காண் அவன்என் எண்ணத்தானே'' என்ற சொற்றொடர் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய இரண்டு திருப்பதிகங்களில் உள்ள திருத் தாண்டகங்களில் வருகின்றன. அவற்றுள் ஒரு திருப்பதிகத்தில் வரும் ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''கூற்றுவன்காண் கூற்றுவனைக் குமைத்த கோன்காண்
குவலயன்காண் குவலயத்தின் நீரா னான்காண்
காற்றவன்காண் கனலவன்காண் சலிக்கும் மின்காண்
கனபவளச் செம்மேனி கலந்த வெள்ளை
நீற்றவன்காண் நிலாவூரும் சென்னி யான்காண்
நிறையார்ந்த புனர்கங்கை நிமிர்ச டைமேல்
ஏற்றவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவன்என் எண்ணத் தானே.''

மற்றொரு திருப்பதிகத்தில் வரும் ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

'''நேசன்காண் நேசர்க்கு நேசம் தன்பால்
இல்லாத நெஞ்சத்து நீசர் தம்மைக்
கூசன்காண் கூசாதார் நெஞ்சு தஞ்சே
குடிகொண்ட குழகன்காண் அழகார் கொன்றை
வாசன்காண் மலைமங்கை பங்கன் தான்காண்
வானவர்கள் எப்பொழுதும் வணங்கி ஏத்தும்
ஈசன்காண் ஈழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவன்என் எண்ணத் தானே.''

அடுத்து வரும் 329-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் திருக்கச்சி ஏகம்பமாகிய காஞ்சீபுரத்தில் திருக்கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் ஏகாம்பரேசுவரரை வணங்கித் துதித்துவிட்டு நெருக்கத்தைப் பெற்ற தம்முடைய தலையின் மேல் உள்ள சடாபாரத்தில் பிறைச் சந்திரனை அணிந்தவராகிய சிவபெருமானார் நெடுங்காலமாகத் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவத்தலங் களுக்கு எழுந்தருளி அந்தத் தலங்களில் எழுந்தருளி யிருக்கும் சிவபெருமான்களை வணங்குவதற்கு எண்ணுவாராகி பலாப் பழங்களில் உள்ள சிவப்பாக இருக்கும் சுளைகள் சொரியும் தேன் பாய்ந்து வயல்களில் பயிர்களை விளையச் செய்யும் தொண்டை நாட்டுக்கு அந்த நாயனார் எழுந்தருளி பருத்தலைப் பெற்ற உறுதியாகிய துதிக்கையைக் கொண்ட ஆண்யானையை உரித்த தோலைப் போர்த்துக் கொண்டவராகிய வேத கிரீசுவரர் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருக்கழுக்குன்றத்தினுடைய பக்கத்தை அந்த நாயனார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

"திருக்கச்சி ஏகம்பம்
பணிந்தேத்தித் திங்களார்
நெருக்கச்செஞ் சடைக்கணிந்தார்
நீடுபதி தொழநினைவார்
வருக்கைச்செஞ் சுளைபொழிதேன்
வயல்விளைக்கும் நாட்டிடைப்போய்ப்
பருக்கைத்திண் களிற்றுரியார்
கழுக்குன்றின் பாங்கணைந்தார்."

திருக்கச்சி ஏகம்பம் - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் திருக் கச்சி ஏகம்பகமாகிய காஞ்சீபுரத்தில். பணிந்து - திருக்

கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் ஏகாம்பரேசு வரரை வணங்கி. ஏத்தி - துதித்து விட்டு. த்: சந்தி. திங்கள் - பிறைச் சந்திரனை. ஆர் நெருக்க - நெருக்கத்தைப் பெற்ற. ச்: சந்தி. சடைக்கு - தம்முடைய தலையின் மேல் உள்ள சடாபாரத்தில்; உருபு மயக்கம். அணிந்தார் - அணிந்த வராகிய சிவபெருமானார். நீடு - நெடுங்காலமாகத் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும். பதி - சிவத்தலங்களுக்கு எழுந்தருளி; ஒருமை பன்மை மயக்கம். தொழ - அந்தத் தலங்களில் எழுந்தருளியிருக்கும் சிவபெரு மான்களை வணங்குவதற்கு. நினைவார் - எண்ணுபவராகி; முற்றெச்சம். வருக்கை - பலாப் பழங்களில் உள்ள; ஒருமை பன்மை மயக்கம். ச்: சந்தி. செம் - சிவப்பாக இருக்கும். சுளை - சுளைகள்; ஒருமை பன்மை மயக்கம். பொழிதேன் - சொரியும் தேன். வயல் - வயல்களில் உள்ள சம்பா நெற்பயிர்களையும் குறுவை நெற்பயிர்களையும் வேறுவகையாகிய பயிர்களையும்; இடஆகு பெயர். வயல்: ஒருமை பன்மை மயக்கம். விளைக்கும் - நன்கு விளையுமாறு செய்யும். நாட்டிடை - தொண்டை நாட்டிற்கு; உருபு மயக்கம். ப்: சந்தி. போய் - அந்த நாயனார் எழுந்தருளி. ப்: சந்தி. பரு - பருத்த. க்: சந்தி. கை துதிக்கையைப் பெற்ற. த்: சந்தி. திண் - உறுதியான. களிற்று - தாருகாவனத்து முனிவர்கள் தம்மைக் கொல்லும் பொருட்டு விடுத்த ஆண் யானையை. உரியார் - உரித்து அதனுடைய தோலைப் போர்வையாகப் போர்த்துக் கொண்டவராகிய வேதகிரீசுவரர். கழுக்குன்றின் - திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் திருக்கழுக் குன்றத்தினுடைய. பாங்கு - பக்கத்தை. அணைந்தார் - அந்த நாயனார் அடைந்தார்.

திருக்கழுக்குன்றம்: இது தொண்டை நாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவர் வேதகிரீசு

வரர். அம்பிகையின் திருநாமங்கள் பெண்ணினல்லாள் அம்மை, மலைச்சொக்க நாயகி என்பவை. தீர்த்தம் சங்க தீர்த்தம் என்னும் திருக்குளம். இது செங்கற்பட்டுக்குத் தென்கிழக்குத் திசையில் 9-மைல் தூரத்தில் உள்ளது. ஒவ்வொரு நாளும் நண்பகலில் இரண்டு கழுகுகள் பறந்து இங்கே வந்து தங்களுக்கு அளிக்கும் அன்னத்தையும் நெய்யையும் உண்டு விட்டு மலையை வலமாகச் சுற்றிக் கொண்டு பறந்து போகும் தலம் இது. இங்கே உள்ள சங்கு தீர்த்தம் என்னும் பெரிய திருக்குளத்தில் ஒவ்வோராண்டும் ஒருமுறை சங்கு உண்டாகும் என்பர். இந்தத் தலத்தில் தங்கி சங்கு தீர்த்தத்தில் நீராடி மலையை வலமாக வருபவர்களுக்கு எந்த வகையான நோயும் இல்லாமல் அகன்றுவிடும் என்பர். மாணிக்கவாசகருக்கு வேதகிரீசுவரர் குருவடிவமாய் எழுந்தருளித் தரிசனம் வழங்கியருளிய தலம் இது.

இந்தத் தலத்தைப் பற்றிக் குறிஞ்சிப் பண்ணில் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் பாடிருயளிய ஒரு பாசுரம் வருமாறு:

"தோடுடை யானொரு காதில்தூய குழைதாழ
ஒடுடை யான்தலை கலனாக இரந்துண்ணும்
நாடுடை யான்நள் ளிருள்ஏம நடமாடும்
காடுடையான் காதல்செய் கோயில்கழுக் குன்றே."

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"மூவிலைவேற் கையானை மூர்த்தி தன்னை
முதுபிணக்கா டுடையானை முதலா னானை
ஆவினிலைந் துகந்தானை அமரர் கோனை
ஆலாலம் உண்டுகந்த ஐயன் தன்னைப்

பூவினின்மேல் நான்முகனும் மாலும் போற்றப்
புணர்வரிய பெருமானைப் புனிதன் தன்னைக்
காவலனைக் கழுக்குன்றம் அமர்ந்தான் தன்னை
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே.''

இந்தத் தலத்தைப் பற்றி நட்டபாடைப் பண்ணில் சுந்தர மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

''நீள நீன்று தொழுமின் நித்தலும் நீதியால்
ஆளும் நம் வினைகள் அல்கி அழிந்திடத்
தோளும் எட்டும் உடைய மாமணிச் சோதியான்
காள கண்டன் உறையும் தண்கழுக் குன்றமே.''

இந்தத் தலத்தைப் பற்றி மாணிக்கவாசகர் குறிப்பிட்ட இடங்கள் வருமாறு:

''கழுக்குன்றதனில் வழுக்காதிருந்தும்.''

*(தீர்த்தத் திருஅகவல், 89)*

''திருக்கழுக்குன்றிற் செல்வா போற்றி.''

*(போற்றித் திருஅகவல், 191)*

மாணிக்கவாசகர் திருக்கழுக் குன்றப் பதிகம் என்ற திருப்பதிகத்தைப் பாடியருளியுள்ளார். அதில்வரும் சில பாசுரங்கள் வருமாறு:

''பிணக்கி லாதபெருந் துறைப்பெரு
மானுன் நாமங்கள் பேசுவார்க்
கிணக்கி லாததோர் இன்பமேவரும்
துன்ப மேதுடைத் தெம்பிரான்
உணக்கி லாததோர் வித்துமேல்வினை
யாமல் என்வினை ஒத்தபின்

கணக்கி லாத்திருக் கோலம்நீவந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே."

"பிட்டு நேர்பட மண்சு மந்த
பெருந்து றைப்பெரும் பித்தனே
சட்ட நேர்பட வந்தி லாத
சழக்க னேன்உனைச் சார்ந்திலேன்
சிட்ட னேசிவ லோக னேசிறு
நாயி னும்கடை யாயஎம்
கட்ட னெனையும் ஆட்சிகொள் வான்வந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே."

"கோல மேனி வராகமேகுண
மாம்பெ ருந்துறைக் கொண்டலே
சீலம் ஏதும் அறிந்தி லாதஎன்
சிந்தை வைத்தசி காமணி
ஞால மேகரி யாக நான்உனை
நச்சி நச்சிட வந்திடும்
கால மேஉனை ஓத நீவந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே."

"பேதம் இல்லதொர் கற்பளித்த
பெருந்து றைப்பெரு வெள்ளமே
ஏத மேபல பேச நீஎனை
ஏதி லார்முனம் என்செய்தாய்
சாதல் சாதல்பொல் லாமை அற்ற
தனிச்ச ரண்சர ணாமெனக்
காத லால்உனை ஓத நீவந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே."

அடுத்து உள்ள 330-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'நெடுங்காலமாகப் புகழ்பெற்று விளங்கும் திருக்கழுக்குன்றத்தில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் திருநடனம் புரிந்தருளுபவராகிய வேதகிரீசு வரருடைய வெற்றிக் கழலைப் பூண்டுகொண்டு விளங்கும் திருவடிகளை அந்தத் திருநாவுக்கரசு நாயனார் பணிந்து விட்டுத் தாம் பாடியருளும் செந்தமிழ் மொழியில் அமைந்த மாலையாகிய ஒரு திருப்பதிகத்தை அந்த வேதகிரீசுவரருக்கு அணிந்து விட்டு அந்தச் சிவத்தலத் திற்குப் பக்கத்தில் உள்ள பல சிவத்தலங்களிலும் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் தம்முடைய தலையில் அணியும் இளமைப் பருவத்தைப் பெற்ற பிறைச்சந்திரனை அணிந்த திருமுடியைப் பெற்ற சிவபெருமான்களை வணங்கி வாழ்த்திவிட்டு மேலே எழுந்தருளி தன்னுடைய பக்கத்தில் பெரியதாக இருக்கும் சமுத்திரத்தைச் சுற்றிப் பெற்ற திருவான்மியூரின் பக்கத்தை அந்த நாயனார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

"நீடுதிருக் கழுக்குன்றில்
நிருத்தனார் கழல்வணங்கிப்
பாடுதமிழ்த் தொடைபுனைந்து
பாங்குபல பதிகளிலும்
சூடும்இளம் பிறைமுடியார்
தமைத்தொழுது போற்றிப்போய்
மாடுபெரும் கடலுடுத்த
வான்மியூர் மருங்கணைந்தார்."

நீடு - நெடுங்காலமாகப் புகழ்பெற்று விளங்கும். திருக்கழுக்குன்றில் - திருக்கழுக்குன்றத்தில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும். நிருத்தனார் - திருநடனம் புரிந்தருளுபவராகிய வேதகிரீசுவரருடைய. கழல் - வெற்றிக்கழலைப் பூண்டு கொண்டு விளங்கும் திருவடி

களை; ஆகு பெயர். வணங்கி - அந்தத் திருநாவுக்கரசு நயானார் பணிந்து விட்டு. ப்: சந்தி. பாடு - தாம் பாடியருளும். தமிழ் - செந்தமிழ் மொழியில் அமைந்த. த்: சந்தி. தொடை - மாலையாகிய ஒரு திருப்பதிகத்தை. புனைந்து - அந்த தேவகிரீசுவரருக்கு அணிந்து விட்டு. பாங்கு - அந்தத் திருக்கழுக்குன்றத்திற்குப் பக்கத்தில் உள்ள. பல பதிகளிலும் - பல சிவத்தலங்களிலும். சூடும் - அணியும். இளம்பிறை - இளமைப் பருவத்தைப் பெற்ற பிறைச் சந்திரனை. முடியார் தமை - அணிந்து கொண்டிருக்கும் திருமுடியைப் பெற்ற சிவ பெருமான்களை; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசை நிலை. த்: சந்தி. தொழுது - அந்த நாயனார் வணங்கி. போற்றி - வாழ்த்திவிட்டு. ப்: சந்தி. போய் - மேலே எழுந்தருளி. மாடு - தன்னுடைய பக்கத்தில். பெரும் - பெரியதாக இருக்கும். கடல் - சமுத்திரத்தை. உடுத்த - சுற்றிப் பெற்ற. வான்மியூர் - திருவான்மியூருக்கு. மருங்கு - பக்கத்தை. அணைந்தார் - அந்த நாயனார் அடைந்தார்.

பிறகு உள்ள 331-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் திருவான்மியூரில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் மருந்தீசரை அடைந்து அந்த ஈசரை வணங்கிவிட்டுப் பக்தியோடும் பெருமையைப் பெற்ற உண்மைகளை எடுத்துரைக்கும் செந்தமிழ் மொழியில் அமைந்த ஒரு திருப்பதிகத்தை அந்த நாயனார் பாடியருளி அந்தப் பக்கத்தில் மானிடப் பிறப்பைப் போக்கித் தந்தருளுபவராகிய சிவ பெருமானார் எழுந்தருளியிருக்கும் பல ஆலயங்களுக்கு அந்த நாயனார் எழுந்தருளி அந்தத் தலங்களில் எழுந்தருளியிருக்கும் சிவ பெருமான்களை வணங்கிவிட்டு, செந்தமிழ் மொழிக்கு அரசராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார் நறுமணம்

நிறைந்திருக்கும் மலர்கள் மலர்ந்துள்ள பலவகையான மரங்கள் வளர்ந்து நிற்கும் பூம் பொழில் சூழ்ந்த திருமயிலாப்பூருக்கு எழுந்தருளிச் சேர்ந்தார்.' பாடல் வருமாறு:

"திருவான்மி யூர்மருந்தைச்
சேர்ந்துபணிந் தன்பினொடும்
பெருவாய்மைத் தமிழ்பாடி
அம்மருங்கு பிறப்பறுத்துத்
தருவார்தம் கோயில்பல
சார்ந்திறைஞ்சித் தமிழ்வேந்தர்
மருவாரும் மலர்ச்சோலை
மயிலாப்பூர் வந்தடைந்தார்."

திருவான்மியூர் - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் திருவான்மியூரில். மருந்தை - திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் மருந்தீசரை; திணைமயக்கம். ச்: சந்தி. சேர்ந்து - அடைந்து. பணிந்து - அந்த மருந்தீசரை வணங்கி விட்டு. அன்பினொடும் - பக்தியோடும். பெரு - பெருமையைப் பெற்ற. வாய்மை - உண்மைகளை எடுத்துரைக்கும்; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தமிழ் - செந்தமிழ் மொழியில் அமைந்த ஒரு திருப்பதிகத்தை; ஆகுபெயர். பாடி - அந்த நாயனார் பாடியருளி. அம்மருங்கு - அந்தப் பக்கத்தில் உள்ள. பிறப்பு - இந்த மானிடப் பிறவியை. அறுத்துத் தருவார் - போக்கித் தந்தருளு பவராகிய சிவபெருமானார். தம்: அசைநிலை. கோயில் பல - பல ஆலயங்களுக்கு அந்த நாயனார். கோயில்: ஒருமை பன்மை மயக்கம். சார்ந்து - எழுந்தருளி. இறைஞ்சி - அந்தத் தலங்களில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் களை வணங்கிவிட்டு. த்: சந்தி. தமிழ் - செந்தமிழ் மொழிக்கு. வேந்தர் - அரசராகிய அந்தத் திருநாவுக்கரசு

நாயனார். மரு - நறுமணம். ஆரும் - நிறைந்திருக்கும். மலர் - மலர்கள் மலர்ந்துள்ள பல வகையான மரங்கள் வளர்ந்து நிற்கும்; ஒருமை பன்மை மயக்கம். அந்த மரங்களாவன: தேக்குமரம், வேங்கைமரம், வாகைமரம், வேப்ப மரம், மகிழமரம், கடப்பமரம், பூவரச மரம், பவள மல்லிகை மரம், வில்வ மரம், மாமரம், நெல்லி மரம், நாவல் மரம், சுரபுன்னைமரம், புலி நகக்கொன்றை மரம், சரக்கொன்றை மரம், ஞாழல் மரம், நுணாமரம், நெட்டிலிங்க மரம், அசோக மரம், விளா மரம் முதலியவை. ச்: சந்தி. சோலை - பூம்பொழில் சூழ்ந்த. மயிலாப்பூர் - திருமயிலாபுரிக்கு. வந்து - அந்த நாயனார் எழுந்தருளி. அடைந்தார் - சேர்ந்தார்.

திருவான்மியூர்: இது தொண்டை நாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவர் மருந்தீசர். அம்பிகை சொக்க நாயகி. இது சைதாப்பேட்டைக்குத் தென்கிழக்குத் திசையில் 4-மைல் தூரத்தில் உள்ளது. வான்மீகி முனிவர் வழிபட்ட தலம் இது. கடற்கரை ஓரத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானார் பால் நிறத்தைக் கொண்ட சுயம்பு மூர்த்தி.

இந்தத் தலத்தைப் பற்றி இந்தளப் பண்ணில் வினாவுரையாகத் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"கரையு லாங்கட லிற்பொலி
சங்கம்வெள் ளிப்பிவன்
திரையு லாங்கழி மீனுக
ளும்திரு வான்மியூர்
உரையு லாம் பொரு
ளாய்உல காளுடை யீர்சொலீர்

வரையு லாமட மாதுடன்
ஆகிய மாண்பதே.''

அந்த நாயனார் கௌசிகப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

''விரையார் கொன்றையினாய்
விடமுண்ட மிடற்றினனே
உரையார் பல்புகழாய்
உமைநங்கையொர் பங்குடையாய்
திரையார் தெண்கடல்சூழ்
திருவான்மி யூர்உறையும்
அரையா உன்னையல்லால்
அடையாதென தாதரவே.''

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திருக்குறுந் தொகை வருமாறு:

''விண்ட மாமலர் கொண்டு விரைந்துநீர்
அண்ட நாயகன் தன்னடி சூழ்மின்கள்
பண்டு நீர்செய்த பாவம் பறைந்திடும்
வண்டு சேர்பொழில் வான்மியூர் ஈசனே.''

பிறகு வரும் 332-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'மலையில் வளரும் மயில்கள் என்று கூறுமாறு மாடங்களின்மேல் மேகங்கள் தவழும் இந்த உலகத்தில் ஓங்கி வளர்ந்து வரும் சீர்த்தியைப் பெற்ற திருமயிலாப் பூரில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சங்கரராகிய கபாலீசுவரருடைய திருவடிகளை அந்தத் திருநாவுக்கரசு நாயனார் பணிந்து விட்டு, புகழ் வளரும் மாலைகளாகிய பல திருப்பதிகங்களை அந்தக் கபாலீசுவரர் அணியுமாறு புரிந்து உழவாரப் படையை ஆளுகிறவராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அலைகள் வளர்ந்து வீசும்

சமுத்திரக் கரையின் வழியாக எழுந்தருளி திருவொற்றி யூரை அந்த நாயனார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

"வரைவளர்மா மயிலென்ன
மாடமிசை மஞ்சாடும்
தரைவளர்சீர்த் திருமயிலைச்
சங்கரனார் தாள்வணங்கி
உரைவளர்மா லைகள்அணிவித்
துழவாரப் படையாளி
திரைவளர்வே லைக்கரைபோய்த்
திருவொற்றி யூர்சேர்ந்தார்."

வரை - மலையில். வளர் - வளரும். மாமயில் - மயில்கள்; ஒருமை பன்மை மயக்கம். என்ன - என்று கூறுமாறு. மாட மிசை - மாடங்களுக்கு மேல்; ஒருமை பன்மை மயக்கம். மஞ்சு - மேகங்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஆடும் - அசைந்து தவழும். தரை - இந்த உலகத்தில். வளர் - ஓங்கி வளர்ந்து வரும். சீர் - சீர்த்தியைப் பெற்ற. த்: சந்தி. திருமயிலை - திருமயிலாப்பூரில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும். ச்: சந்தி. சங்கரனார் - சங்கரராகிய கபாலீசுவரருடைய. சங்கரன் - சுகத்தைச் செய்தருளுபவன். தாள் - திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். வணங்கி - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் பணிந்துவிட்டு. உரை - புகழ். வளர் - வளரும். மாலைகள் - மாலைகளாகிய பல திருப்பதிகங்களை. அணிவித்து - அந்தக் கபாலீசுவரர் அணியுமாறு புரிந்து. உழவாரப் படையாளி - உழவாரப் படையை ஆளுகிற வராகிய அந்தத் திருநாவுக்கரசு நயானார். திரை - அலைகள்; ஒருமை பன்மை மயக்கம். வளர் - வளர்ந்து வீசும். வேலை - சமுத்திரத்தினுடைய. க்: சந்தி. கரை - கரையின் வழியாக. போய் - எழுந்தருளி. த்: சந்தி.

திருவொற்றியூர் - திருவொற்றியூரை. சேர்ந்தார் - அந்த நாயனார் அடைந்தார்.

திருமயிலாப்பூர்: இது தொண்டை நாட்டில் சென்னையில் ஒரு பகுதியாகக் கடற்கரையில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவர் கபாலீசுவரர். அம்பிகையின் திருநாமங்கள் கற்பகாம்பிகை, கற்பக வல்லி அம்மை என்பவை. தீர்த்தம் கபாலி தீர்த்தம் என்னும் திருக்குளம். தலவிருட்சம் புன்னைமரம். இது கற்பகாம்பிகை மயிலின் வடிவத்தை எடுத்துக்கொண்டு கபாலீசுவரரைப் பூசித்த தலம். வாயிலார் நாயனாருடைய திருவவதாரத் தலம் இது. சிவநேசச் செட்டியார் என்பவருடைய புதல்வி பாம்பு கடித்து இறந்து போக அவளை அந்தச் செட்டியார் தகனம் செய்துவிட்டு அவளுடைய எலும்புகளையும் சாம்பலையும் ஒரு குடத்தில் சேர்த்து வைத்திருந்தார். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் மயிலாப்பூருக்கு எழுந்தருளியபோது இந்தச் செய்தியை அறிந்து பூம்பாவைத் திருப்பதிகத்தைப் பாடியருளி அந்தப் பெண்ணை மீட்டும் உயிர் பெறச் செய்தருளிய தலம் இது. திருவள்ளுவர் எழுந்தருளியிருந்த தலமும் இதுவே என்பர். அவருக்கு ஒரு திருக்கோயில் இங்கே உள்ளது.

இந்த ஆலயம் மேற்குப் பார்த்த சுவாமி சந்நிதியை உடையது. கோயிற் பிராகாரத்தில் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாருடைய திருவுருவமும், பூம்பாவையி னுடைய வடிவமும் உள்ளன. கபாலி தீர்த்தம் என்னும் திருக்குளம் ஆலயத்துக்கு மேற்குத் திசையில் உள்ளது. அந்தப் பூம்பாவைத் திருப்பதிகத்தில் வரும் ஒரு பாசுரம் வருமாறு:

"மட்டிட்ட புன்னையங் காலை மடமயிலைக்
கட்டிட்டம் கொண்டான் கபாலீச் சுரமமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பில் உருத்திரம் பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்."

அந்தப் பூம்பாவைத் திருப்பதிகத்தில் வரும் மற்றொரு பாசுரம் வருமாறு. இந்தத் திருப்பதிகம் சீகாமரப் பண்ணில் அமைந்தது.

"மைப்பயந்த ஒண்கண் மடநல்லார் மாமயிலைக்
கைப்பயந்த நீற்றான் கபாலீசசரம மர்ந்தான்
ஐப்பசி ஓண விழாவும் அருந்தவர்கள்
துய்ப்பனவும் காணாதே போதியோ பூம்பாவாய்."

பிறகு உள்ள 333-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'திருவொற்றியூராகிய செல்வ வளத்தைப் பெற்ற நகரத்தில் உள்ள பிரகாசம் வீசும் அழகிய திருவீதிகளைப் பெருக்கிச் சுத்தமாகச் செய்து நல்ல துவசங்களையும், மலர் மாலைகளையும் கமுகு மரங்களையும் நறுமணம் வீசும் வாழை மரங்களினுடைய வரிசையையும் நட்டு வைத்து தங்கத்தால் செய்த பூரண கும்பங்களையும், தூபக் கால்களையும், விளக்குகளையும் அந்த ஊரில் வாழும் தொண்டர்கள் வைத்து விளங்குமாறு செய்து அந்தத் திருநாவுக்கரசு நாயனாரை எதிர்கொண்டு வரவேற்று அந்த நாயனாரை அழைத்துக் கொண்டு ஆதிபுரீசுவரருக்குப் பரம்பரை பரம்பரையாகத் திருத்தொண்டர்களாக இருக்கும் மக்கள் ஆதி புரீசுவரருடைய திருக்கோயிலுக்குள் நுழைந்தார்கள்.' பாடல் வருமாறு:

"ஒற்றியூர் வளநகரத்
தொளிமணிவீ திகள்விளக்கி
நற்கொடிமா லைகள்பூசம்
நறுங்கதலி நிரைநாட்டிப்

பொற்குடங்கள் தூபங்கள்
தீபங்கள் பொலிவித்து
மற்றவரை எதிர்கொண்டு
கொடுபுக்கார் வழித்தொண்டர்.''

வழி - ஆதிபுரீசுவரருக்குப் பரம்பரை பரம்பரையாக. த்: சந்தி. தொண்டர் - திருத்தொண்டர்களாக இருக்கும் மக்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஒற்றியூர் - திருஒற்றியூராகிய. வள - செல்வவளத்னைப் பெற்ற. நகரத்து - அந்தப் பெரிய தலத்தில். ஒளி - பிரகாசத்தை வீசும். மணி அழகிய. வீதிகள் - திருவீதிகளை. விளக்கி - துடைப்பங்களால் பெருக்கிச் சுத்தம் செய்து. நல் - நல்ல. கொடி - துவசங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். மாலைகள் - மலர் மாலைகளையும். பூசம் - கமுக மரங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். நறும் - நறு மணம் கமழும். கதலி - வாழை மரங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். நிரை - வரிசையை. நாட்டி - வரிசை வரிசையாக நட்டு வைத்து. ப்: சந்தி. பொன் - தங்கத்தால் செய்யப் பெற்ற. குடங்கள் - பூரண கும்பங்களையும். தூபங்கள் - தூபக் கால்களையும்; ஆகு பெயர். தீபங்கள் - திருவிளக்குக்களையும். பொலிவித்து - அந்தத் தொண்டர்கள் வைத்து விளங்குமாறு செய்து. மற்று: அசை நிலை. அவரை - அந்தத் திருநாவுக்கரசு நாயனாரை. எதிர்கொண்டு - எதிர்கொண்டு வரவேற்று. புக்கார் - ஆதிபுரீசுவரருடைய திருக்கோயிலுக்குள் நுழைந்தார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்திருக்கிறது.

திருவொற்றியூர்: இது தொண்டை நாட்டில் சென்னை அருகில் உள்ளது. இங்கே கோயில் கொண்டிருப்

பவருடைய திருநாமங்கள் மாணிக்கத் தியாகர், படம்பக்க நாதர், ஆதிபுரீசுவரர் என்பவை. அம்பிகை வடிவுடை யம்மை. தீர்த்தம் பிரம தீர்த்தம். தல விருட்சம் மகிழ மரம். சென்னைக்கு வடக்குத் திசையில் ஐந்து மைல் தூரத்தில் உள்ளது இந்தச் சிவத்தலம். திருவிளக்குத் திருத்தொண்டு புரிந்து கொண்டு வந்த கலிய நாயனாருடைய திருவவதாரத் தலம் இது. சுந்தர மூர்த்தி நாயனார் சங்கிலி நாச்சியாரைத் திருமணம் புரிந்து கொண்ட தலம் இது. அந்த நாயனார் சங்கிலி நாச்சியாருக்கு மகிழ மரத்தின் கீழ் சத்தியம் செய்து கொடுத்த ஐதிஹ்யத்தைப் புலப்படுத்தி இந்தக் காலத்திலும் மகிழடித் திருவிழா இந்தத் தலத்தில் நடைபெற்று வருகிறது. தியாகப் பெருமானுடைய சந்நிதி சிறப்பைப் பெற்றது. இந்தத் திருக்கோயிலுக்குள் பல சிவலிங்கங்கள் உள்ளன. புற்றிடம் கொண்டாருடைய சந்நிதிக்கு வடக்குத் திசையில் ஆதிலிங்கம் உள்ளது. இந்த லிங்கம் மிகவும் பளபளப்பாக விளங்குகிறது. சுந்தர மூர்த்தி நாயனார், சங்கிலி நாச்சியார் ஆகிய இருவர்களுடைய உற்சவ விக்கிரகங்களும் மணவாளக் கோலத்தோடு விளங்கு கின்றன. பட்டினத்துப் பிள்ளையார் முக்தியை அடைந்த தலம் இதுவே. பட்டினத்துப் பிள்ளையாருக்கும் திருநாவுக் கரசு நாயனாருக்கும் தனித் தனியாகத் திருக்கோயில்கள் இந்தத் தலத்தில் உள்ளன.

இந்தத் தலத்தைப் பற்றிப் பஞ்சமப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"விடையவன் விண்ணும்மண்ணும்
தொழநின்றவன் வெண்மழுவாட்
படையவன் பாய்புலித்தோல்
உடைகோவணம் பல்கரந்தைச்

சடையவன் சாமவேதன்
சசிதங்கிய சங்கவெண்தோ
டுடையவன் ஊனம்இல்லி
உறையும்மிடம் ஒற்றியூரே."

இந்தத் தலத்தைப்பற்றித் திருநாவுக்கரசு நாயனார் திரு நேரிசை, திருவிருத்தம், திருக்குறுந் தொகை, திருத் தாண்டகம் என்பவை அடங்கிய திருப்பதிகங்களைப் பாடியருளியிருக்கிறார். அவற்றுள் ஒரு திரு நேரிசை வருமாறு:

"வெள்ளத்தைச் சடையில் வைத்த
வேதகீ தன்றன் பாதம்
மெள்ளத்தான் அடைய வேண்டின்
மெய்தரு ஞானத் தீயால்
கள்ளத்தைக் கழிய நின்றார்
காயத்துக் கலந்து நின்று
உள்ளத்துள் ஒளியு மாகும்
ஒற்றியூ ருடைய கோவே."

மற்றொரு திருப்பதிகத்தில் வரும் ஒரு திருநேரிசை வருமாறு:

"ஓம்பினேன் கூட்டை வாளா
உள்ளத்தோர் கொடுமை வைத்துக்
காம்பிலா மூழை போலக்
கருதிற்றே முகக்க மாட்டேன்
பாம்பின்வாய்த் தேரை போலப்
பலபல நினைக்கின் றேனே
ஓம்பிநீ உய்யக் கொள்ளாய்
ஒற்றியூ ருடைய கோவே."

அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருவிருத்தம் வருமாறு:

"சொல்லக் கருதிய தொன்றுண்டு
கேட்கில் தொண்ட ரடைந்தார்
அல்லற் படக்கண்டு பின்னென
கொடுத்தி சுவைகொள் முந்நீர்
மல்லற் றிரைச்சங்கம் நித்திலம்
கொண்டு வம்பக் கரைக்கே
ஒல்லைத் திரைகொணர் தெற்றொற்றி
யூருளை உத்த மனே."

அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருக்குறுந் தொகை வருமாறு:

"கூற்றுத் தண்டத்தை அஞ்சிக் குறிக்கொண்மின்
ஆற்றுத் தண்டத் தடக்கும் அரனடி
நீற்றுத் தண்டத்த ராய்நினை வார்க்கெலாம்
ஊற்றுத் தண்டொப்பர் போவொற்றி யூரரே."

அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"கடிய விடையேறி காள கண்டர்
கலையோடு மழுவாளோர் கையில் ஏந்தி
இடிய பலிகொள்ளார் போவார் அல்லர்
எல்லாந்தான் இவ்வடிகள் யாரென் பாரே
வடிவுடைய மங்கையும் தாமும் எல்லாம்
வருவாரை எதிர்கண்டோம் மயிலாப் புள்ளே
கெடிபடுவெண் தலையொன் றேந்தி வந்து
திருவொற்றி யூர்புக்காந் தீய வாறே."

இந்தத் தலத்தைப் பற்றித் தக்கேசிப் பண்ணில் சுந்தர மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"கங்கை தங்கிய சடையுடைக் கரும்பே
கட்டி யேபலர்க்கும் களை கண்ணே

அங்கை நெல்லியின் பழத்திடை அமுதே
அத்தா என்னிடர் ஆர்க்கெடுத் துரைக்கேன்
சங்கும் இப்பியும் சலஞ்சலம் முரல
வயிரம் முத்தொடு பொன்மணி வரன்றி
ஓங்கு மாகடல் ஓதம்வந் துலவும்
ஒற்றி யூரெனும் ஊர்உறை வானே.''

அந்த நாயனார் குறிஞ்சிப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

''பந்தும் கிளியும் பயிலும் பாவை
சிந்தை கவர்வார் செந்தீ வண்ணர்
எந்தம் மடிகள் இறைவர்க் கிடம்போ
உந்தும் திரைவாய ஒற்றி யூரே.''

பிறகு வரும் 334-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனாரும் அந்தத் திருவொற்றியூரில் வீற்றிருந்தருளிய பெருமையைப் பெற்ற மேருமலையாகிய உறுதியைப் பெற்ற வில்லை ஏந்தியவராகிய ஆதிபுரீசருடைய திருக்கோயிலுக்கு முன்னால் உயரமாக நிற்கும் கோபுர வாசலில் நின்று கொண்டு அந்த ஆதி புரீசுவரரை அந்த நாயனார் வணங்கிவிட்டுத் திருக்கோயிலுக்குள் நுழைந்து ஒப்பற்ற சிவஞானத்தைப் பெற்ற திருத்தொண்டர்களோடு தம்முடைய திருவுள்ளத்தில் பக்தியினால் உருக்கத்தை அடைந்து அந்த ஆலயத்தை வலமாக வந்து தம்முடைய அடியவர்களுடைய கருப்பத்தில் புகும் அச்சத்தைப் போக்கி யருளுபவராகிய அந்த ஆதிபுரீசுவரரைத் தம்முடைய திருக்கரங்களைத் தம்முடைய தலையின் மேல் வைத்துக் கூப்பிக் கும்பிட்டு விட்டு மீண்டும் அந்த ஈசுவரரை வணங்கி அவருடைய சந்நிதியில் விழுந்தார்.' பாடல் வருமாறு:

"திருநாவுக் கரசரும்அத்
திருவொற்றி யூர்அமர்ந்த
பெருநாகத் திண்சிலையார்
கோபுரத்தை இறைஞ்சிப்புக்
கொருஞானத் தொண்டருடன்
உருகிவலம் கொண்டடியார்
கருநாமம் தவிர்ப்பாரைக்
கைதொழுது முன்வீழ்ந்தார்."

திருநாவுக்கரசரும் - அந்தத் திருநாவுக்கரசு நாயனாரும். அத்திருவொற்றியூர் - அந்தத் திருவொற்றி யூரில். அமர்ந்த - வீற்றிருந்தருளிய. பெரு - பெருமையைப் பெற்ற. நாக - மேரு மலையாகிய. த்: சந்தி. திண் - உறுதியா கிய. சிலையார் - வில்லை ஏந்தியவராகிய ஆதிபுரீசு வரருடைய. கோபுரத்தை - திருக்கோயிலுக்கு முன்னால் உயரமாக நிற்கும் கோபுர வாசலில் நின்றுகொண்டு; உருபு மயக்கம். இறைஞ்சி - அந்த ஆதிபுரீசுவரரை அந்த நாயனார் வணங்கிவிட்டு. ப்: சந்தி. புக்கு - திருக்கோயிலுக்குள் நுழைந்து. ஒரு - ஒப்பற்ற. ஞான - சிவஞானத்தைப் பெற்ற. தொண்டருடன் - திருத் தொண்டர்களோடு; ஒருமை பன்மை மயக்கம். உருகி - தம்முடைய திருவுள்ளத்தில் பக்தியினால் உருக்கத்தை அடைந்து. வலம்கொண்டு - அந்த ஆலயத்தை வலமாக வந்து. அடியார் - தம்முடைய அடியவர்களுடைய; ஒருமை பன்மை மயக்கம். கரு - ஒரு தாயினுடைய கருப்பத்தில் புகும். நாமம் - அச்சத்தை. தவிர்ப்பாரை - போக்கியருளுபவராகிய அந்த ஆதி புரீசுவரரை. க்: சந்தி. கை - தம்முடைய திருக்கரங்களை; ஒருமை பன்மை மயக்கம். தொழுது - தம்முடைய தலையின் மேல் வைத்துக் கூப்பிக் கும்பிட்டுவிட்டு மீண்டும் அந்த ஈசுவரரை வணங்கி. முன் - அவருடைய சந்நிதியில். வீழ்ந்தார் - தரையில் விழுந்தார்.

பிறகு வரும் 335-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் ஏட்டில் எழுதாத நான்கு வேதங்களையும் வழங்கியருளிய எழுத்தறியும் பெருமானாராகிய அந்த ஆதிபுரீசுவரரை அந்த நாயனார் வணங்கிவிட்டுத் தம்முடைய திருவுள்ளத்தில் பேராவல் உண்டாகத் தரையில் விழுந்து அந்த ஆதிபுரீசுவரரை வணங்கிவிட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு தம்முடைய திருமேனியில் உள்ள உறுப்புக்கள் எல்லாவற்றிலும் முழுதுமாகிய பக்தி பரவசத்தினால் அரும்பிய மயிர்க்கால்களில் தாம் முழுகுமாறு தரையில் விழும் தம்முடைய விழிகளிலிருந்து தாரை தாரையாக நீரைச் சொரிய நடுக்கத்தை அடைந்து விம்மி விம்மி அழுதார்.' பாடல் வருமாறு:

"எழுதாத மறைஅளித்த
எழுத்தறியும் பெருமானைத்
தொழுதார்வம் உறநிலத்தில்
தோய்ந்தெழுந்தே அங்கமெலாம்
முழுதாய பரவசத்தின்
முகிழ்த்தமயிர்க் கால்மூழ்க
விழுதாரை கண்பொழிய
விதிர்ப்புற்று விம்மினார்."

எழுதாத - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் ஏட்டில் எழுதாத. மறை - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங் களையும்; ஒருமை பன்மை மயக்கம். அளித்த - வழங்கி யருளிய. எழுத்தறியும் பெருமானை - எழுத்தறியும் பெருமானாராகிய அந்த ஆதிபுரீசுவரரை; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தொழுது - அந்த நாயனார் வணங்கி விட்டு. ஆர்வம் - பேராவல். உற - உண்டாக. நிலத்தில் -

தரையில். தோய்ந்து - விழுந்து அந்த ஆதிபுரீசுவரரை வணங்கிவிட்டு. எழுந்து - பிறகு தரையிலிருந்து எழுந்து நின்றுகொண்டு. ஏ: அசை நிலை. அங்கம் - தம்முடைய திருமேனியில் உள்ள உறுப்புக்கள்; ஒருமை பன்மை மயக்கம். எலாம் - எல்லாவற்றிலும்; இடைக்குறை. முழுதாய - முழுதுமாகிய. பரவசத்தின் - பக்தி பரவசத்தி னால். முகிழ்த்த - அரும்புகளைப் போல அரும்பிய. மயிர்க்கால் - மயிர்க் கால்களில்; ஒருமை பன்மை மயக்கம். மூழ்க - முழுகுமாறு. விழு - தரையில் விழும். தாரை - தாரையாக வழியும் நீரை; ஆகுபெயர். கண் - தம்முடைய கண்கள்; ஒருமை பன்மை மயக்கம். பொழிய - சொரிய. விதிர்ப்பு உற்று - நடுக்கத்தை அடைந்து. விம்மினார் - அந்த நாயனார் விம்மி அழுதார். எழுதாதமறை - வேதத்திற்கு எழுதாக் கிளவி என்று பெயர் வழங்கும்.

அடுத்து வரும் 336-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார், ''வண்டோங்கும் செங்கமலம்'' என்று தொடங்கித் தம்முடைய திருவுள்ளம் பக்தியினால் உருக்கத்தை அடைய உரிய பண் அமைந்த இனிய சுவையைப் பெற்ற செய்யுட் சொற்கள் அடங்கிய ஒரு திருத்தாண்டகத்தை அந்த நாயனார் பாடியருளி அந்த ஆதி புரீசுவரரைப் புகழ்பவராகி ஆகாயத்திலிருந்து இறங்கிய நீர் ஓடும் கங்கையாற்றைத் தம்முடைய தலையின் மேல் உள்ள சடாபாரத்தில் தங்க வைத்தவராகிய அந்த ஆதிபுரீசுவரருடைய திருவுருவத்தை அந்த நாயனார் தரிசித்துத் தம்முடைய திருவுள்ளத்தில் எழுந்து ஓங்கும் ஆனந்தம் சிறப்பாக அமையத் தம்முடைய கைகளைத் தம்முடைய தலையின் மேல் வைத்துக் கூப்பி அந்த ஈசுவரரைக் கும்பிட்டு விட்டுத் திருக்கோயிலுக்கு வெளியில் உள்ள இடத்தை அடைந்தார்.' பாடல் வருமாறு:

"'வண்டோங்கும் செங்கமலம்'
எனஎடுத்து மனமுருகப்
பண்தோய்ந்த சொற்றிருத்தாண்
டகம்பாடிப் பரவுவார்
விண்தோய்ந்த புனற்கங்கை
வேணியார் திருவுருவம்
கண்டோங்கு களிசிறப்பக்
கைதொழுது புறத்தணைந்தார்."

'வண்டோங்கும் செங்கமலம்' என - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் 'வண்டோங்கும் செங்கமலம்' என்று; இடைக்குறை. எடுத்து - தொடங்கி. மனம் - தம்முடைய திருவுள்ளம். உருக - பக்தியினால் உருக்கத்தை அடைய. ப்: சந்தி. பண் - உரிய பண். தோய்ந்த - அமைந்த. சொல் - செய்யுட் சொற்கள் அடங்கிய; ஒருமை பன்மை மயக்கம். திருத்தாண்டகம் - ஒரு திருத்தாண்டகத்தை. பாடி - அந்த நாயனார் பாடியருளி. ப்: சந்தி. பரவுவார் - அந்த ஆதிபுரீசுவரரைப் புகழ்பவராகி; முற்றெச்சம். விண் - ஆகாயத்திலிருந்து. தோய்ந்த - இறங்கி வந்து விழுந்த. புனல் - நீர் ஓடும். கங்கை - கங்கையாற்றை. வேணியார் - தம்முடைய தலையின் மேல் உள்ள சடாபாரத்தில் தங்க வைத்தவர்ாகிய அந்த ஆதிபுரீசுவரருடைய. திரு - அழகிய. உருவம் - திருவுருவத்தை. கண்டு - அந்த நாயனார் தரிசித்து. ஓங்கு - தம்முடைய திருவுள்ளத்தில் எழுந்து ஓங்கும். களி - ஆனந்தம். சிறப்ப - சிறப்பாக அமைய. க்: சந்தி. கை - தம்முடைய கரங்களை; ஒருமை பன்மை மயக்கம். தொழுது - தம்முடைய தலையின் மேல் வைத்துக் கூப்பி அந்த ஈசுவரரைக் கும்பிட்டு விட்டு. புறத்து - அந்தத் திருக்கோயிலுக்கு வெளியில் உள்ள ஓரிடத்தை . அணைந்தார் - அந்த நாயனார் அடைந்தார்.

இந்தப் பாடலில் குறிப்பிட்ட திருத்தாண்டகம் வருமாறு:

"வண்டோங்கும் செங்கமலக் கழுநீர் மலரும்
மதமத்தம் சேர்சடைமேல் மதியம் சூடித்
திண்டோள்கள் ஆயிரமும் வீசி நின்று
திசைசேர நடமாடிச் சிவலோக னார்
உண்டார்நஞ் சுலகுக்கோர் உறுதி வேண்டி
ஒற்றியூர் மேய ஒளிவண்ண னார்
கண்டேன்நான் கனங்கத்திற் கண்டேற் கென்றன்
கடும்பிணியும் சுடும்தொழிலும் கைவிட் டவே."

இந்தத் திருப்பதிகத்தில் உள்ள இறுதித் திருத்தாண்டகம் வருமாறு:

"மருவுற்ற மலர்க்குழலி மடவாள் அஞ்ச
மலைதுளங்கத் திசைநடுங்கச் செறுத்து நோக்கிச்
செறுவுற்ற வாளரக்கன் வலிதான் மாளத்
திருவடியின் விரலொன்றால் அலற ஊன்றி
உருவொற்றி அங்கிருவர் ஓடிக் காண
ஓங்கிவைவ் வொள்ளழலார் இங்கே வந்து
திருவொற்றி யூர்நம்மூர் என்று போனார்
செறிவளைகள் ஒன்றொன்றாச் சென்ற வாறே."

அடுத்து வரும் 337-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் புகழ் பெற்றுத் திகழும் பெருமையைப் பெற்றிருக்கும் ஆதிபுரீசுவரருடைய திருக்கோயிலில் உள்ள அழகிய முற்றத்தில் தமக்கு அமைந்த உழவாரத் திருப்பணியையும் வேறு பல திருப்பணிகளையும் புரிந்து கொண்டே தம்முடைய திருள்ளத்தில் பாடியருளும் விருப்பத்தைப் பெற்ற பல

திருவிருத்தங்களையும், தம்முடைய திருவுள்ளத்தில் ஓங்கி எழுந்த பல திருக்குறுந் தொகைகளையும் அந்த ஆதிபுரீசுவரருடைய ஆலயத்தைப் பற்றித் தம்முடைய திருவுள்ளமாகிய இடத்தில் மேற்கொண்ட பல திரு நேரிசைகளையும் அந்த நாயனார் பாடியருளித் தம்முடைய கைகளைத் தம்முடைய தலையின் மேல் வைத்துக் கூப்பிக் கும்பிட்டு விட்டுப் பிறகு தரையில் விழுந்து அந்த ஆதிபுரீசுவரரை வணங்கி விட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு செல்வ வளத்தைப் பெற்ற அழகிய சிவத்தலமாகிய அந்தத் திருவொற்றியூரில் பல தினங்கள் தங்கிக் கொண்டிருந்தார்.' பாடல் வருமாறு:

"விளங்குபெருந் திருமுன்றில்
மேவுதிருப் பணிசெய்தே
உளங்கொள்திரு விருத்தங்கள்
ஓங்குதிருக் குறுந்தொகைகள்
களங்கொள்திரு நேரிசைகள்
பலபாடிக் கைதொழுது
வளங்கொள்திருப் பதியதனில்
பலநாள்கள் வைகினார்."

விளங்கு - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் புகழ் பெற்றுத் திகழும். பெரும் - பெருமையைப் பெற்று விளங்கும். திருமுன்றில் - ஆதிபுரீசுவரருடைய திருக்கோயி லில் உள்ள அழகிய முற்றத்தில். முன்றில் - இல் முன்; பின் முன்னாகத் தொக்க தொகை. மேவு - தாம் விரும்பிய. திருப்பணி - உழவாரத் திருப்பணியையும் வேறு பல திருப்பணிகளையும்; ஒருமை பன்மை மயக்கம். செய்தே - புரிந்துகொண்டே. உளம் - தம்முடைய திருவுள்ளத்தில். கொள் - பாடியருளும் விருப்பத்தைப் பெற்ற. திருவிருத்தங்கள் - பல திருவிருத்தங்களையும். ஓங்கு -

தம்முடைய திருவுள்ளத்தில் ஓங்கி எழுந்த. திருக் குறுந்தொகைகள் - பல திருக்குறுந்தொகைகளையும். களம் - அந்த ஆதிபுரீசுவரருடைய ஆலயத்தைப் பற்றித் தம் முடைய திருவுள்ளமாகிய இடத்தில். கொள் - மேற்கொண்ட. திருநேரிசைகள் பல - பல திருநேரிசை களையும். பாடி - அந்த நாயனார் பாடியருளி. க்: சந்தி. கை - தம்முடைய திருக்கரங்களை; ஒருமை பன்மை மயக்கம். தொழுது - தம்முடைய தலையின் மேல் வைத்துக் கூப்பிக் கும்பிட்டுவிட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு. வளம் - செல்வ வளத்தை. கொள் - பெற்ற. திருப்பதி - அழகிய சிவத்தலமாகிய. அதனில் - அந்தத் திருவொற்றியூரில். பல நாள்கள் - பல தினங்கள். வைகினார் - அந்த நாயனார் தங்கிக் கொண்டிருந்தார்.

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய சில திருவிருத்தங்கள் வருமாறு:

"புற்றினில் வாழும் அரவுக்கும்
திங்கட்கும் கங்கைஎன்னும்
சிற்றிடை யாட்கும் செறிதரு
கண்ணிக்கும் சேர்விட.மாம்
பெற்றுடை யான்பெரும் பேக்கடை
யான்பிரி யாதெனைஆள்
விற்றுடை யான்ஒற்றி யூருடை
யான்தன் விரிசடையே."

"அங்கட்கடுக் கைக்குமுல்லைப் புறவம்
முறுவல் செய்யும்
பைங்கட் டலைக்குச் சுடலைக்
களரி பருமணிசேர்
கங்கைக்கு வேலை அரவுக்குப்
புற்குக் கலைநிரம்பாத்

திங்கட்கு வானம் திருவொற்றி
யூரர் திருமுடியே.''

அந்த நாயனார் பாடியருளிய சில திருக்குறுந் தொகைகள் வருமாறு:

''ஒற்றி யூரும் ஒளிமதி பாம்பினை
ஒற்றி யூருமப் பாம்பும் அதனையே
ஒற்றி யூர ஒருசடை வைத்தவன்
ஒற்றி யூர்தொழ நம்வினை ஓயுமே.''

''போது தாழ்ந்து புதுமலர் கொண்டுநீர்
மாது தாழ்சடை வைத்த மணாளனார்
ஓது வேதிய னார்திரு வொற்றியூர்
பாதம் ஏத்தப் பறையும்நம் பாவமே.''

அந்த நாயனார் பாடியருளிய திருநேரிசைகள் சில வருமாறு:

''காமத்துள் அழுந்தி நின்று
கண்டாரால் ஒறுப்புண் ணாதே
சாமத்து வேத மாகிய
நின்றதோர் சுயம்பு தன்னை
ஏமத்தும் இடையி ராவும்
ஏகாந்தம் இயம்பு வார்க்கு
ஓமத்துள் ஒளிய தாகும்
ஒற்றியூர் உடைய கோவே.''

''மனமெனும் தோணி பற்றி
மதியெனும் கோலை ஊன்றிச்
சினமெனும் சரக்கை ஏற்றிச்
செறிகடல் ஓடும் போது
மதனெனும் பாறை தாக்கி
மறியும்போ தறிய வொண்ணா

துணையுனும் உணர்வை நல்காய்
ஒற்றியூர் உடைய கோவே."

அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"நிலைப்பாடே நான்கண்ட தேடீ கேளாய்
நெருநலைநற் பகலிங்கோ ரடிகள் வந்து
கலைப்பாடும் கண்மலரும் கலக்க நோக்கிக்
கலந்து பலியிடுவேன் எங்கும் காணேன்
கலப்பாடே இனியொருநாட் காண்பே னாகில்
தன்னாகத் தென்னாகம் ஒடுங்கும் வண்ணம்
முலைப்பாடே படத்தழுவிப் போக வொட்டேன்
ஒற்றியூர் உறைந்திங்கே திரிவா னையே."

பிறகு வரும் 338-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அந்தத் திருவொற்றியூரில் தங்கிக் கொண்டிருக்கும் காலத்தில் அதற்குப் பக்கத்தில் இருப்பவையாகும் சிவபெருமா னுடைய திருக்கோயில்கள் எல்லா இடங்களுக்கும் அந்த நாயனார் எழுந்தருளி அந்தத் தலங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்களை இனிமையோடு வணங்கி விட்டுத் துதிக்கும் அந்தத் திருநாவுக்கரசு நாயனார் இறைவன் வழங்கிய திருவருளால் பொங்கி எழும் நீர் நிரம்பிய குளம், குட்டை, கடல், ஆறு, வாவி, கிணறு முதலிய நீர் நிலைகளைப் பெற்ற திருவொற்றியூருக்கு மீண்டும் அந்த நாயனார் எழுந்தருளி அந்த ஆதிபுரீசுவரரை வணங்கி விட்டு மேலே எழுந்தருளி உமையாளாகிய பசுபதி நாயகி அம்மையைத் தம்முடைய வாம பாகத்தில் எழுந்தருளச் செய்த பாசூர் நாதேசுவரர் வீற்றிருந்த திருப்பாசூராகும் சிவத்தலத்தை அந்த நாயனார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

"அங்குறையும் நாளின்கண்
அருகுளவாம் சிவாலயங்கள்
எங்கும்சென் றினிதிறைஞ்சி
ஏத்தும்அவர் இறைஅருளால்
பொங்குபுனல் திருவொற்றி
யூர்தொழுது போந்துமையாள்
பங்குடையார் அமர்ந்ததிருப்
பாசூராம் பதிஅணைந்தார்."

அங்கு - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அந்தத் திருவொற்றியூரில். உறையும் - தங்கிக் கொண்டிருக்கும். நாளின் கண் - காலத்தில். அருகு - அந்தத் திருவொற்றி யூருக்குப் பக்கத்தில். உளவாம் - இருப்பவையாகும். உள: இடைக்குறை. சிவாலயங்கள் - சிவபெருமானுடைய திருக்கோயில்களாகிய. எங்கும் - எல்லா இடங்களுக்கும்; ஒருமை பன்மை மயக்கம். சென்று - அந்த நாயனார் எழுந்தருளி. இனிது - இனிமையோடு. இறைஞ்சி - அந்தத் தலங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்களை வணங்கிவிட்டு. ஏத்தும் - அந்தச் சிவபெருமான்களைத் துதிக்கும். அவர் - அந்தத் திருநாவுக் கரசு நாயனார். இறை - இறைவனாகிய திருவதிகை வீரட்டானேசுவரன். அருளால் - வழங்கிய திருவருளினால். பொங்கு - பொங்கி எழும். புனல் - நீர் நிரம்பிய குளம், குட்டை, கடல், ஏரி, ஆறு, வாவி, கிணறு முதலிய நீர் நிலைகளைப் பெற்ற; ஆகு பெயர். திருவொற்றியூர் - திருவொற்றியூருக்கு மீண்டும் அந்த நாயனார் எழுந்தருளி. தொழுது - அந்த ஆதி புரீசுவரரை வணங்கி விட்டு. போந்து - மேலே எழுந்தருளி. உமையாள் - உமையவளாகிய பசுபதி அம்மையை. பங்கு - தம்முடைய வாமபாகத்தில் எழுந்தருளச் செய்த. உடையார் - செயலைப்

பெற்றவராகிய பாசூர் நாதேசுவரர். அமர்ந்த - வீற்றிருந்த. திருப்பாசூர் ஆம் - திருப்பாசூராகும். பதி - சிவத்தலத்தை. அணைந்தார் - அந்த நாயனார் அடைந்தார்.

திருப்பாசூர்: இது தொண்டை நாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவர் பாசூர் நாதேசுவரர். அம்பிகை பசுபதி நாயகி அம்மை. இது திருவெவ்வுளூருக்கு மேற்குத் திசையில் இரண்டு மைல் தூரத்தில் உள்ளது. பாசூர் நாதேசுவரர் ஒரு மூங்கில் மரத்தின் அடியில் தோன்றியருளிய தலம் இது. சமணர்கள் கரிகால் வளவனுக்குப் பகைவனாக இருந்த ஒரு குறும்ப அரசனுக்கு உதவியாக ஒரு குடத்தில் விட்டு அந்தக் கரிகால் வளவனிடம் அனுப்பின பெரிய பாம்பை அந்தக் கரிகால் வளவனுக்கு உதவியாகப் பாசூர் நாதேசுவரர் அந்தப் பாம்பை எடுத்து ஆட்டியருளிய தலம் இது. இந்தத் தலத்தைப் பற்றிக் காந்தாரப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"சிந்தை இடையார் தலையின்
மிசையார் செஞ்சொல்லார்
வந்து மாலை வைகும்
போழ்தென் மனத்துள்ளார்
மைந்தர் மணாளர் என்ன
மகிழ்வார் ஊர்போலும்
பைந்தண் மாதவீ சோலை
சூழ்ந்த பாசூரே."

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திருக்குறுந்தொகை வருமாறு:

"மடந்தை பாகம் மகிழ்ந்த மணாளனார்
தொடர்ந்த வல்வினை போக்கிடும் சோதியார்

கடந்த காலனைக் கால்கொடு பாய்ந்தவர்
படர்ந்த நாகத்தார் பாசூர் அடிகளே.''

அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''விண்ணாகி நிலனாகி விசும்பு மாகி
வேலைசூழ் ஞாலத்தார் விரும்பு கின்ற
எண்ணாகி எழுத்தாகி இயல்பு மாகி
ஏழுலகும் தொழுதேத்திக் காண நின்ற
கண்ணாகி மணியாகிக் காட்சி யாகிக்
காதலித்தங் கடியார்கள் பரவ நின்ற
பண்ணாகி இன்னமுதாம் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே.''

பிறகு வரும் 339-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் திருப்பாசூர் என்னும் பெரிய சிவத்தலத்தை அடைந்து தம்முடைய திருவுள்ளத்தில் வந்து ஊற்றைப் போலச் சுரக்கும் விருப்பமும் பேராவலும் தம்மிடம் உண்டாக மூங்கிலை தாம் எழுந்தருளியிருக்கும் இடமாக மேற்கொண்டு இந்த மண்ணுலகத்தில் வாழும் மக்கள் உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம் எழுந்தருளியிருப்பவராகிய பாசூர்நாதேசு வரரை, தம்முடைய பகைவர்களாகிய தாரகாட்சன், வித்யுன்மாலி, வாணன் என்னும் மூன்று அசுரர்களுக்கு உரிய பறக்கும் கோட்டைகளாகிய மூன்று புரங்களை எரித்தருளும் பொருட்டுத் தம்முடைய திருக்கரத்தில் எடுத்துக் கொண்ட ஒப்பற்ற மேரு மலையாக அமைந்த கொடுமையாக இருக்கும் வில்லை ஏந்தியவராகிய அந்தப் பாசூர் நாதேசுவரரை அந்த நாயனார் தரையில் விழுந்து வணங்கி விட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று

கொண்டு அந்த ஈசுவரரை வாழ்த்துவாரானார்.' பாடல் வருமாறு:

"திருப்பாசூர் நகர்எய்திச்
சிந்தையினில் வந்தூறும்
விருப்பார்வம் மேற்கொள்ள
வேயிடம்கொண் டுலகுய்ய
இருப்பாரைப் புரம்மூன்றும்
எரித்தருள எடுத்ததனிப்
பொருப்பார்வெஞ் சிலையாரைத்
தொழுதெழுந்து போற்றுவார்."

திருப்பாசூர் - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் திருப்பாசூர் என்னும். நகர் - பெரிய சிவத்தலத்தை. எய்தி - அடைந்து. ச்: சந்தி. சிந்தையினில் - தம்முடைய திருவுள்ளத்தில். வந்து ஊறும் - தோன்றி ஊற்றைப் போலச் சுரக்கும். விருப்பு - விருப்பமும். ஆர்வம் - பேராவலும். மேற்கொள்ள - தம்மிடம் உண்டாக. வேய் - ஒரு மூங்கில் மரத்தை. இடம் - தாம் எழுந்தருளியிருக்கும் இடமாக. கொண்டு - மேற்கொண்டு. உலகு - இந்த மண்ணுலகத்தில் வாழும் மக்கள்; இடஆகு பெயர். உய்ய - உஜ்ஜீவனத்தை அடையும் வண்ணம். இருப்பாரை - எழுந்தருளி யிருப்பவராகிய பாசூர் நாதேசுவரரை. ப்: சந்தி. புரம் மூன்றும் - தம்முடைய பகைவர்களாகிய தாரகாட்சன், வித்யுன்மாலி, வாணன் என்னும் மூன்று அசுரர்களுக்கு உரிய பறக்கும் கோட்டைகளாகிய மூன்று புரங்களை. புரம்: ஒருமை பன்மை மயக்கம். எரித்தருள - எரித்தருளும் பொருட்டு. எடுத்த - தம்முடைய திருக்கரத்தில் எடுத்துக் கொண்ட. தனி - ஒப்பற்ற. ப்: சந்தி. பொருப்பு - மேருமலையாக. ஆர் - அமைந்த. வெம் - கொடுமையாக இருக்கும். சிலையாரை - வில்லை ஏந்தியவராகிய அந்தப்

பாசூர் நாதேசுவரரை. த்: சந்தி. தொழுது - அந்த நாயனார் தரையில் விழுந்து வணங்கிவிட்டுப் பிறகு. எழுந்து - தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு. போற்றுவார் - அந்த பாசூர் நாதேசுவரரை வாழ்த்துபவரானார்.

பிறகு வரும் 340-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்த வாகீசராகிய திருநாவுக்கரசு நாயனார் ''முந்தி மூவெயில் எய்த முதல்வனார்'' என்று தொடங்கித் தம்முடைய திருவுள்ளம் மெழுகைப் போலக் கலரைந்து பக்தியினால் உருக்கத்தை அடைந்து பாடியருளும் ஒரு திருக்குறுந் தொகையையும், ஒரு திருத்தாண்டகத்தையும், செய்யுட் சந்தம் நிறைந்த ஒரு திரு நேரிசையையும், முதலாக உள்ள செந்தமிழ் மொழியில் அமைந்த பாசுரங் களை அந்த நாயனார் பாடியருளி அடியேங்களுடைய தந்தையாரைப் போன்றவராகிய அந்தப் பாசூர் நாதேசுவரர் வழங்கிய திருவருளைப் பெற்றுக்கொண்டு மேலே எழுந்தளுபவரானார்.' பாடல் வருமாறு:

'''முந்திமூ வெயில்எய்த
முதல்வனார்' எனஎடுத்துச்
சிந்தைகரைந் துருகுதிருக்
குறுந்தொகையும் தாண்டகமும்
சந்தம்நிறை நேரிசையும்
முதலான தமிழ்பாடி
எந்தையார் திருவருள்பெற்
றேகுவார் வாகீசர்.''

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்திருக்கிறது. வாகீசர் - அந்த வாகீசராகிய திருநாவுக்கரசு நாயனார். ''முந்திமூ வெயிலெய்த முதல்வனார்'' என - ''முந்தி மூவெயிலெய்த முதல்வனார்''

என்று. என: இடைக்குறை. எடுத்து - தொடங்கி. ச்: சந்தி. சிந்தை - தம்முடைய திருவுள்ளம். கரைந்து - மெழுகைப் போலக் கரைந்து. உருகு - உருக்கத்தை அடைந்து பாடியருளும். திருக்குறுந்தொகையும் - ஒரு திருக்குறுந் தொகையும். தாண்டகமும் - ஒரு திருத்தாண்டகமும். சந்தம் - செய்யுட் சந்தம். நிறை - நிறைந்த. நேரிசையும் - ஒரு திரு நேரிசையும். முதலான - முதலாக உள்ள. தமிழ் - செந்தமிழ் மொழியில் அமைந்த பாசுரங்களை; ஆகுபெயர். பாடி - அந்த நாயனார் பாடியருளி. எந்தையார் - அடியேங்களுடைய தந்தையாராகிய அந்தப் பாசூர் நாதேசுவரர். அடியேங்கள் என்றது சேக்கிழார் தம்மையும் பிற திருத்தொண்டர்களையும் சேர்த்துக் கூறியது. திருவருள் - வழங்கிய திருவருளை. பெற்று - பெற்றுக் கொண்டு. வாகீசர் - வாக்குகளின் ஈசராகிய அந்த நாயனார். ஏகுவார் - மேலே எழுந்தருளுபவரானார்.

அந்த நாயனார் பாடியருளிய திருநேரிசை கிடைக்கவில்லை. மறைந்து போன பாசுரங்களில் அதுவும் ஒன்றாக இருக்கும் போலும்.

இந்தத் தலத்தைப் பற்றிக் காந்தாரப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"கையால் தொழுது தலைசாய்ந்
துள்ளம் கசிவார்கள்
மெய்யார் குறையும் துயரும்
தீர்க்கும் விமலனார்
நெய்யா டுதலஞ் சுடையார்
நிலாவும் ஊர்போலும்
பைவாய் நாகம் கோடல்
ஈனும் பாசூரே."

இந்தத் தலத்தைப் பற்றிய ஒரு பாசுரம் வருமாறு:

"சால்பர் பூசுவர் தாழ்சடை கட்டுவர்
ஓம்பன் மூதெரு தேறும் ஒருவனார்
தேம்பல் வெண்மதி ஆடுவர் தீயதோர்
பாம்பும் ஆட்டுவர் பாசூர் அடிகளே."

பிறகு வரும் *341*-ஆம் செய்யுளின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அந்த மலர்ச்சியையும் சீர்த்தியையும் பெற்று விளங்கும் அந்தச் சிவத்தலமாகிய திருப்பாசூரை விட்டுவிட்டு அந்தத் தலத்திற்குப் பக்கத்தில் இருப்பவையாகும் சிவத்தலங்கள் எல்லாவற்றிற்கும் அந்த நாயனார் எழுந்தருளி மையைப் போன்ற கரிய நிறம் மலர்ச்சியைப் பெற்றுத் திகழும் திருக்கழுத்தைப் பெற்றவராகிய சிவபெருமானாரைப் பணிந்து விட்டு மகிழ்ச்சியோடும் அந்த பெருமானாரை வாழ்த்தி விட்டு உண்மையென்னும் நிலையிலிருந்தும் தவறாத வேளாளர் களாகிய மேலாக விளங்கும் குடித்தனப் பாங்கையுடைய செம்மையினால் சிறப்பைப் பெற்ற பழையனூர் என்னும் ஊரைத் தன் பால் பெற்ற திருவாலங்காட்டுக்கு அந்த நாயனார் எழுந்தருளி ஊர்த்துவ தாண்டவேசுவரரை வணங்கினார்.' பாடல் வருமாறு:

"அம்மலர்ச்சீர்ப் பதியைஅகன் .
றயல்உளவாம் பதிஅனைத்தின்
மைம்மலரும் களத்தாரை
வணங்கிமகிழ் வொடும்போற்றி
மெய்ம்மைநிலை வழுவாத
வேளாள விழுக்குடிமைச்
செம்மையினாற் பழையனூர்த்
திருஆல வனம்பணிந்தார்."

அம்மலர் -அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அந்த மலர்ச்சியையும். மலர்: முதனிலைத் தொழிற் பெயர். ச்: சந்தி. சீர் - சீர்த்தியையும் பெற்று விளங்கும். ப்: சந்தி. பதியை - சிவத்தலமாகிய திருப்பாசூரை. அகன்று - விட்டு விட்டு. அயல் - அந்தச் சிவத்தலத்திற்குப் பக்கத்தில். உளவாம் - இருப்பவையாகும். உள: இடைக்குறை. பதி - சிவத்தலங்கள்; ஒருமை பன்மை மயக்கம். அனைத்தின் - எல்லாவற்றிற்கும் அந்த நாயனார் எழுந்தருளி. மை - மையைப் போன்ற கரிய நிறம்; ஆகுபெயர். ம்: சந்தி. மலரும் - மலர்ச்சியைப் பெற்றுத் திகழும். களத்தாரை - திருக்கழுத்தைப் பெற்றவராகிய சிவபெருமானாரை. வணங்கி - அந்த நாயனார் பணிந்து விட்டு. மகிழ்வொடும் - மகிழ்ச்சியோடும். போற்றி - அந்தப் பெருமானாரை வாழ்த்திவிட்டு. மெய்ம்மை - உண்மைகளைப் பேசுகின்ற; ஒருமை பன்மை மயக்கம். நிலை - நிலையிலிருந்தும். வழுவாத - தவறாத. வேளாள - வேளாளர்களாகிய; ஒருமை பன்மை மயக்கம். விழு - மேலாக விளங்கும். க்: சந்தி. குடிமை - குடித்தனப் பாங்கையுடைய. ச்: சந்தி. செம்மையினால் - செம்மையினால் சிறப்பைப் பெற்ற. செம்மை - நேர்மை. பழையனூர் - பழையனூர் என்னும் ஊரைத் தன்பாற் பெற்ற. திருஆல வனம் - திருவாலங் காட்டுக்கு அந்த நாயனார் எழுந்தருளி. பணிந்தார் - ஊர்த்துவதாண்டவேசுவரரை வணங்கினார்.

திருவாலங்காடு: இது தொண்டை நாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவருடைய திருநாமங்கள் தேவர் சிங்கப் பெருமான், ஊர்த்துவ தாண்டவேசுவரர் என்பவை. அம்பிகை வண்டார்குழலி அம்மை. தீர்த்தம் முக்தி தீர்த்தம். தலவிருட்சம் பலா மரம். சென்னைக்கு 37 மைல் தூரத்தில் உள்ள திருவாலங்

காட்டுக்கு வடக்கிழக்குத் திசையில் 3 மைல் தூரத்தில் பழையனூர் உள்ளது. பஞ்ச சபைகளில் ஒன்றாகிய இரத்தின சபை இந்தத் தலத்தில் உள்ளது. ஊர்த்துவ் தாண்டவேசுவரர் காளியோடு திருநடனம் புரிந்து அருளிய தலம் இது. இந்தச் செய்தி திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திரு நேரிசையால் விளங்கும். அந்தத் திரு நேரிசை வருமாறு:

"கூடினார் உமைதன் னோடே
குறிப்புடை வேடம் கொண்டு
சூடினார் கங்கை யாளைச்
சுவறிடு சடையர் போலும்
பாடினார் சாம வேதம்
பைம்பொழிற் பழனை மேயார்
ஆடினார் காளி காண
ஆலங்காட் டடிக ளாரே."

காரைக்கால் அம்மையார் கைலாச மலையிலிருந்து தலையாலே நடந்து வந்து ஊர்த்துவதாண்டவேசுவரரைத் தரிசித்து அந்த ஈசுவரருடைய எடுத்த பொற்பாதத்தின் கீழ்ச் சிவானந்தத்தைத் துய்த்துக் கொண்டிருக்கும் தலம் இது.

ஒரு செட்டிப் பிள்ளை இந்தப் பழையனூருக்கு வந்த போது நீலி என்னும் ஒரு பெண் பேய் ஒரு கரிக் கட்டையைக் குழந்தையாக்கி எடுத்துக் கொண்டு அந்தச் செட்டிப் பிள்ளையைத் தொடர்ந்து சென்று, ''இந்தக் குழந்தையை வாங்கிக் கொள்'' என்றாள். அந்தச் செட்டிப்பிள்ளை வந்தவள் ஒரு பேய் மகள் என்பதை அறிந்து அந்தக் குழந்தையை வாங்கிக் கொள்ள மறுத்து விட்டான். நீலி என்ற அந்தப் பேய் மகள் பழையனூரில் வாழ்ந்த எழுபது வேளாளர்களிடம் சென்று, ''என் கணவன் இந்தக் குழந்தையை வாங்கிக் கொள்ள மாட்டேன் என்று

கூறுகிறான். நீங்கள் தயை செய்து எப்படியாவது அவனை என்னோடு கூட்டி வைக்க வேண்டும்'' என்றாள். அந்த வேளாளர்கள் அந்தச் செட்டிப் பிள்ளையை அணுகி, ''உன்னுடைய மனைவியையும் குழந்தையையும் ஏன் புறக்கணித்து விட்டாய்?'' என்று கேட்டார்கள். அவன், ''ஐயோ, அவள் ஒரு பெண் பேய். அவள் என்னுடைய மனைவி அல்ல. அவள் கையில் உள்ள குழந்தை உண்மையான குழந்தை அல்ல. ஒரு கரிக்கட்டையைக் குழந்தையாக மாற்றிவைத்துக் கொண்டிருக்கிறாள்'' என்றான். அந்த வேளாளர்கள், ''நீ அந்தப் பெண்ணுடன் சேர்ந்து இருக்கத் தான்வேண்டும்'' என்றார்கள். அவன் ''ஐயோ, என்னை அவளுடன் சேர்த்து ஓர் அறைக்குள் விடாதீர்கள். அப்படி விட்டால் இரவில் அவள் என்னைத் தின்று விடுவாள்'' என்றான். அந்த வேளாளர்கள், ''அப்படி இருக்குமானால் நாங்கள் எங்கள் உயிர்களை விட்டு விடுவோம். இந்த் உத்தரவாதத்தை நீ ஏற்றுக் கொண்டு அவளோடு இந்த அறையில் இன்று இரவைக் கழிப்பாயாக'' என்றார்கள். அவன் அவர்கள் சொல்லைத் தட்ட முடியாமல் அந்த நீலி என்னும் பெண் பேயோடு அந்த அறையில் புகுந்து தங்கினான். அன்று இரவில் அந்த பெண் பேய் அந்தச் செட்டிப்பிள்ளையைத் தின்று விட்டு மறைந்து போனாள். மறுநாள் அந்த எழுபது வேளாளர்களும் அறையைத் திறந்து பார்க்க வெறும் எலும்புக் குவியலைத் தான் கண்டார்கள். அந்த நீலி பெண் பேய் என்பதும் அவள் அந்தச் செட்டிப் பிள்ளையைத் தின்று விட்டாள் என்பதும் அவர்களுக்குத் தெரிந்தன. உடனே தாங்கள் கொடுத்த வாக்கின்படி அந்த எழுபது வேளாளர்களும் தீக்குளித்துத் தங்களுடைய உயிர்களைவிட்டு விட்டார்கள். இதைத் தான் இந்தப் பாடலில், 'மெய்ம்மை நிலை வழுவாத வேளாள விழுக்

குடிமைச் செம்மையால்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அந்த வேளாளர்களின் பரம்பரையில் வந்த வேளாளர்கள் வாழும் பழையனூர் இந்தத் திருவாலங்காட்டிற்குக் கிழக்குத் திசையில் ஒரு மைல் தூரத்தில் இருக்கிறது. இந்த ஊரிலும் ஒரு சிவாலயம் உண்டு. இந்த நீலியின் வரலாற்றை நீலிகதை என்ற பழைய உரை நடை நூலில் காணலாம். இந்த வரலாற்றைத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் குறிப்பிட்டுப் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"துஞ்ச வருவாரும் தொழுவிப்
பாரும் வழுவிப்போய்
நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப்
பாருமுனை நட்பாய்
வஞ்சப் படுத்தொருத்தி வாணாள்
கொள்ளும் வகைகேட்
டஞ்சும் பழையனூர் ஆலங்
காட்டெம் அடிகளே."

இந்தத் தலத்தைப் பற்றித் தக்கராகப் பண்ணில் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"பறையும் சிறுகுழலும் யாழும்
பூதம் பயிற்றவே
மறையும் பலபாடி மயானத்
துறையும் மைந்தனார்
பிறையும் பெரும்புனல் சேர்சடையி
னாரும் பேடைவண்
டறையும் பழையனூர் ஆலங்
காட்டெம் அடிகளே."

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திரு நேரிசை வருமாறு:

"தாருடைச் செங்க மலத்
தடங்கொள்சே வடியர் போலும்
நாளுடைக் காலன் வீழ
உதைசெய்த நம்பர் போலும்
கோளுடைப் பிறவி தீர்ப்பார்
குளிர்பொழிற் பழனை மேய
ஆளுடை அண்ணல் போலும்
ஆலங்காட் டடிக ளாரே."

இந்தத் தலத்தைப் பற்றிக் கொல்லிக் கௌவாணப் பண்ணில் சுந்தர மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"முத்தா முத்தி தரவல்ல
முகிழ்மென் முலையாள் உமைபங்கா
சித்தா சித்தித் திறம்காட்டும்
சிவனே தேவர் சிங்கமே
பத்தா பத்தர் பலர்போற்றும்
பரமா பழைய னூர்மேய
அத்தா ஆலங் காடாஉன்
அடியார்க் கடியேன் ஆவேனே."

காரைக்கால் அம்மையார் பாடியருளிய திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகத்தில் இந்தத் தலத்தைப் பற்றி வரும் இடங்கள் வருமாறு:

"தாழ்சடை எட்டுத்திசையும் வீசி
அங்கும் குளிர்ந்த தலை ஆடும்எங்கள்
அப்பன்இடம் திருவாலங்காடே."

''பூழ்தி, அள்ளி அவிக்கநின்றாடும் எங்கள்
அப்பன் இடம்திரு வாலங்காடே.''

''ஆகம் குளிர்ந்தனல் ஆடும் எங்கள்
அப்பன் இடம்திரு வாலங்காடே.''

''அண்டம் உறநிமிர் தாடும் எங்கள்
அப்பன் இடம்திரு வாலங்காடே.''

''புறங்காட்டில் ஆடும்
அப்பன் இடம்திரு ஆலங்காடே.''

''அட்டமே பாயநின்றாடும் எங்கள்
அப்பன் இடம்திரு ஆலங்காடே.''

''அழல்உமிழ்ந் தோரி கதிக்கஆடும்
அப்பன் இடம்திரு வாலங்காடே.''

''ஆடும் அரவப் புயத்தன் எங்கள்
அப்பன் இடம்திரு வாலங்காடே.''

''அத்தனைவிரவி டாடும் எங்கள்
அப்பன் இடம்திரு வாலங்காடே.''

''அந்தியில் மாநடம் ஆடும்எங்கள்
அப்பன் இடந்திரு வாலங்காடே.''

*அடுத்து வரும் 342-ஆம் கவியின் கருத்து வருமாறு:*

'''திருவாலங்காடுறையும் செல்வர்தாம்'' என்று சிறப்பிலிருந்து நீங்காத பெருமையைப் பெற்று விளங்கும்

திருத் தாண்டகம் முதலாக இருக்கும் சுவை ஓங்கியிருக்கும் செந்தமிழ் மொழியில் அமைந்த பெரிய உண்மைகளை எடுத்துக் கூறும் தொடுத்தலைப் பெற்ற மாலைகளாகிய பல திருப்பதிகங்களை அந்தத் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளி விட்டு வேறு சிவத்தலங்களுக்கும் அந்த நாயனார் எழுந்தருளும் பேராவல் உண்டாக அந்தச் சிவத்தலங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் சிவ பெருமான்களைப் பணிந்து விட்டு வடக்குத் திசையின் மேலாக உள்ள வழியில் அந்த நாயனார் எழுந்தருளுபவரானார்.' பாடல் வருமாறு:

"திருவாலங் காடுறையுஞ்
செல்வர்தா மெனச்சிறப்பின்
ஒருவாத பெருந்திருத்தாண்
டகமுதலா வோங்குதமிழ்ப்
பெருவாய்மைத் தொடைமாலை
பலபாடிப் பிறபதியும்
மருவார்வம் பெறவணங்கி
வடதிசைமேல் வழிக்கொள்வார்."

'திருவாலங்காடுறையும் செல்வர்தாம்' என - 'திருவாலங்காடுறையும் செல்வர் தாம்' என்று. என: இடைக்குறை. ச்: சந்தி. சிறப்பின் - சிறப்பிலிருந்து. ஒருவாத - நீங்காத. பெரும் - பெருமையைப் பெற்று விளங்கும். திருத்தாண்டகம் முதலாம் - திருத்தாண்டகம் முதலாக இருக்கும். ஓங்கு - சொற்சுவை, பொருட் சுவை என்னும் இரண்டு சுவைகளும் ஓங்கி விளங்கும். தமிழ் - செந்தமிழ் மொழியில் அமைந்த. ப்: சந்தி. பெரு - பெரிய. வாய்மை - உண்மைகளை எடுத்துக் கூறும்; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தொடை - தொடுத்தலைப் பெற்ற. மாலை - மாலைகளாகிய; ஒருமை பன்மை

மயக்கம். பல - பல திருப்பதிகங்களை. பாடி - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளி விட்டு. ப்: சந்தி. பிற - வேறு. பதியும் - சிவத்தலங்களுக்கும்; ஒருமை பன்மை மயக்கம். மருவு - அந்த நாயனார் எழுந்தருளும். ஆர்வம் - பேராவல். பெற - உண்டாக. வணங்கி - அந்தச் சிவத்தலங் களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்களைப் பணிந்து விட்டு. வடதிசை மேல் - வடக்குத் திசையில் மேலாக. வழிக் கொள்வார் - உள்ள வழியில் அந்த நாயனார் எழுந்தருளுபவரானார்.

திருவாலங்காட்டைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒவ்வொரு திருத்தாண்டகமும், ‘‘திரு வாலங்காடுறையும் செல்வர்தாமே.’’ என்று முடிகிறது. ஒரு திருத்தாண்டம் வருமாறு:

‘‘ஒன்றா உலகனைத்தும் ஆனார் தாமே
ஊழி தோறூழி உயர்ந்தார் தாமே
நின்றாகி எங்கும் நிமிர்ந்தார் தாமே
நீர்வளிதீ ஆகாசம் ஆனார் தாமே
கொன்றாடும் கூற்றை உதைத்தார் தாமே
சோலப் பழனை உடையார் தாமே
சென்றாடும் தீர்த்தங்கள் ஆனார் தாமே
திருவாலங் காடுறையும் செல்வர் தாமே.’’

மற்றொரு திருத்தாண்டகம் வருமாறு:

‘‘மாலைப் பிறைசென்னி வைத்தார் தாமே
வண்கயிலை மாமலையை வந்தி யாத
நீலக் கடல்சூழ் இலங்கைக் கோனை
நெரிய விரலால் அடர்த்தார் தாமே
பாலொத்த மேனி நிறத்தார் தாமே
பழனை பதியா உடையார் தாமே

சீலத்தார் ஏந்தும் திறத்தார் தாமே
திருவாலங் காடுறையும் செல்வர் தாமே.''

பிறகு வரும் 343-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'பல சிவத்தலங்களையும் உயரமாக நிற்கும் மலையையும் பல வகையான கொடிகள் படர்ந்து ஓடும் காட்டையும் தாம் கடந்து மேலே எழுந்தருளி அடைபவ ராகி தம்முடைய பக்தர்களுக்குச் செல்லும் நல்ல சிவகதியை முன்னால் வழங்கியருள்பவராகிய சிவபெருமானார் எழுந்தருளியிருக்கும் திருக்காரிகரைக்கு அந்தத் திருநாவுக்கரசு நாயனார் எழுந்தருளி அந்தச் சிவத்தலத்தில் திருக் கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் சிவபெருமானாரை வணங்கி விட்டு பழையவை யாகிய அறுபத்து நான்கு கலைகளில் வல்லவராகிய அந்தப் பெருமையைப் பெற்ற அரசராகிய திருநாவுக்கரசு நாயனார் திருத்தொண்டர்களுக்குப் பின்னால் தேவர்களினுடைய கூட்டம் நிரம்பியிருக்கும் பெருமையைப் பெற்ற திருக் காளத்தி மலைக்கு எழுந்தருளி வந்து சேர்ந்தார்.' பாடல் வருமாறு:

''பல்பதியும் நெடுங்கிரியும்
படர்வனமும் சென்றடைவார்
செல்கதிமுன் அளிப்பார்தம்
திருக்காரி கரைபணிந்து
தொல்கலையின் பெருவேந்தர்
தொண்டர்கள்பின் உம்பர்குழாம்
மல்குதிருக் காளத்தி
மாமலைவந் தெய்தினார்.''

பல் - பல. பதியும் - சிவலத்தலங்களுக்கும். நெடும் - உயரமாக நிற்கும். கிரியும் - மலைக்கும். படர் - பல

வகையான கொடிகள் படர்ந்து ஓடும்; அந்தக் கொடிகள் ஆவன: முல்லைக்கொடி, மல்லிகைக் கொடி, இருவாட்சிக் கொடி, ஊணான் கொடி, செந்தாமரைக் கொடி, வெண்டாமரைக் கொடி, அல்லிக் கொடி, ஆம்பற் கொடி, நீலோற்பலக்கொடி முதலியவை. வனமும் - காட்டுக்கும். சென்று - எழுந்தருளி. அடைவார் - சேர்பவராகிய; முற்றெச்சம். செல்கதிமுன் - தம்முடைய பக்தர்களுக்குச் செல்லும் சிவகதியை முன்னால். அளிப்பார்தம் - வழங்கியருள்பவராகிய சிவபெருமானார். தம்: அசை நிலை. திருக்காரிகரை - எழுந்தருளியிருக்கும் திருக்காரி கரைக்கு அந்தத் திருநாவுக்கரசு நாயனார் எழுந்தருளி. பணிந்து - அந்தச் சிவத்தலத்தில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமானாரை வணங்கி விட்டு. தொல் - பழையவை ஆகிய. கலையின் - அறுபத்து நான்கு கலைகளில் வல்லவராகிய; ஒருமை பன்மை மயக்கம். அந்தக் கலைகள் இன்ன என்பதை வேறோரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. பெரு - அந்தப் பெருமையைப் பெற்ற. வேந்தர் - அரசராகிய திருநாவுக் கரசு நாயனார். தொண்டர்கள் - திருத்தொண்டர்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். பின் - பின்னால். உம்பர் - தேவர்கள் கூட்டமாகக் கூடியிருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். குழாம் - கூட்டம். மல்கு - நிரம்பியிருக்கும் பெருமையைப் பெற்ற. திருக்காளத்தி மாமலை - பெரிய திருக்காளத்தி மலைக்கு. வந்து - எழுந்தருளி வந்து. எய்தினார் - சேர்ந்தார்.

திருக்காளத்தி : இது தொண்டை நாட்டில் பொன் முகலியாற்றங்கரையில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவருடைய திருநாமங்கள் காளத்தி ஈசுவரர், கணநாதர் என்பவை. அம்பிகை ஞானப் பூங்கோதை. இது ஸ்ரீகாளஹஸ்தி எனவும் வழங்கும்.

ரேணுகுண்டா என்னும் ஊரிலிருந்து வடகிழக்குத் திசையில் 15 மைல் தூரத்தில் இந்தச் சிவத்தலம் உள்ளது. திருக்கோயில் சுவர்ணமுகி நதியாகிய பொன்முகலி ஆற்றினுடைய கிழக்குக் கரையில் காளத்தி மலையின் அடிவாரத்தில் உள்ளது. இந்தச் சிவத்தலம் பஞ்சபூதத் தலங்களில் ஒன்றாகிய வாயுத்தலம். அதை எடுத்துக்காட்ட காளத்தி நாதருடைய சந்நிதியில் எரியும் திருவிளக்குகளில் ஒன்று காற்றினால் அசைக்கப்பட்டாற் போல எந்தக் காலத்திலும் அசைந்து கொண்டே இருக்கும்.

ஸ்ரீகாளஹஸ்தி: ஸ்ரீ என்னும் சிலந்தியும், காளம் என்னும் பாம்பும், ஹஸ்தி என்னும் யானையும் இத்தலத்தில் வழிபட்டு முத்தி பெற்றன. திருக்காளத்தி மலைமேல் எழுந்தருளியிருக்கும் காளத்தி நாதரைப் பயபக்தியோடு வழிபட்டுத் தம்முடைய கண்ணை இடந்து அப்பிய கண்ணப்ப நாயனார் ஆறு தினங்களில் முக்தியை அடைந்தார். காளத்தியப்பரைப் பூசித்து வந்த சிவகோசரியார் என்னும் அந்தணரும் இந்தத் தலத்திலேயே முக்தியை அடைந்தார். தேவர்களும் காளத்திநாதரை வழிபட்டுப் பேறு பெற்றார்கள். நக்கீரதேவ நாயனாரும் காளத்திநாதரை வழிப்படும் பேறு பெற்றார். இந்தச் சிவத்தலம் தட்சிண கைலாசங்களில் ஒன்று என்பர்.

"சிலந்தி மாகண மும்மதக் கரிசிவ கோசன்
மலைந்தி டும்சிலை வேட்டுவன் கீரனே மடவார்
பலந்த ரும்வழி பாட்டினாற் பாட்டினாற் பரனைக்
கலந்து முத்திசேர் தென்பெருங் கயிலையுங் கண்டான்."

என்று கந்தபுராணத்தில் வருவதைக் காண்க.

இந்தத் தலத்தைப் பற்றிக் கொல்லிப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"சந்தமார் அகிலொடு சாதிதேக் கம்மரம்
உந்துமா முகலியின் கரையினில் உமையொடும்
மந்தமார் பொழில்வளர் மல்குவண் காளத்தி
எந்தையார் இணையடி என்மனத் துள்ளவே."

அந்த நாயனார் சாதாரிப் பண்ணில் பாடியருளிய ஒரு திருவிராகப் பாசுரம் வருமாறு:

"வல்லைவரு காளியைவ குத்துவலி யாகிமிகு
தாரகனைநீ,
கொல்லென விடுத்தருள் புரிந்தசிவன் மேவுமலை
கூறிவினவில்,
பல்பல இருங்கனி பருங்கிமிக உண்டவை
நெருங்கியினமாய்க்
கல்லதிர நின்றுகரு மந்திவிளை யாடுகா ளத்திமலையே."

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"மனத்தகத்தான் தலைமேலான் வாக்கின் உள்ளான்
வாயாரத் தன்னடியே பாடும் தொண்டர்
இனத்தகத்தான் இமையவர்தம் சிரத்தின் மேலான்
ஏழண்டத் தப்பாலான் இப்பாற் செம்பொன்
புனத்தகத்தான் நறுங்கொன்றைப் போதி னுள்ளான்
பொருப்பிடையான் நெருப்பிடையான் காற்றின்
உள்ளான்
கனத்தகத்தான் கயிலாயத் துச்சி உள்ளான்
காளத்தி யானவனென் கண்ணு ளானே."

இந்தத் தலத்தைப் பற்றி நட்டராகப் பண்ணில் சுந்தரமூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"இமையோர் நாயகனே இறைவாவென் இடர்த்துணையே
கமையார் கருணையினாய் கருமாமுகில் போல்மிடற்றாய்

உமையார் கூறுடையாய் உருவேதிருக் காளத்தியுள்
அமைவே உன்னையல்லால் அறிந்தேத்த மாட்டேனே.''

பிறகு வரும் *344*-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'இப் பொன்முகலி ஆற்றில் ஓடும் பரிசுத்தமாகிய ஆழமான தீர்த்தத்தில் முன்னால் முழுகிவிட்டு அழகு பொருந்தியிருக்கும் காளத்தி மலையினுடைய அடிவாரத்தில் அந்த நாயனார் சீகாளத்தி ஈசுவரரைத் தம்முடைய தலை தரையில் படியுமாறு விழுந்து வணங்கிவிட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு சிவந்த கண்களைப் பெற்ற இடப வாகனத்தை ஓட்டும் ஒப்பற்ற பாகராகிய அந்தச் சீகாளத்தி ஈசுவரர் நிலைபெற்று எழுந்தருளியிருக்கும் அந்தக் காளத்தி மலையின்மேல் அந்த நாயனார் ஏறிச் சென்று அந்தக் காளத்தியீசுவரருடைய திருக் கோயிலை வலமாக வந்து அந்த ஈசுவரரைப் பணிபவரானார்.' பாடல் வருமாறு:

''பொன்முகலித் திருநதியின் புனிதநெடும் தீர்த்தத்தில்
முன்முழுகிக் காளத்தி மொய்வரையின் தாழ்வரையில்
சென்னியுறப் பணிந்தெழுந்து செங்கண்விடைத்
தனிப்பாகர்
மன்னும்மலை மிசைஏறி வலங்கொண்டு வணங்குவார்.''

பொன்முகலித் திருநதியின் - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அழகிய பொன்முகலி ஆற்றில் ஓடும். புனித - பரிசுத்தமாகிய. நெடும் தீர்த்தத்தில் - ஆழமான நீரில். முன் - முன்னால். முழுகி - முழுகிவிட்டு. க்: சந்தி. காளத்தி மொய் வரையின் - அழகு பொருந்தியிருக்கும் காளத்தி மலையினுடைய. தாழ்வரையில் - அடிவாரத்தில். சென்னி - அந்த நாயனார் சீகாளத்தி ஈசுவரரைத் தம்முடைய தலை. உற - தரையில் படியுமாறு. ப்: சந்தி. பணிந்து - விழுந்து

வணங்கி விட்டு. எழுந்து - பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு. செம் - சிவப்பாக விளங்கும். கண் - கண்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். விடை - இடபவாகனத்தை ஓட்டும். த்: சந்தி. தனி - ஒப்பற்ற. ப்: சந்தி. பாகர் - பாகராகிய அந்தச் சீகாளத்தி ஈசுவரர். மன்னும் - நிலைபெற்று எழுந்தருளியிருக்கும். மலைமிசை - அந்தக் காளத்தி மலையின்மேல். ஏறி - அந்த நாயனார் ஏறிச் சென்று. வலம் கொண்டு - அந்தக் காளத்தி ஈசுவரருடைய திருக்கோயிலை வலமாக வந்து. வணங்குவார் - அந்த ஈசுவரரைப் பணிபவரானார்.

இத்தலத்தைப் பற்றிக் கொல்லிப் பண்ணில் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"கரும்புதேன் கட்டியும் கதலியின் கனிகளும்
அரும்புநீர் முகலியின் கரையினி லணிமதி
ஒருங்குவார் நடையினன் காளத்தி ஒருவனை
விரும்புவார் அவர்கள்தாம் விண்ணுல காள்வரே."

அந்த நாயனார் சாதாரிப் பண்ணில் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"வேயனைய தோளுமையொர் பாகமது வாகவிடை
ஏறிசடைமேல்
தூயமதி சூடிசுடு காடில்நடம் ஆடிமலை தன்னை வினவில்
வாய்கலச மாகவழி பாடுசெயும் வேடன்மல ராகு நயனம்
காய்கணை யினாலிடத் தீசனடி கூடு காளத்தி மலையே."

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"உண்டா அருநஞ்சம் உண்டான் தான்காண்
ஊழித்தீ அன்னான்கான் உகப்பார் காணப்

பண்ணாரப் பல்லியம் பாடி னான்காண்
பயின்றநால் வேதத்தின் பண்பி னான்காண்
அண்ணா மலையான்காண் அடியார் ஈட்டம்
அடியிணைகள் தொழுதேத்த அருளு வான்காண்
கண்ணாரக் காண்பார்க்கோர் காட்சி யான்காண்
காளத்தி யானவனென் கண்ணு ளானே.''

சுந்தரமூர்த்தி நாயனார் நட்டராகப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

''பொய்யவன் நாயடியேன் புகவேநெறி ஒன்றறியேன்
செய்யவனாகி வந்திங்கிடர் ஆனவை தீர்த்தவனே
மெய்யவ னேதிருவே விளங்குத் திருக்காளத்திஎன்
ஐயநுன்றன்னை யல்லால் அறிந்தேத்த மாட்டேனே.''

''திருக்காளத்தி எய்திய சிவற்கு
வழிபடக்கடவ மறையோன் முன்னம்
துகிலிடைச் சுற்றியிற் றூநீர் ஆட்டி
நல்லன விரைமலர் நறும்புகை விளக்கவி
சொல்லின பரிசிற் சுருங்கலன் பூவும்
பட்ட மாலையும் தூங்கமும் அலங்கரித்
தருச்சனை செய்தாங் கவனடி இறைஞ்சித்
திருந்த முத்திரை சிறப்பொடு காட்டி
மந்திரம் எண்ணி வலமிடம் வந்து
விடைகொண் டேசின பிற்றொழிற்
பூசனை தன்னைப் புக்கொரு காலில்
தொடுசெருப் படியால் நீக்கி வாயில்
இடுபுனல் மேனியின் ஆட்டித் தன்தலைத்
தங்கிய துவர்பூ ஏற்றி இறைச்சியின்
பெரிதும் போனகம் படைத்துப் பிரானைக்
கண்டுகண் டுள்ளம் கசிந்து காதலிற்
கொண்டதோர் கூத்துமுன் ஆடிக் குரைகழல்

அன்பொடும் இறுக இறைஞ்சி ஆரா
அன்பொடு கானகம் அடையும் அடைந்த
அற்றை அயலினிற் கழித்தாங் கிரவியும்
உதித்த போழ்தத் துண்ணீ ரூழ்கி
ஆத ரிக்கும் அந்தணன் வந்து
சீரார் சிவற்குத் தான்முன் செய்வதோர்
பூசனை காணான் முடிமிசை ஏற்றிய
துவர்கண் டொழியான் மறித்தும் இவ்வா
றருச்சனை செய்பவர் யாவர்கொல் என்று
கரந்திருந் தவண்அக் கானவன் வரவினைப்
பரந்த காட்டிடைப் பார்த்து நடுக்குற்று
வந்தவன் செய்து போயின வண்ணம்
சிந்தையிற் பொறாது சேர்விடம் புக்கு
மற்றை நாளும்அவ் வழிபட் டிறைவ
... ... ...
சிவகதி பெற்றன்ன திருக்கண் ணப்பனே.''

என்று நக்கீர தேவ நாயனார் பாடியருளிய திருக்கண்ணப்ப தேவர் திருமறத்திலும்,

''பரிவின் தன்மை உருவுகொண் டனையவன்
போழ்வார் போர்த்த காழகச் செருப்பினன்
குருதி புலராச் சுரிகை எஃகம்
அரையிற் கட்டிய உடைதோற் கச்சையன்
தோல்நெடும் பையிற் குறுமயிர் திணித்த
வாரில் வீக்கிய வரிக்கைக் கட்டியன்
உழுவைக் கூனுகிர் கேழல்வெண் மருப்பு
மாறுபடத் தொடுத்த மாலைஉத் தரியன்
நீலப் பீலி நெற்றி சூழ்ந்த
கானக் குஞ்சிக் கவடி புல்லினன்
முடுகு நாறு குடிலை யாக்கையன்

வேங்கை வென்று வாகை சூடிய
சங்கரன் தன்னினத் தலைவன் ஓங்கிய
வில்லும் அம்பும் நல்லன தாங்கி
ஏற்றுக் கல்வனம் காற்றில் இயங்கிக்
கணையில் வீழ்த்துக் கருமா அறுத்துக்
கோலின் ஏற்றிக் கொழுந்தீக் காய்ச்சி
நாவில் வைத்த நாட்போ னகமும்
தன்றலைச் சொருகிய தண்பள்ளித் தாமமும்
வாய்க்க லசத்து மஞ்சன நீரும்
கொண்டு கானப் பேருறை கண்ணுதல்
முடியிற் பூசை அடியால் நீக்கி
நீங்காக் குணத்துக்
கோசரிக் கன்றவன் நேசம் காட்ட
முக்கண் அப்பனுக் கொருகணில் உதிரம்
தக்கி ணத்திடை இழிதர அக்கணம்
அழுது விழுந்து தொழுதெழுந் தாற்றிப்
புன்மருந் தாற்றப் போகா தென்று
தன்னை மருந்தென்று மலர்க்கண் அப்ப
ஒழிந்தது மற்றை ஒண்திரு நயனம்
பொழிந்த கண்ணீர்க் கலுழி பொங்க
அற்ற தென்று மற்றக் கண்ணையும்
பகழித் தலையால் அகழ ஆண்டகை
ஒருகை யாலும் இருகை பிடித்து
ஒல்லை நம்புண் ஒழிந்தது பாராய்
நல்லை நல்லை எனப் பெறும்
திருவேட் டுவர்தம் திருவடி கைதொழக்
கருவேட் டுழல்வினைக் காரியங் கெடுமே."

என்று கல்லாட தேவ நாயனார் பாடியருளிய திருக்கண்ணப்ப தேவர் திருமறத்திலும் இந்தத் தலத்தைப் பற்றிய செய்திகள் வருவதைக் காண்க.

பிறகு வரும் 345-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் தன்னுடைய திருச்செவிகளில் அணிந்து கொண்ட வெண்மையாகிய சங்கக் குழைகளைப் பெற்றவனை, திருக்காளத்தி மலையில் எழுந்தருளியுள்ள கொழுந்து போன்றவனை, இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும் திருவாய் மலர்ந்தருளிச் செய்த மூலபுருடனைத் தரையில் விழுந்து அந்த நாயனார் பணிந்து விட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு பெரியதாக விளங்கும் விருப்பத்தைச் செய்யும் தம்முடைய திருவுள்ளம் களிப்பை அடையவும் தம்முடைய கண்கள் களிப்பை அடையவும் பரவசமாகி அந்தத் தலைவனாகிய காளத்தி ஈசுவரனை, ''என் கண்ணுளான்'' என்று வரும் ஒரு திருத்தாண்டகத்தை அந்த நாயனார் பாடியருளினார்.' பாடல் வருமாறு:

''காதணிவெண் குழையானைக் காளத்திமலைக்
கொழுந்தை
வேதமொழி மூலத்தை விழுந்திறைஞ்சி எழுந்துபெருங்
காதல்புரி மனங்களிப்பக் கண்களிப்பப் பரவசமாய்
நாதனை, ''என் கண்ணுளான்'' எனுந்திருத்தாண் டகம்
நவின்றார்.''

காது - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் தன்னுடைய திருச்செவிகளில்; ஒருமை பன்மை மயக்கம். அணி - அணிந்து கொண்ட. வெண் - வெண்மையாகிய. குழையானை - சங்கக் குழைகளைப் பெற்றவனை. குழை: ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. காளத்தி மலை - திருக்காளத்தி மலையில் எழுந்தருளியிருக்கும். க்: சந்தி. கொழுந்தை - கொழுந்தைப் போன்றவனை; உவம ஆகுபெயர். வேதம் - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம

வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். மொழி - திருவாய் மலர்ந்தருளிச் செய்த. மூலத்தை - மூலபுருடனை. விழுந்து - தரையில் விழுந்து. இறைஞ்சி - அந்த நாயனார் பணிந்து விட்டு. எழுந்து - பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு. பெரும் - பெரியதாக விளங்கும். காதல் - விருப்பத்தை. புரி - செய்யும். மனம் - தம்முடைய திருவுள்ளம். களிப்ப - மகிழ்ச்சியை அடையவும். க்: சந்தி. கண் - தம்முடைய இரண்டு கண்களும்; ஒருமை பன்மை மயக்கம். களிப்ப - ஆனந்தத்தை அடையவும். ப்: சந்தி. பரவசமாய் - தன் வசத்தை இழந்து பரவசமாகி. நாதனை - தம்முடைய தலைவனாகிய அந்தக் காளத்தி ஈசுவரனை. ''என் கண்ணுளான்'' எனும் - 'என் கண்ணுளான்' என்று வரும்; எனும்: இடைக்குறை. திருத்தாண்டகம் - ஒரு திருத்தாண்டகத்தை. வின்றார் - அந்த நாயனார் பாடியருளினார்.

காளத்தி மலைக் கொழுந்து: ''மாகமார் திருக்காளத்திமலையெழு கொழுந்தாயுள்ள ஏகநாயகரைக் கண்டார்'' என்று பெரிய புராணத்தில் வருவதைக் காண்க.

பிறகு உள்ள 346-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அந்தக் காளத்தி மலையினுடைய சிகரத்தில் எழுந்தருளியிருக்கும் சிகாரத்தினத்தைப் போன்ற காளத்தி ஈசுவரருடைய பக்கத்தில் அடைந்து அந்த ஈசுவரருடைய சந்நிதியில் நின்றுகொண்டிருக்கும் வில்லை ஏந்திய விசாலமாகிய கையைப் பெற்ற கண்ணப்ப நாயனாருடைய திருவடிகளை அடைந்து அந்த நாயனாரை வணங்கிவிட்டு அலை அலையாகப் பொங்கித் தரையில் விழும் கண்களிலிருந்து அருவியைப் போல நீர் சொரிய அவருடைய திருமேனியின்

மேல் பாய்ந்து தரையில் இறங்கி வழிய அந்த நாயனார் தம்முடைய தலையின் மேல் கூப்பிக் கும்பிட்ட கைகளை உடையவராய் மீண்டும் அந்த ஈசுவரரைத் தரையில் விழுந்து வணங்கிவிட்டு அந்தக் காளத்தி ஈசுவரருடைய திருக்கோயிலுக்கு வெளியே வந்து சேர்ந்தார்.' பாடல் வருமாறு:

''மலைச்சிகரச் சிகாமணியின் மருங்குறமுன் னேநிற்கும்
சிலைத்தடக்கைக் கண்ணப்பர் திருப்பாதம் சேர்ந்திறைஞ்சி
அலைத்துவிழும் கண்ணருவி ஆகத்துப் பாய்ந்திழியத்
தலைக்குவித்த கையினராய்த் தாழ்ந்துபுறம்
போந்தணைந்தார்.''

மலை - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அந்தக் காளத்தி மலையினுடைய. ச்: சந்தி. சிகர - சிகரத்தில் எழுந்தருளியிருக்கும். ச்: சந்தி. சிகாமணியின் - தலையில் அணியும் இரத்தினத்தைப் போன்ற காளத்தி ஈசுவரருடைய; உவம ஆகு பெயர். மருங்கு - பக்கத்தில். உற - அடைந்து; எச்சத் திரிபு. முன் - அந்த ஈசுவரருடைய சந்நிதியில். ஏ: அசை நிலை. நிற்கும் - நின்று கொண்டிருக்கும். சிலை - வில்லை ஏந்திய. த்: சந்தி. தட - விசாலமாக உள்ள. க்: சந்தி. கை - கையைப் பெற்ற. க்: சந்தி. கண்ணப்பர் - கண்ணப்ப நாயனாருடைய. திரு - அழகிய. ப்: சந்தி. பாதம் - திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். சேர்ந்து - அடைந்து. இறைஞ்சி - அந்த நாயனாரைத் திருநாவுக்கரசு நாயனார் வணங்கிவிட்டு. அலைத்து - அலை அலையாகப் பொங்கிக் கொண்டு. விழும் - தரையில் சிந்தும். கண் - அவருடைய கண்களிலிருந்து; ஒருமை பன்மை மயக்கம். அருவி - மலையிலிருந்து மீறிவரும் அருவியைப் போல நீர்; உவஆகு பெயர். ஆகத்து - அந்த நாயனாருடைய திருமேனியின் மேல். ப்: சந்தி. பாய்ந்து இழிய - பாய்ந்து

தரையில் இறங்கி வழிய. த்: சந்தி. தலை - தம்முடைய தலையின்மேல். க்: சந்தி. குவித்த - கூப்பிக் கும்பிட்ட. கையினராய் - கைகளைப் பெற்றவராகி; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தாழ்ந்து - மீண்டும் அந்த ஈசுவரரை அந்த நாயனார் தரையில் விழுந்து வணங்கிவிட்டு. புறம் - அந்தக் காளத்தி ஈசுவரருடைய திருக்கோயிலுக்கு வெளியில். போந்து - எழுந்தருளி. அணைந்தார் - சேர்ந்தார்.

அடுத்து உள்ள 347-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'அந்த அறுபத்து நான்கு கலைகளில் உள்ள உண்மைகளை அறிந்து கொண்ட அரசராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார் ஆகாயத்தளவும் உயர்ந்து விளங்கும் அழகிய அந்தக் காளத்தி மலையில் அந்த நாயனார் தங்கிக் கொண்டிருந்து தமக்கு உரிய உழவாரத் திருப்பணியையும் வேறு பல திருப்பணிகளையும் புரிந்துகொண்டு வஜ்ரத் தம்பத்தைப் போல விளங்கும் அந்தக் காளத்தி ஈசுவரரை அந்த மலையின் மேல் திருநாவுக்கரசு நாயனார் ஏறி அந்த ஈசுவரருடைய திருவடிகளை வணங்கிய எண்ணத்தோடு பக்தர்கள் தரிசிக்க விரும்பும் அழகிய கயிலாய மலையின் மேல் அமர்ந்திருந்த கைலாச பதியினுடைய பெருமையைப் பெற்று விளங்கும் திருக்கோலத்தைத் தரிசிக்கும் அந்தச் செயலை அந்த நாயனார் விரும்பினார்.'' பாடல் வருமாறு:

"சேண்நிலவு திருமலையில் திருப்பணியா யினசெய்து
தாணுவினை அம்மலைமேல் தாள்பணிந்த குறிப்பினால்
பேணுதிருக் கயிலைமலை வீற்றிருந்த பெருங்கோலம்
காணுமது காதலித்தார் கலைவாய்மைக் காவலனார்.''

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் வந்தது. கலை - அறுபத்து நான்கு கலைகளில் உள்ள;

ஒருமை பன்மை மயக்கம். அந்தக் கலைகள் இன்ன என்பதை முன்பே ஓரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. வாய்மை - உண்மைகளை அறிந்து கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. காவலனார் - அரசராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார். சேண் - ஆகாயத்தின் அளவும் உயர்ந்து. நிலவு - விளங்கும். திரு - அழகிய. மலையில் - அந்தக் காளத்தி மலையில். திருப் பணியாயின - தமக்கு உரிய உழவாரத் திருப்பணியையும் வேறு திருப்பணிகளும் ஆக உள்ள திருப்பணிகளை. பணி: ஒருமை பன்மை மயக்கம். செய்து - புரிந்து கொண்டு. தாணுவினை - வஜ்ரத் தம்பத்தைப் போல விளங்கும் அந்தக் காளத்தி ஈசுவரரை; உவம ஆக பெயர். அம்மலை மேல் - அந்தக் காளத்தி மலையின் மேல் திருநாவுக்கரசு நாயனார் ஏறி. தாள் - அந்த ஈசுவரருடைய திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். பணிந்த - வணங்கிய. குறிப்பினால் - எண்ணத்தோடு; உருபு மயக்கம். பேணு - பக்தர்கள் தரிசிக்க விரும்பும். திரு - அழகிய. க்: சந்தி. கயிலை மலை - கயிலாய மலையின் மேல். வீற்றிருந்த - அமர்ந்து கொண்டிருந்த. பெரும் - கைலாச பதியினுடைய பெருமையைப் பெற்று விளங்கும். கோலம் - திருக் கோலத்தை. காணும் - தரிசிக்கும். அது - அந்தச் செயலை. காதலித்தார் - அந்த நாயனார் விரும்பினார்.

பிறகு உள்ள 348-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:-

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அழகிய கண்களைப் பெற்றவரும், பெரிய காளத்தி மலையின் மேல் எழுந்தருளியிருக்கும் மருந்தைப் போன்றவராகிய காளத்தி ஈசுவரரை அந்த நாயனார் பணிந்துவிட்டு அந்தக் காளத்தியீசுவரர் வழங்கிய நிரம்பிய திருவருளினால் மிகவும் தம்முடைய திருவுள்ளத்தில் பொங்கி எழும்

விருப்பத்தோடு வடக்குத் திசையின் மேல் எழுந்தருள்பவராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார் பரிசுத்தமாக விளங்கும் பெரிய மலையையும், காட்டாற்றையும், அவற்றோடு சேர்ந்துள்ள வடநாட்டைத் தாண்டி எழுந்தருளிய பிறகு சிவப்பாக விளங்கும் கண்களைப் பெற்ற திருமாலாகிய இடபவாகனத்தை ஓட்டும் தலைவராகிய பருப்பத நாதர் விரும்பித் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீசைலத்தை அந்த நாயனார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

"அங்கண் மாமலை மேல் மருந்தை வணங்கி யாரரு ளால்மிகப்
பொங்கு காதலின் உத்த ரத் திசைமேல் விருப்பொடு போதுவார்
துங்க மால்வரை கானியாறு தொடர்ந்த நாடு கடந்தபின்
செங்கண் மால்விடை அண்ணல் மேவு திருப்பருப்பதம்
எய்தினார்."

அம் - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அழகிய. கண் - கண்களைப் பெற்றவரும்; ஒருமை பன்மை மயக்கம்; ஆகு பெயர். மா - பெரிய. மலைமேல் - காளத்தி மலையின் மேல். மருந்தை - எழுந்தருளியிருக்கும் மருந்தைப் போன்றவராகிய காளத்தி ஈசுவரரை; உவம ஆகுபெயர். வணங்கி - அந்த நாயனார் பணிந்து விட்டு. ஆர் - அந்தக் காளத்தியீசுவரர் வழங்கிய நிரம்பிய. அருளால் - திருவருளினால். மிக - மிகவும். ப்: சந்தி. பொங்கு - தம்முடைய திருவுள்ளத்தில் பொங்கி எழும். காதலின் - விருப்பத்தோடு. உத்தரத்திசை மேல் - வடக்குத் திசையின் மேல். விருப்பொடு - விருப்பத்தோடு. போதுவார் - எழுந்தருளுபவராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார். துங்க - பரிசுத்தமாக விளங்கும். மால் - பெரிய. வரை - மலையையும். கானியாறு - காட்டாற்றையும். இ: குற்றியலிகரம். தொடர்ந்த - அவற்றோடு சேர்ந்துள்ள. நாடு

- வட நாட்டை. கடந்த - தாண்டி எழுந்தருளிய. பின் - பிறகு. செம் - சிவப்பாக விளங்கும். கண் - விழிகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். மால் - திருமாலாகிய. விடை - இடப வாகனத்தை ஓட்டும். அண்ணல் - தலைவராகிய பருப்பத நாதர். மேவு - விரும்பித் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும். திருப்பருப்பதம் - ஸ்ரீசைலத்தை. எய்தினார் - அந்த நாயனார் அடைந்தார்.

திருப்பருப்பதம்: இது வட்நாட்டில் உள்ள ஸ்ரீசைலம். இங்கே கோயில் கொண்டிருப்பவர் பருப்பத நாதர். அம்பிகை பருப்பத நாயகி. மல்லிகார்ஜுனபுரம் எனவும் இந்தச் சிவத்தலம் வழங்கும். கர்னூல் மாவட்டத்தில் உள்ள நந்தியால் என்னும் ஊருக்கு வடகிழக்குத் திசையில் 60 மைல் தூரத்தில் இந்தத் தலம் இருக்கிறது. நந்தி தேவர் பர்வத வடிவமாக இருந்து பருப்பத நாதரைத் தாங்கிக் கொண்டிருக்கும் தலம் இது.

"பருப்ப தப்பெயர்ச் சிவாதனற் பாலகன் பரமன்
இருப்ப வோர்வரை யாவனென் றருந்தவ மியற்றிப்
பொருப்ப தாகியே ஈசனை முடியின்மேல் புனைந்த
திருப்ப ருப்பதத் தற்புதம் யாவைவும் தெரிந்தான்."

என்று கந்தபுராணத்தில் வருவதைக் காண்க.

இந்தத் தலத்தைப் பற்றி வியாழக்குறிஞ்சிப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:-

"சுடுமணி உமிழ்நாகம் சூழ்தர அரைக்கசைத்தான்
இடுமணி எழிலானை ஏறவன் எருதேறி
விடுமணி மிடறுடையான் மேவிய நெடுங்கோட்டுப்
படுமணி விடுசுடரார் பருப்பதம் பரவுதுமே."

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திருநேரிசை வருமாறு:

''அங்கண்மால் உடைய ராய ஐவரால் ஆட்டுணாதே
உங்கள்மால் தீரவேண்டிய உள்ளத்தால் உள்கி ஏத்தும்
செங்கண்மால் பரவி ஏத்திச் சிவனென நின்றசெல்வர்
பைங்கண்வெள் ளேறதேறிப் பருப்பதம் நோக்கி னாரே.''

இந்தத் தலத்தைப்பற்றி நட்டபாடைப் பண்ணில் சுந்தர மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

''மலைச்சாரலும் பொழிற்சாரலும் புறமேவரும் இனங்கள்
மலைப்பாற்கொணர்ந் திடித்தூட்டிட மலங்கித்தன களிற்றை
அழைத்தோடியும் பிளிறீயவை அமைந்துவந் தெய்த்துத்
திசைத்தோடித்தன் பிடிதேடிடும் சீப்பத மலையே.''

பிறகு வரும் 349-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் பெருமையைப் பெற்ற வித்தியாதரர்களும், தேவலோகத்தில் வாழும் தேவர்களும், யட்சர்களும், சித்தர்களும், இனிய சங்கீதத்தைப் பாடும் கின்னரர்களும், நாக அரசர்களும், காம காரிகளே முதலாக உள்ள சிவஞானத்தைப் பெற்ற மௌன விரதிகளும், ஒவ்வொரு நாளும் நம்பராகிய பருப்பத நாதரை அந்த ஸ்ரீசைலத்துக்கு எழுந்தருளி வந்து வணங்கிவிட்டு பல வகையான நன்மைகளை அடையும் சிவத்தலமாகிய அந்த அழகிய ஸ்ரீசைலத்தை அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அடைந்து பருப்பத நாதரைப் பணிந்துவிட்டு சொற்சுவை, பொருட்சுவை என்னும் வளங்களைப் பெற்ற செந்தமிழ் மொழியில் அமைந்த ஒரு திருப்பதிகத்தை அந்த நாயனார் பாடியருளினார்.' பாடல் வருமாறு:

"மான விஞ்சையர் வான நாடர்கள் வான்இ யக்கர்கள் சித்தர்கள்
கான கின்னரர் பன்ன காதிபர் காம காரிக ளேமுதல்
ஞான மோனிகள் நாளும் நம்பரை வந்தி றைஞ்சி நலம்பெறும்
தான மானதி ருச்சிலம்பை வணங்கி வண்டமிழ் சாற்றினார்."

மான - பெருமையைப் பெற்ற. விஞ்சையர் - வித்தியாதரர்களும். வான - தேவலோகத்தில் வாழும். நாடர்கள் - தேவர்களும். வான் - அந்த தேவலோகத்தில் வாழும். இயக்கர்கள் - யட்சர்களும். சித்தர்கள் - சித்தர்களும். கான - இனிய சங்கீதத்தைப் பாடும். கின்னரர் - கின்னரர்களும்; ஒருமை பன்மை மயக்கம். பன்னகாதிபர் - நாக அரசர்களும்; ஒருமை பன்மை மயக்கம். காமகாரிகளேமுதல் - காமத்தோடு சஞ்சரிக்கும் கந்தருவர்களே முதலாக உள்ள. ஞான - சிவஞானத்தைப் பெற்ற. மோனிகள் - மௌன விரதிகளும். நாளும் - ஒவ்வொரு நாளும். நம்பரை - நம்பராகிய பருப்பத நாதரை. வந்து - அந்த ஸ்ரீசைலத்துக்கு எழுந்தருளி வந்து. இறைஞ்சி - பருப்பத நாதரை வணங்கிவிட்டு. நலம் - பல வகையான நன்மைகள்; ஒருமை பன்மை மயக்கம். பெறும் - அடையும். தானமான - சிவத்தலமாக உள்ள. திருச்சிலம்பை - ஸ்ரீசைலத்தை. வணங்கி - அடைந்து பருப்பத நாதரைப் பணிந்துவிட்டு. வண் - சொற்சுவை, பொருட்சுவை ஆகிய வளப்பங்களைப் பெற்ற. தமிழ் - செந்தமிழ் மொழியில் அமைந்த ஒரு திருப்பதிகத்தை; ஆகுபெயர். சாற்றினார் - அந்த நாயனார் பாடியருளினார்.

அவ்வாறு அந்த நாயனார் பாடியருளிய திரு நேரிசைகளில் ஒன்று வருமாறு:

"கரவிலா மனத்த ராகிக் கைதொழு வார்கட் கென்றும்
இரவுநின் றெரிய தாடி இன்னருள் செய்யும் எந்தை
மருவலார் புரங்கள் மூன்றும் மாட்டிய வகைய ராகிப்
பரவுவார்க் கருள்கள் செய்து பருப்பதம் நோக்கி னாரே."

பிறகு வரும் 350-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அந்த ஸ்ரீசைலத்தினுடைய பக்கத்தைத் தாண்டி எழுந்தருளும் அந்த நாயனார் அழகைக் கொண்ட திரிசூலமாகிய கூர்மையைப் பெற்ற ஆயுதத்தை ஏந்தியிருக்கும் தலைவராகிய கயிலாசபதியார் எழுந்தருளியிருக்கும் வெள்ளி மலையாகிய கயிலை மலைக்கு எழுந்தருளுவதற்கு எண்ணி எழுந்ததாகிய ஒப்பற்ற தம்முடைய திருவுள்ளத்தோடு எந்தப் பக்கங்களிலும் ஒரு விருப்பம் இல்லாமல் இரண்டு பக்கங்களிலும் வியப்பை அடைந்த மக்கள் பக்கத்தில் வந்து சேரும் தெலுங்கு நாட்டைத் தாண்டிக் கன்னட நாட்டை அந்த நாயனார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

"அம்ம ருங்கு கடந்து போம்அவர்
ஆர்கொள் சூல அயிற்படைச்
செம்மல் வெண்கயி லைப்பொ ருப்பை
நினைந் தெழுந்ததொர் சிந்தையால்
எம்ம ருங்குமொர் காதல் இன்றி
இரண்டு பாலும் வியந்துளோர்
கைம்ம ருங்கணை யும்தெ லுங்கு
கடந்து கன்னடம் எய்தினார்."

அம்மருங்கு - அந்த ஸ்ரீசைலத்தினுடைய பக்கத்தை. கடந்து - தாண்டி. போம் - எழுந்தருளும். அவர் - அந்தத் திருநாவுக்கரசு நாயனார். ஆர் - அழகை. கொள் - கொண்ட. சூல - திரிசூலமாகிய. அயில் - கூர்மையைப் பெற்ற. படை - ஆயுதத்தை ஏந்தியிருக்கும். ச்: சந்தி. செம்மல் - தலைவராகிய கயிலாச பதியார் எழுந்தருளியிருக்கும். வெண் - வெள்ளி மலையாகிய; ஆகு பெயர். கயிலைப் பொருப்பை - கயிலாச மலைக்கு; உருபு மயக்கம். நினைந்து - எழுந்தருளுவதற்கு எண்ணி. எழுந்தது -

எழுந்ததாகிய. ஓர் - ஒப்பற்ற. சிந்தையால் - தம்முடைய திருவுள்ளத்தோடு; உருபு மயக்கம். எம்மருங்கும் - எந்தப் பக்கங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். ஓர் - ஒரு. காதல் - விருப்பம். இன்றி - இல்லாமல். இரண்டு பாலும் - தம்முடைய இரண்டு பக்கங்களிலும். பாலும்: ஒருமை பன்மை மயக்கம். வியந்துளோர் - தம்மைப் பார்த்து வியப்பை அடைந்திருக்கும் மக்கள்; ஒருமை பன்மை மயக்கம். உளோர்: இடைக்குறை. கைம்மருங்கு - தம்முடைய கைகளின் பக்கத்தை. கை: ஒருமை பன்மை மயக்கம். அணையும் - வந்து சேரும். தெலுங்கு - தெலுங்கு மொழியைப் பேசும் மக்கள் வாழும் ஆந்திர நாட்டை; ஆகுபெயர். கடந்து - அந்த நாயனார் தாண்டி எழுந்தருளி. கன்னடம் - கன்னட மொழியைப் பேசும் மக்கள் வாழும் கன்னட நாட்டை; ஆகு பெயர். எய்தினார் - அடைந்தார்.

பிறகு வரும் 351-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் கருநாடக நாடு தமக்குப் பின்னால் இருக்குமாறு எழுந்தருளிய பிறகு அந்த நாட்டில் சேர்ந்திருக்கும் காடுகளையும், அழகிய ஆறுகளினுடைய துறைகள் ஆகிய எல்லாவற்றையும் அப்பால் உள்ள ஆகாயத்தளவும் உயரமாக நிற்கும் மலை உள்ள வழிகளையும் பெருகியுள்ள நன்மைகள் கிளர்ச்சி பெற்று எழும் நாடுகளையும், கணக்கு இல்லாதனவாகிய நாடுகள் தமக்குப் பின்னால் இருக்க மேலே எழுந்தருளும் தோற்றப் பொலிவோடு ஆகாயத்தில் உதயமாகி வரும் நீளமாக இருக்கும் கிரணங்களைப் பெற்ற சூரியன் மேலே தவழும் பூம்பொழில்களைப் பெற்ற மாளவ நாட்டை அந்த நாயனார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

"கருந டம்கழி வாகஏகிய பின் கலந்த வனங்களும்
திருந தித்துறை யாவையும் பயில்சேண்நெடுங் கிரிவட்
டையும்

பெரு நலம்கிளர் நாடும் எண்ணில பிற்படச்செறி பொற்பினால்
வருநெ டுங்கதிர் கோலு சோலை மாளவத்தினை நண்ணினார்.''

கருநடம் - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் கருநாடக நாடு. கழிவாக - தமக்குப் பின்னால் இருக்குமாறு; 'கழிந்து போக' எனலும் ஆம். ஏகிய - எழுந்தருளிய. பின் - பிறகு. கலந்த - அந்தக் கருநாடக நாட்டில் சேர்ந்துள்ள. வனங்களும் - காடுகளையும். திரு - அழகிய. நதித்துறை - ஆறுகளினுடைய துறைகள். நதி: ஒருமை பன்மை மயக்கம். துறை: ஒருமை பன்மை மயக்கம். யாவையும் - ஆகிய எல்லாவற்றையும். பயில் - அப்பால் உள்ள. சேண் - ஆகாயத்தினளவும். நெடும் - உயர்ந்து நிற்கும். கிரி - மலை உள்ள. வட்டையும் - வழிகளையும்; ஒருமை பன்மை மயக்கம். பெரு - பெருகியுள்ள. நலம் - நன்மைகள்; ஒருமை பன்மை மயக்கம். கிளர் - கிளர்ச்சியைப் பெற்று எழும். நாடும் - நாடுகளையும்; ஒருமை பன்மை மயக்கம். எண் - கணக்கு. இல - இல்லாதவையாகிய நாடுகள்; இடைக்குறை. பிற்பட - தமக்குப் பின்னால் இருக்க. ச்: சந்தி. செறி - மேலே எழுந்தருளும். பொற்பினால் - தோற்றப் பொலிவோடு; உருபு மயக்கம். வரு - ஆகாயத்தில் உதயமாகி வரும். நெடும் - நீளமாக இருக்கும். கதிர் - கிரணங்களைப் பெற்ற சூரியன்; ஆகுபெயர். கோலு - தலை மேலே தவழும். சோலை - பூம்பொழில்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். மாளவத்தினை - மாளவ நாட்டை. நண்ணினார் - அந்த நாயனார் அடைந்தார்.

அடுத்து உள்ள 352-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அந்த மாளவநாடு முழுவதையும் கடந்து மேலே எழுந்தருளி கடப்பதற்கு அருமையாக இருக்கும் பாலைவனங்களைத் தாண்டி மேலே எழுந்தருளி எல்லா ஊர்களிலும் மிகுதியாக உள்ள முப்பத்திரண்டு தருமங்களை மக்கள் நெடுங்காலமாகப் புரியும் இலாட மாநிலத்தைக் கடந்து மேலே எழுந்தருளி மேகங்கள் சுற்றித் தவழ்ந்த மலையோடு, காடுகளையும், ஆறுகளையும் கடந்து மேலே எழுந்தருளிப் பக்கத்தில் உள்ள செந்தாமரை மலர்கள் மலர்ந்து விளங்கும் வயல்களைப் பெற்ற மத்திய மாநிலத்தை அந்த நாயனார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

"அங்கு முற்றி அகன்று போகி
அருஞ்சு ரங்கள் கடந்துசென்
றெங்கும் மிக்க அறங்கள் நீடும்
இலாட பூமி இகந்துபோய்
மங்குல் சுற்றிய வெற்பி னோடு
வனங்கள் ஆறு கடந்தயற்
பங்க யப்பழ னத்து மத்திய
பைதி ரத்தினை எய்தினார்."

அங்கு - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அந்த மாளவநாடு. முற்றி - முழுவதையும். அகன்று - கடந்து. போகி - மேலே எழுந்தருளி. அரும் - கடப்பதற்கு அருமையாக இருக்கும். சுரங்கள் - பாலைவனங்களை. கடந்து - தாண்டி. சென்று - அப்பால் எழுந்தருளி. எங்கும் - எல்லா ஊர்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். மிக்க - மிகுதியாக உள்ள. அறங்கள் - முப்பத்திரண்டு தருமங்களை; அவை இன்ன என்பதை வேறு ஓரிடத்தில் கூறினோம்; ஆங்குக் கண்டுணர்க. நீடும் - மக்கள் நெடுங்காலமாகப் புரிந்து வரும். இலாடபூமி - இலாட

மாநிலத்தை. இகந்து - கடந்து. போய் - அப்பால் எழுந்தருளி. மங்குல் - மேகங்கள்; ஒருமை பன்மை மயக்கம். சுற்றிய - சுற்றித் தவழ்ந்த. வெற்பினோடு - மலையோடு. வனங்கள் - காடுகளையும். ஆறு - ஆறுகளையும்; ஒருமை பன்மை மயக்கம். கடந்து - தாண்டி எழுந்தருளி. அயல் - பக்கத்தில் உள்ள. பங்கய - செந்தாமரை மலர்களும், வெண்டாமரை மலர்களும் மலர்ந்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பழனத்து - வயல்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். மத்திய பைதிரத்தினை - மத்திய மாநிலத்தை. எய்தினார் - அந்த நாயனார் அடைந்தார்.

பிறகு வரும் 353-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அத்தகைய மத்திய மாநிலமாகிய நாட்டைத் தாண்டி அப்பால் எழுந்தருளிக் கங்கையாற்றை அடைந்து எழுந்தருளி பக்தர்கள் தம்முடைய திருக்கோயிலை வலமாக வரும் மின்னலைப் போல ஒளியை வீசும் சடா பாரத்தைத் தம்முடைய தலையின் மேற் பெற்றவராகிய விசுவநாதர் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் வாரணாசியாகிய காசிக்கு விருப்பத்தோடு எழுந்தருளி அந்த விசுவநாதரை வணங்கி விட்டு தம்மோடு தமக்குப் பின்னால் வந்த பக்தர்களை அந்தக் காசியில் விட்டுவிட்டுக் கங்கையாற்றைத் தாண்டி அப்பால் எழுந்தருளி தம்முடைய திருவுள்ளத்தில் நிலை பெற்று விளங்கும் விருப்பத்தைப் புரியும் நாவில் பேசும் சொற்களுக்கு அரசராகிய திருநாவுக்கரசு நாயனார் எழுந்தருளி மலையைச் சார்ந்த ஒரு பாலைவனத்தையும் முன்பு கடந்து அப்பால் எழுந்தருளினார்.' பாடல் வருமாறு:

"அன்ன நாடு கடந்து கங்கை
அணைந்து சென்று வலங்கொளும்

மின்னு வேணியர் வார ணாசி
விருப்பி னோடு பணிந்துடன்
பின்ன ணைந்தவர் தம்மை அங்கண்
ஒழிந்து கங்கை கடந்துபோய்
மன்னு காதல்செய் நாவின் மன்னவர்
வந்து கற்சுரம் முந்தினார்.''

அன்ன - அத்தகைய. நாடு - மத்திய மாநிலமாகிய நாட்டை. கடந்து - தாண்டி அப்பால் எழுந்தருளி. கங்கை - கங்கையாற்றை. அணைந்து - அடைந்து. சென்று - எழுந்தருளி. வலம்கொளும் - பக்தர்கள் தம்முடைய திருக்கோயிலை வலமாக வரும். கொளும்: இடைக்குறை. மின்னு - மின்னலைப் போல ஒளியை வீசும். வேணியர் - சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற் பெற்றவராகிய விசுவநாதர். வாரணாசி - திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் வாரணாசியாகிய காசிக்கு. வாரணாசி - வரணை, அசி என்னும் இரண்டு ஆறுகள் கலக்கும் இடம். விருப்பினோடு - விருப்பத்தோடு. பணிந்து - எழுந்தருளி அந்த விசுவநாதரை வணங்கி விட்டு. உடன் - தம்மோடு. பின் - தமக்குப் பின்னால். அணைந்தவர் தம்மை - வந்தவர்களாகிய பக்தர்களை; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசை நிலை. அங்கண் - அந்தக் காசியில். ஒழிந்து - விட்டு விட்டு. கங்கை - கங்கையாற்றை. கடந்து - தாண்டி. போய் - அப்பால் எழுந்தருளி. மன்னு - தம்முடைய திருவுள்ளத்தில் நிலைபெற்று விளங்கும். காதல் - விருப்பத்தை. செய் - புரியும். நாவின் - நாவினால் பேசும் சொற்களுக்கு; ஆகுபெயர். மன்னவர் - அரசராகிய திருநாவுக்கரசு நாயனார். வந்து - எழுந்தருளி. கற்சுரம் - மலையைச் சார்ந்த ஒரு பாலைவனத்தையும். முந்தினார் - முன்பு கடந்து அப்பால் எழுந்தருளினார்.

*பிறகு வரும் 354-ஆம் கவியின் கருத்து வருமாறு:*

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் ஆகாயத்தின் மேல் சென்று உயரமாக வளர்ந்து நிற்கும் பலவகை மரங்கள் உள்ள காடாகி எந்த இடங்களிலும் மனிதர்களால் செல்ல முடியாது இருக்கும் வழி அல்லாமலும் தம்முடைய திருவுள்ளத்தில் புரிந்தருளுகின்ற விருப்பம் விளங்கி மேல் எழத் தழைகளும், வேர்களும், பழங்களும் ஆகிய உண்ணுவதற்கு உரியவற்றையும் விலக்கி விட்டுத் தன்னந்தனியாக நடந்து நேரே இரவு நேரத்திலும் பெருமையைப் பெற்று விளங்கும் கயிலாயமாகிய சிறந்த மலையை அடைபவராகி எழுந்தருளினார்.' பாடல் வருமாறு:

"மாகம்மீது வளர்ந்த கானகம்
ஆகி எங்கும் மனித்தரால்
போக லாநெறி அன்றியும்புரி
கின்ற காதல் பொலிந்தெழச்
சாக மூலப லங்கள்துய்ப்பன
வும்த விர்ந்துத னித்துநேர்
ஏகி னார்இர வும்பெருங்கயிலைக்
குலக்கிரி எய்துவார்."

மாகம்மீது - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் ஆகாயத்திற்கு மேல் சென்று. வளர்ந்த - உயரமாக வளர்ந்து நிற்கும் பலவகை மரங்கள் உள்ள; ஆகுபெயர். அந்த மரங்களாவன: தேவதாரு மரம், தேக்க மரம், வேங்கை மரம், வாகை மரம், தென்ன மரம், பன மரம், மா மரம், பலா மரம், பல வகையான வாழை மரங்கள், தமால மரம், கடப்ப மரம், வேப்ப மரம், நெட்டிலிங்க மரம், அசோக மரம், நெல்லி மரம், நாவல் மரம், விளா மரம், வில்வ மரம், அரச மரம், பூவரச மரம், ஆல மரம், மருத

மரம் முதலியவை. கானகம் ஆகி - காடாகி. எங்கும் - எந்த இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். மனித்தரால் - மனிதர்களால். 'மனிதர்' என்பது செய்யுளோசையை நோக்கி 'மனித்தர்' என வந்தது. போகலா - செல்ல முடியாத. அலா: இடைக்குறை. நெறி - வழி. அன்றியும் - அல்லாமலும். புரிகின்ற - தம்முடைய திருவுள்ளத்தில் புரிந்தருளுகின்ற. காதல் - விருப்பம். பொலிந்து எழ - விளங்கி மேல் எழ. ச்: சந்தி. சாகம் - தழைகளும்; ஒருமை பன்மை மயக்கம். மூல - வேர்களும்; ஒருமை பன்மை மயக்கம். பலங்கள் - பழங்களும் ஆகிய. துய்ப்பனவும் - உண்ணுவதற்கு உரியவற்றையும். தவிர்ந்து - விலக்கி விட்டு. தனித்து - தன்னந்தனியாக நடந்து. நேர் - நேராக. இரவும் - இரவு நேரத்திலும். பெரும் - பெருமையைப் பெற்று விளங்கும். கயிலை - கயிலாய மலையாகிய. க்: சந்தி. குலக்கிரி - சிறப்பைப் பெற்ற மலையை. எய்துவார் - அடைபவராகி; முற்றெச்சம். ஏகினார் - அந்த நாயனார் எழுந்தருளினார்.

பிறகு வரும் 355-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு உண்டாகிய நிறைந்த இருட்டில் எழுந்தருளும் அந்தத் திருவதிகை வீரட்டானேசுவரருடைய பக்தராகிய திருநாவுக்கரசு நாயனாரை அடைந்து அவருக்கு முன்னால் கெட்டவையாக உள்ள சிங்கம், புலி, ஓநாய், வேங்கைப் புலி, சிறுத்தை, கழுதைப் புலி, வரிக்கழுதை, ஒட்டைச் சிவிங்கி முதலிய மிருகங்கள் அவருக்கு வலிமையைப் பெற்ற செயலாகிய கொலையைப் புரிவதற்குப் பயப்பட்டன; விடத்தை உமிழும் வாய்களைப் பெற்ற நாகப் பாம்புகள் தங்களுடைய நாக மாணிக்கங்களாகக் கொண்ட படங்களைக் கொண்ட திருவிளக்குக்களை ஏந்திக் கொண்டிருந்தன; இந்தக்

கயிலாய மலைக்கு வந்து தங்களுடைய திருவடிகள் நிலத்தில் படியுமாறு தேவர்களானாலும் தனியாக வந்து சேர அருமையாக இருக்கும் பாலைவனத்தை அடைந்தார்.' பாடல் வருமாறு:

"ஆய ஆரிரு ளின்கண் ஏகும்அவ்
வன்பர்தம்மை அணைந்து முன்
தீய வாயவி லங்கு வன்தொழில்
செய்ய அஞ்சின; நஞ்சுகால்
வாய நாக மணிப்ப ணங்கொள்வி
ளக்கெ டுத்தன; வந்துகால்
தோய வானவ ராயி னுந்தனி
துன்ன ரும்சுரம் முன்னினார்."

ஆய - அவ்வாறு உண்டாகிய. ஆர் - நிறைந்த. இருளின் கண் - இரவு நேரத்து இருட்டில். ஏகும் - எழுந்தருளும். அவ்வன்பர் தம்மை - அந்தத் திருவதிகை வீரட்டானேசுவரருடைய பக்தராகிய திருநாவுக்கரசு நாயனாரை. தம்: அசைநிலை. அணைந்து - அடைந்து. முன் - அந்த நாயனாருக்கு முன்னால். தீயவாய - கெட்டவையாக உள்ள. விலங்கு - சிங்கம், புலி, ஓநாய், வேங்கைப் புலி, சிறுத்தை, கழுதைப் புலி, வரிக்கழுதை, ஒட்டைச் சிவிங்கி, காண்டாமிருகம் முதலிய மிருகங்கள்; ஒருமை பன்மை மயக்கம். வன் - வலிமையைப் பெற்ற. தொழில் - செயலாகிய கொலையை. செய்ய - புரிவதற்கு; வினையாலணையும் பெயர். அஞ்சின - பயப்பட்டன. நஞ்சு - விடத்தை. கால் - உமிழும். வாய - வாய்களைப் பெற்ற. நாகம் - நாகப் பாம்புகள்; ஒருமை பன்மை மயக்கம். மணி - தங்களுடைய நாக மாணிக்கங்களாகக் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பணம்கொள் - படங்களைக் கொண்ட; ஒருமை பன்மை

மயக்கம். விளக்கு - திருவிளக்குகளை; ஒருமை பன்மை மயக்கம். எடுத்தன - ஏந்திக் கொண்டிருந்தன. வந்து - இந்தக் கயிலாய மலைக்கு வந்து. கால் - தங்களுடைய திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். தோய - தரையில் படியுமாறு. வானவராயினும் - தேவர்களானாலும்; ஒருமை பன்மை மயக்கம். தனி - தனியாக வந்து. துன்னரும் - சேர அருமையாக இருக்கும். சுரம் - பாலைவனத்தை. முன்னினார் - அந்த நாயனார் அடைந்தார்.

பிறகு உள்ள 356-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'வெம்மையாக இருக்கும் கிரணங்களை வீசும் சூரியன் பிரகாசிக்கும் பகல் நேரத்தில் அந்தப் பாலைவனத்தில் வெப்பமாகிய கிரணங்களை வீசும் அந்தச் சூரியன் கிரணங்கள் பக்கங்களில் பரவியிருந்து எந்த இடங்களிலும் மிகுதியாக உள்ள மலைகளில் உள்ள குகைகளில் நாகப் பாம்புகளினுடைய எல்லையில் புகுந்து தீயை எழுப்புகின்றன; பொங்கி எழும் நெருப்பைப் போலச் சுட்டுத் துன்புறுத்தும் பாலை நிலத்தில் வெப்பமான நிழலில் புகுந்த இடத்துக்கு நுழையும் பகலவனாகிய சூரியன் வீசும் சிவப்பான கிரணங்கள் நெருப்பைப் போலச் சுடும் அந்த வடக்குத் திசையில் உறுதியைப் பெற்ற உண்மையாகிய தவம் புரிந்த தவசியாராகிய திருநாவுக்கரசு நாயனார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

"வெங் கதிர்ப் பகலக் கடத்திடை
வெய்ய வன்கதிர் கைபரந்
தெங்கும் மிக்க பிளப்பி னாகர்தம்
எல்லை புக்கெரி கின்றன
பொங் கழற்றெறு பாலை வெந்நிழல்
புக்க சூழல் புகும்பகல்

செங் கதிர்க்கனல் போலும் அத்திசை
திண்மை மெய்த்தவர் நண்ணினார்.''

வெம் - வெம்மையாக இருக்கும். கதிர் - கிரணங்களை வீசும் சூரியன் பிராசிக்கும்; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பகல் - பகல் நேரத்தில். அக்கடத்திடை - அந்தப் பாலைவனத்தில். வெய்யவன் - வெப்பமாக உள்ள கிர்ணங்களை வீசும் அந்தச் சூரியன். கதிர் - கிரணங்கள்; ஒருமை பன்மை மயக்கம். கைபரந்து - பக்கங்களில் பரவியிருந்து. கை: ஒருமை பன்மை மயக்கம். எங்கும் - எந்த இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். மிக்க - மிகுதியாக உள்ள. பிளப்பில் - மலைகளில் உள்ள குகைகளில்; ஒருமை பன்மை மயக்கம். தம்: அசைநிலை. எல்லை - எல்லையில். புக்கு - புகுந்து. எரிகின்றன - தீயை எழுப்புகின்றன. பொங்கு - பொங்கி எழும். அழல் - நெருப்பைப் போல; உவமஆகு பெயர். தெறும் - சுட்டுத் துன்புறுத்தும். பாலை - பாலை நிலத்தில். வெந்நிழல் - வெப்பமான மரங்களினுடைய நிழலில். புக்க - புகுந்த. சூழல் - இடத்துக்குள். புகும் - நுழையும். பகல் - பகலவனாகிய சூரியன்; ஆகுபெயர். செம் - வீசும் சிவப்பாக இருக்கும். கதிர் - கிரணங்கள்; ஒருமை பன்மை மயக்கம். க்: சந்தி. கனல் போலும் - நெருப்பைப் போலச் சுடும். அத்திசை - அந்த வடக்குத் திசையில். திண்மை - உறுதியைப் பெற்ற. மெய் - உண்மையாகிய. த்: சந்தி. தவர் - தவசியாராகிய திருநாவுக்கரசு நாயனார். நண்ணினார் - அடைந்தார்.

பிறகு வரும் 357-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் இவ்வாறு இரவு நேரத்திலும், பகல் நேரத்திலும் கடப்பதற்கு அருமையாக இருக்கும் பாலை நிலத்தை அடைபவராகி தம்முடைய

செந்தாமரை மலர்களை ஒத்த திருவடிகள் கணுக்கால்களின் வரையிலும் பசையைப் பெற்ற தசைகள் தேய்ந்து போகவும் பார்வதி தேவியைத் தம்முடைய வாம பாகத்தில் எழுந்தருளச் செய்திருப்பவராகிய கைலாச பதியார் எழுந்தருளியிருக்கும் பெருமையைப் பெற்ற வெள்ளி மலையாகிய கயிலாய மலைக்கு எழுந்தருளத் தாம்கொண்ட எண்ணத்தை அந்த நாயனார் மறந்து விடுவாரோ? தம்முடைய கைகள் இரண்டையுமே கொண்டு தாவி அந்தக் கயிலாய மலைக்குமேல் எழுந்தருளுதலைப் பெற்றார்.' பாடல் வருமாறு:

"இங்ங னம்இர வும்பகற் பொழு
துமம ரும்சுரம் எய்துவார்
பங்க யம்புரை தாள் பரட்டன
வும்ப சைத்தசை தேயவும்
மங்கை பங்கர்தம் வெள்ளி மால்வரை
வைத்த சிந்தை மறப்பரோ?
தங்க ரங்கள் இரண்டு மேகொடு
தாவி ஏகுதல் மேவினார்."

இங்ஙனம் - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் இவ்வாறு. இரவும் - இரவு நேரத்திலும். பகற்பொழுதும் - பகல் வேளையிலும். அரும் - கடப்பதற்கு அருமையாக இருக்கும். சுரம் - பாலை நிலத்தை. எய்துவார் - அடைபவராகி; முற்றெச்சம். பங்கயம் - செந்தாமரை மலர்களை; ஒருமை பன்மை மயக்கம். புரை - போன்ற. தாள் - தம்முடைய திருவடிகள்; ஒருமை பன்மை மயக்கம். பரட்டு - கணுக்கால்களின்; ஒருமை பன்மை மயக்கம். அளவும் - வரையிலும். பசை - இளகுதலைப் பெற்ற. த்: சந்தி. தசை - தசைகளின்; ஒருமை பன்மை மயக்கம். தேயவும் - தேய்ந்து போகவும். மங்கை - பார்வதி

தேவியை. பங்கர் தம் - தம்முடைய வாமபாகத்தில் எழுந்தருளச் செய்பவராகிய கைலாச பதியார். தம்: அசைநிலை. வெள்ளி மால்வரை - பெருமையைப் பெற்ற வெள்ளி மலையாகிய கயிலாச மலைக்கு. வைத்த - எழுந்தருளத் தாம் கொண்ட. சிந்தை - தம்முடைய திருவுள்ளத்தில் எழுந்த எண்ணத்தை; ஆகு பெயர். மறப்பரோ - அந்த நாயனார் மறந்து விடுவாரோ. தம் - தம்முடைய. கரங்கள் இரண்டுமே - கைகள் இரண்டை யுமே. கொடு - கொண்டு. தாவி - தாவிச் சென்று. ஏகுதல் - அந்தக் கயிலாய மலைக்கு மேல் எழுந்தருளுதலை. மேவினார் - பெற்றார்.

பிறகு வரும் 358-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'தம்முடைய இரண்டு கைகளும் மணிக்கட்டுக்கள் தளர்ச்சியை அடைந்து இருக்கவே அவை கரைந்து சிதைந்து போன பிறகு உண்மையைச் சேர்ந்து எழுகின்ற தம்முடைய திருவுள்ளத்தில் உண்டாகிய பக்தியினால் விருப்பம் மேலும் மேலும் பொங்கி எழ மொய்த்துள்ள கடுமையாகிய நெருப்பைப் போலச் சுடும் வெம்மையைப் பெற்ற பருக்கைக் கற்களில் மூண்டு எழும் புகையைப் பெற்ற பாலைவனத்தை அடைந்தே மையைப் போன்ற கரிய நிறத்தைப் பெற்ற திருக்கழுத்தை உடையவராகிய திருவதிகை வீரட்டானேசுவரருடைய பக்தராகிய திருநாவுக்கரசு நாயனார் மேலே எழுந்தருளுவதற்காக வருத்தத்தை அடைந்து தம்முடைய மார்பால் உந்திக் கொண்டு எழுந்தருளினார்.' பாடல் வருமாறு:

"கைக ளும்மணி பந்த சைந்துற
வேக ரைந்துசி தைந்தபின்
மெய்க லந்தெழு சிந்தை அன்பின்
விருப்பு மீமிசை பொங்கிட

மொய்க டுங்கனல் வெம்ப ரற்புகை
மூளும் அத்தம் முயங்கியே
மைகொள் கண்டர்தம் அன்பர் செல்ல
வருந்தி உந்தினர் மார்பினால்.''

கைகளும் - தம்முடைய இரண்டு கைகளும். மணிபந்து - மணிக்கட்டுக்கள்; ஒருமை பன்மை மயக்கம். அசைந்துறவே - தளர்ச்சியை அடைந்து இருக்கவே. கரைந்து சிதைந்த - கரைந்து சிதையை அடைந்து போன. பின் - பிறகு. மெய் - உண்மையை. கலந்து - சேர்ந்து. எழு - எழுகின்ற. சிந்தை - தம்முடைய திருவுள்ளத்தில் உண்டாகிய. அன்பின் - பக்தியினால். விருப்பு - விருப்பம். மீமிசை - மேலும் மேலும். பொங்கிட - பொங்கி எழ. மொய் - மொய்த்துள்ள. கடும் - கடுமையாகிய. கனல் - நெருப்பை. வெம் - வெம்மையைப் பெற்ற. பரற்புகை - பருக்கைக் கற்களில்; ஒருமை பன்மை மயக்கம். மூளும் - மூண்டு எழும் புகையைப் பெற்ற. அத்தம் - பாலைவனத்தை. முயங்கியே - அடைந்தே. மை - மையைப் போன்ற கரிய நிறத்தை; உவம ஆகு பெயர். கொள் - பெற்ற. கண்டர் தம் - திருக்கழுத்தை உடையவராகிய திருவதிகை வீரட்டானேசுவரருடைய. தம்: அசைநிலை. அன்பர் - பக்தராகிய திருநாவுக்கரசு நாயனார். செல்ல - அப்பால் எழுந்தருளுவதற்காக. வருந்தி - வருத்தத்தை அடைந்து. மார்பினால் - தம்முடைய மார்பால். உந்தினர் - உந்திக் கொண்டு எழுந்தருளினார்.

பிறகு உள்ள 359-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'அந்த நேர்மையான செயல்களைப் புரிந்தருளுப வராகிய திருநாவுக்கரசு நாயனார் தம்முடைய மார்பும் தசைகளும் நைவைப் பெற்றுத் தரையில் சிந்தி விழ வரிந்து கட்டிய தம்முடைய திருமேனியில் உள்ள எலும்புகள்

வளையவும், ஒப்புக் கூறுவதற்கு அருமையாக இருக்கும் குறித்த எண்ணம் நிலைத்து நின்ற தம்முடைய திருவுள்ளத்தில் இருந்த பக்தி ஈசனாகிய கைலாச பதியைத் தேடிக் கொண்டு எழுந்தருளும் தம்முடைய திருவுள்ளத்தில் நெடுங்காலமாக இருக்கும் பேராவல் அந்தக் கைலாச மலையில் தம்முடைய உயிரைக் கொண்டு உந்தித் தள்ளும் தம்முடைய திருமேனி முழுவதும் உள்ள மாமிசங்கள் கெட்டுப் போகவும், கடத்தற்கு அருமையாக இருக்கும் அந்தக் காட்டில் புரண்டு புரண்டு அந்த நாயனார் எழுந்தருளினார்.' பாடல் வருமாறு:

"மார்ப மும்தசை நைந்து சிந்தி
வரிந்த என்பு முரிந்திட
நேர்வ ருங்குறி நின்ற சிந்தையின்
நேசம் ஈசனை நேடுநீ
டார்வம் அங்குயிர் கொண்டு கைக்கும்
உடம்ப டங்கவும் ஊன்கெடச்
சேர்வ ரும்பழு வம்பு ரண்டுபு
ரண்டு சென்றனர் செம்மையோர்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. செம்மையோர் - நேர்மையாகிய செயல்களைப் புரிந்தருளுபவராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார். மார்பமும் - தம்முடைய மார்பும். தசை - தசைகளும்; ஒருமை பன்மை மயக்கம். நைந்து - நெகிழ்ச்சியைப் பெற்று. சிந்தி - தரையில் சிந்தி விழ. வரிந்த - வரிந்து கட்டிய. என்பு - தம்முடைய திருமேனியில் உள்ள எலும்புகள்; ஒருமை பன்மை மயக்கம். முரிந்திட - வளைந்து போகவும். நேர்வு அரும் - ஒப்புக் கூறுவதற்கு அருமையாக இருக்கும். குறி - தாம் குறித்த எண்ணம். நின்ற - நிலைத்து நின்ற. சிந்தையின் -

தம்முடைய திருவுள்ளத்தில் இருந்த. நேசம் - பக்தி. ஈசனை - பரமேசுவரனாகிய கைலாச பதியை. நேடு - தேடிக் கொண்டு எழுந்தருளும். நீடு - தம்முடைய திருவுள்ளத்தில் நெடுங்காலமாக இருந்து வரும். ஆர்வம் - பேராவல். அங்கு - அந்தக் கைலாச மலையில். உயிர்கொண்டு - தம்முடைய உயிரைக் கொண்டு. உகைக்கும் - உந்தித் தள்ளும். உடம்பு - தம்முடைய திருமேனி. அடங்கவும் - முழுவதும் உள்ள. ஊன் - மாமிசங்கள்; ஒருமை பன்மை மயக்கம். கெட - கெட்டுப் போகவும். ச்: சந்தி. சேர்வரும் - கடத்தற்கு அருமையாக இருக்கும். பழுவம் - அந்தக் காட்டில்; 'பாலைவனத்தில்' எனலும் ஆம். புரண்டு புரண்டு - பலமுறை புரண்டு கொண்டு. சென்றனர் - அந்த நாயனார் எழுந்தருளினார்.

பிறகு வரும் 360-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்தக் கைலாய மலையில் உள்ள வெளியிடத்தில் புரண்டு புரண்டு கொண்டு அந்தத் திருநாவுக்கரசு நாயனார் செல்கின்ற நீளமான இடத்தில் தம்முடைய திருமேனியில் உள்ள உறுப்புக்கள் எல்லா இடங்களிலும் கரைந்து போகவும், சொல்லுவதற்கு அருமையாக இருக்கும் புகழைப் பெற்ற கயிலாய மலையினுடைய அடிவாரத்தில் தம்முடைய திருவுள்ளம் போய் அடையும் ஆகையால் தம்முடைய திருமேனியில் உள்ள இடங்களில் இருக்கும் அங்கங்கள் அழிந்து போன பிறகு மெல்ல மெல்ல உந்தித் தள்ளும் இடைவிடாத முயற்சியும் தப்பிப் போக வேறு ஒரு செயலும் இல்லாமல் அந்தக் காட்டு வழியில் செந்தமிழ்ச் சொற்களை ஆள்பவராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார் தங்கிக் கொண்டிருந்தார்.' பாடல் வருமாறு:

"அப்பு றம்புரள் கின்ற நீளிடை
அங்கம் எங்கும் அரைந்திடச்

செப்ப ரும்கயி லைச்சி லம்படி
சிந்தைசென் றுறும் ஆதலால்
மெய்ப்பு றத்தில் உறுப்ப ழிந்தபின்
மெல்ல உந்தும் முயற்சியும்
தப்பு றச்செயல் இன்றி அந்நெறி
தங்கி னார்தமி ழாளியார்.''

இந்தப் பாட்டில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. அப்புறம் - அந்தக் கயிலாச மலையில் உள்ள வெளியிடத்தில். புரள்கின்ற - புரண்டு புரண்டு கொண்டு அந்தத் திருநாவுக்கரசு நாயனார் செல்கின்ற. நீள் - நீளமான. இடை - இடத்தில். அங்கம் - தம்முடைய திருமேனியில் உள்ள உறுப்புகள்; ஒருமை பன்மை மயக்கம். எங்கும் - எல்லா இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். அரைந்திட - கரைந்து போகவும். ச்: சந்தி. செப்பரும் - செப்ப அரும்; தொகுத்தல் விகாரம். கயிலைச் சிலம்பு - புகழைப் பெற்ற கயிலாய மலையினுடைய. அடி - அடிவாரத்தில். சிந்தை - தம்முடைய திருவுள்ளம். சென்று உறும் - போய் அடையும். ஆதலால் - ஆகையால். மெய் - தம்முடைய திருமேனியில். ப்: சந்தி. புறத்தில் - வெளியில் உள்ள இடங்களில். உறுப்பு - உள்ள அங்கங்கள்; ஒருமை பன்மை மயக்கம். அழிந்த பின் - அழிந்து போன பிறகு. மெல்ல - மெல்ல மெல்ல. உந்தும் - உந்தித் தள்ளும். முயற்சியும் - இடைவிடாத முயற்சியும். தப்புற - தப்பிப் போக. ச்: சந்தி. செயல் - வேறு ஒரு செயலும். இன்றி - செய்வது இல்லாமல். அந்நெறி - அந்தக் காட்டு வழியில். தமிழ் - செந்தமிழ்ச் சொற்களை; ஆகுபெயர். ஆளியார் - ஆட்சி புரிபவராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார். தங்கினார் - தங்கிக் கொண்டிருந்தார்.

பிறகு வரும் 361-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அத்தகைய பான்மையைப் பெற்றவராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார் கயிலாய மலையை அடைவதற்குத் தம்முடைய திருவருளை வழங்காத வராகிய கைலாச பதியார் நிலை பெற்று விளங்கும் இனிய சொற்சுவை, பொருட்சுவை என்னும் இரண்டு சுவைகளையும் பெற்றவையாகிய செந்தமிழ் மொழியில் அமைந்த திருப்பதிகம் இந்தப் பூ மண்டலத்தின் மேல் வாழும் மக்கள் பிறகும் வாழ்த்திப் பாடுமாறு நல்ல ஆழமாக இருக்கும் நீர் நிரம்பிய தடாகம் ஒன்றையும் தம்முடன் எடுத்துக் கொண்டு பல பாம்புகளை அணிந்து கொண்டிருக்கும் பரமேசுவரராகிய கைலாசபதியார் ஒரு முனிவராகும் வேடத்தோடு அங்கே நடந்து எழுந்தருளி னார்.' பாடல் வருமாறு:

"அன்ன தன்மையர் கயிலையை
அணைவதற் கருளார்
மன்னு தீந்தமிழ் புவியின்மேற்
பின்னையும் வழுத்த
நன்னெ டும்புனல் தடமும்ஒன்
றுடன்கொடு நடந்தார்
பன்ன கம்புனை பரமரோர்
முனிவராம் படியால்."

அன்ன - அத்தகைய. தன்மையர் - பான்மையைப் பெற்றவராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார். கயிலையை - கயிலாய மலையை. அணைவதற்கு - அடைவதற்கு. அருளார் - தம்முடைய திருவருளை வழங்காதவராகிய கைலாச பதியார். மன்னு - நிலைபெற்று விளங்கும். தீம் - இனிமையாக இருக்கும் சொற்சுவை, பொருட்சுவை என்னும் இரண்டு சுவைகளையும் பெற்றவையாகிய. தமிழ - செந்தமிழ் மொழியில் அமைந்த

திருப்பதிகம்; ஆகுபெயர். புவியின் மேல் - இந்தப் பூ மண்டலத்தின் மேல் வாழும் மக்கள்; இட ஆகுபெயர். பின்னையும் - பிறகும். வழுத்த - வாழ்த்திப் பாடுமாறு. நன் - நல்ல. நெடும் - அழமாக இருக்கும். புனல் - நீர் நிரம்பிய. தடமும் ஒன்று - தடாகம் ஒன்றையும். உடன் கொடு - தம்முடன் எடுத்துக் கொண்டு. பன்னகம் - பல பாம்புகளை; ஒருமை பன்மை மயக்கம். புனை - அணிந்து கொண்டிருக்கும். பரமர் - பரமேசுவரராகிய கைலாச பதியார். ஓர் - ஒரு. முனிவர் ஆம் - முனிவர் ஆகும். படியால் - வேடத்தோடு; உருபு மயக்கம். நடந்தார் - அங்கே நடந்து எழுந்தருளினார்.

பிறகு வரும் 362-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'அவ்வாறு நடந்து வந்த கைலாச பதியார் அந்தத் திருநாவுக்கரசு நாயனாருடைய பக்கத்தில் உறுமாறு அடைந்து அவருக்கு நேரில் நின்று கொண்டு தம்முடைய திருவுள்ளம் வருந்தி அந்தத் திருநாவுக்கரசு நாயனாரைப் பார்த்து அந்த நாயனாரும் தமக்கு எதிரில் தம்மைப் பார்க்கத் திருவாய் மலர்ந்தருளிச் செய்பவராகி, ''இந்த உன்னுடைய உடம்பில் உள்ள அங்கங்கள் யாவும் அழிந்து போகுமாறு நீ வருத்தத்தை அடைந்த வகையினால் இந்த வெம்மையான பாலைவனத்தை அடைந்ததற்கு என்ன காரணம்?'' என்று அந்தக் கைலாச பதியார் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

''வந்து மற்றவர் மருங்குற
அணைந்துநேர் நின்று
நொந்து நோக்கி மற்றவர்எதிர்
நோக்கிட நுவல்வார்
'சிந்தி இவ்வுறுப் பழிந்திட
வருந்திய திறத்தால்

இந்த வெங்கடத் தெய்திய
தென்?'என இசைத்தார்.''

வந்து - அவ்வாறு நடந்து வந்து. மற்று: அசைநிலை. அவர் மருங்கு - கைலாச பதியார் அந்தத் திருநாவுக்கரசு நாயனாருடைய பக்கத்தில். உற - உறுமாறு. அணைந்து - அடைந்தருளி. நேர் - அந்த நாயனாருக்கு நேரில். நின்று - நின்று கொண்டு. நொந்து - வருத்தத்தை அடைந்து. நோக்கி - அந்த நாயனாரைப் பார்த்து. மற்று: அசைநிலை. அவர் எதிர் - அந்த நாயனாரும் தமக்கு எதிர். நோக்கிட - தம்மைப் பார்க்க. நுவல் வார் - திருவாய் மலர்ந்தருளிச் செய்பவராகி; முற்றெச்சம். சிந்தி இவ்வுறுப்பு - இந்த உன்னுடைய உடம்பில் உள்ள அங்கங்கள் யாவும். உறுப்பு: ஒருமை பன்மை மயக்கம். அழிந்திட - அழிந்து போகுமாறு. வருந்திய - நீ வருத்தத்தை அடைந்த. திறத்தால் - வகையினால். இந்த வெம் - இந்த வெம்மையாக இருக்கும். கடத்து - பாலைவனத்தை. எய்தியது - அடைந்ததற்கு. என் - என்ன காரணம். என - என்று; இடைக்குறை. இசைத்தார் - அந்தக் கைலாச பதியார் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

அடுத்து உள்ள 363-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'அழுக்கு இல்லாத மரவுரியாகிய உடையும், தம்முடைய திருமார்பில் மூன்று நூல்களைப் பெற்ற பூணூலும், ஒளியைப் பெற்ற சடாபாரத்தைக் கொண்ட திருமுடியும் விபூதியும் தம்முடைய திருமேனியில் விளங்கும் வண்ணம் ஒரு குற்றமும் இல்லாத உண்மையாகிய தவசியாராக வேடம் கொண்டு நின்று கொண்டிருந்த அந்தக் கைலாச பதியாரைப் பார்த்துத் தாம் திருவாய் மலர்ந்தருளிச் செய்வதற்கு உண்டாகியதாகிய ஓர் உணர்ச்சி எழ அந்தப் பெரியவராகிய திருநாவுக்கரசு

நாயனார் பின்வருமாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்பவரானார்.' பாடல் வருமாறு:

"மாசில் வற்கலை ஆடையும்
மார்பில்முந் நூலும்
தேசு டைச்சடை மவுலியும்
நீறும்மெய் திகழ
ஆசில் மெய்த்தவ ராகிநின்
றவர்தமை நோக்கிப்
பேச உற்றதோர் உணர்வுற
விளம்புவார் பெரியோர்."

மாசு - சிறிதளவு அழுக்கும். இல் - இல்லாத; கடைக்குறை. வற்கலை - மரவுரியாகிய. ஆடையும் - உடையும். மார்பில் - தம்முடைய திருமார்பில். முந்நூலும் - மூன்று நூல்களைப் பெற்ற பூணூலும். நூல்: ஒருமை பன்மை மயக்கம். தேசு உடை - ஒளியைப் பெற்ற. தேசு - 'தேஜஸ்' என்ற வடசொல்லின் திரிபு. ச்: சந்தி. சடை - சடாபாரத்தைக் கொண்ட. மவுலியும் - திருமுடியும். நீறும் - விபூதியும். மெய் - தம்முடைய திருமேனியில். திகழ - விளங்கும் வண்ணம். ஆசு - ஒரு குற்றமும். இல் - இல்லாத; கடைக்குறை. மெய் - உண்மையாகிய. த: சந்தி. தவர் ஆகி - தவசியாராக வேடம் கொண்டு. நின்றவர்தமை - நின்று கொண்டிருந்த அந்தக் கைலாசபதியாரை. தமை: இடைக்குறை. தம்: அசைநிலை. நோக்கி - பார்த்து. ப்: சந்தி. பேச - தாம் திருவாய் மலர்ந்தருளிச் செய்வதற்கு. உற்றது ஓர் - உண்டாகியதாகிய ஓர். உணர்வு - உணர்ச்சி. உற - எழ. பெரியோர் - அந்தப் பெருமையைப் பெற்றவராகிய திருநாவுக்கரசு நாயனார். விளம்புவார் - பின் வருமாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்பவரானார்.

பிறகு வரும் 364-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

.'''வண்டுகள் மொய்த்து உலாவும் கூந்தலைப் பெற்ற இமய மலையரசனுடைய புதல்வியாகிய பார்வதி தேவியோடு வடக்குத் திசையில் விளங்கும் திருக்கயிலாயத்தில் எழுந்தருளியிருக்கும் தேவர்களினுடைய தலைவராகிய கைலாச பதியார் வீற்றிருக்கும் அந்த இயல்பை அந்தக் கைலாச பதியாருடைய அடிமையாகிய அடியேன் தரிசித்து அடியேனுடைய கைகளை அடியேனுடைய தலையின் மேல் வைத்துக் கூப்பிக் கும்பிடுவதற்காக உள்ளத்தில் எழுந்த விருப்பத்தோடும் ஆர்வத்தோடும் இந்தக் கயிலாய மலையை அடியேன் அடைந்தேன்; அடியேன் அடியேனுடைய உள்ளத்தில் கொண்டுள்ள அடியேன் குறித்த எண்ணம் இதுதான் முனிவரே'' என்று அந்தத் திருநாவுக்கரசு நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்ய.' பாடல் வருமாறு:

'''வண்டு லாம்குழல் மலைமக
ளுடன்வட் கயிலை
அண்டர் நாயகர் இருக்கும்அப்
பரிசவர் அடியேன்
கண்டு கும்பிட விருப்பொடும்
காதலின் அடைந்தேன்
கொண்ட என்குறிப் பிதுமுனி
யே!' எனக்கூற.''

இந்தப் பாடல் குளகம். வண்டு - வண்டுகள்; ஒருமை பன்மை மயக்கம். உலாம் - மொய்த்து உலாவும். குழல் - கூந்தலைப் பெற்ற. மலைமகளுடன் - இமய மலையரசனுடைய புதல்வியாகிய பார்வதி தேவியோடு. மலை: திணை மயக்கம். வடகயிலை - வடக்குத் திசையில் விளங்கும் திருக்கயிலாயத்தில். அண்டர் - எல்லாத் தேவர்களுக்கும்; ஒருமை பன்மை மயக்கம். நாயகர் -

தலைவராகிய கைலாசபதியார். இருக்கும் - வீற்றிருக்கும். அப்பரிசு - அந்த இயல்பை. அவர் - அந்தக் கயிலாச பதியாருடைய. அடியேன் - அடிமையாகிய அடியேன். கண்டு - அந்தக் கைலாச பதியாரைத் தரிசித்து. கும்பிட - அடியேனுடைய கைகளை அடியேனுடைய தலையின் மேல் வைத்துக் கும்பிடுவதற் காக. விருப்பொடும் - அடியேனுடைய உள்ளத்தில் எழுந்த விருப்பத்தோடும். காதலின் - பேராவலோடும். அடைந் தேன் - இந்தக் கயிலாய மலைக்கு வந்து அடியேன் சேர்ந்தேன். கொண்ட - அடியேன் அடியேனுடைய உள்ளத் தில் கொண்டுள்ள. என் குறிப்பு - அடியேன் குறித்த எண்ணம். இது - இது தான். முனியே - முனிவரே. என - என்று; இடைக்குறை. க்: சந்தி. கூற - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்ய.

பிறகு வரும் 365-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'''அந்தப் பெருமையைப் பெற்ற கயிலாய மலையாக விளங்குவது இந்த உலகத்தில் வாழும் மனித இயல்பைப் பெற்ற மக்கள் சென்று சேர்வதற்கு எளியதோ? கூர்மையைப் பெற்ற வேல்களாகிய ஆயுதங்களை ஏந்தும் தேவர்களும் அருகில் செல்வதற்கு அரியது அது; சூரியனுடைய வெயிலைக் கொண்ட வெப்பமாக உள்ள இந்தப் பாலைவனத்துக்கு வந்து என்ன காரியத்தை நீர் செய்துவிட்டீர்?'' என்று அந்தக் கைலாச பதியார் திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு.' பாடல் வருமாறு:

'''கயிலை மால்வரை யாவது
காசினி மருங்கு
பயிலும் மானுடப் பான்மையோர்
அடைவதற் கெளிதோ?

அயில்கொள் வேற்படை அமரரும்
அணுகுதற் கரிதால்;
வெயில்கொள் வெஞ்சுரத் தென்செய்தீர்
வந்?'தென விளம்பி.''

இந்தப் பாடலும் குளகம். கயிலை மால்வரை யாவது - அந்தப் பெருமையைப் பெற்ற மலையாக விளங்குவது. காசினி - இந்தப் பூமண்டலத்தினுடைய. மருங்கு - பக்கத்தில் உள்ள பல ஊர்களில். பயிலும் - வாழும். மானுடப்பான்மையோர் - மனித இயல்பைப் பெற்றவர் களாகிய மக்கள்; ஒருமை பன்மை மயக்கம். அடைவதற்கு - சென்று சேர்வதற்கு. எளிதோ - எளியதாக இருப்பதோ. அயில் - கூர்மையை. கொள் - பெற்ற. வேற்படை - வேல்களாகிய ஆயுதங்களை ஏந்தியிருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். அமரரும் - தேவர்களும்; ஒருமை பன்மை மயக்கம். அணுகுதற்கு - அதனுடைய அருகில் செல்வதற்கு. அரிது - அரியதாக இருப்பது. ஆல்: அசை நிலை. வெயில் - சூரியன் வீசும் வெயிலை. கொள் - கொண்ட. வெம் - வெப்பமாக இருக்கும். சுரத்து வந்து - இந்தப் பாலைவனத்துக்கு நீர் வந்து. என் செய்தீர் - என்ன காரியத்தை நீர் செய்து விட்டீர். என - என்று; இடைக் குறை. விளம்பி - அந்தக் கைலாச பதியார் திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு.

பிறகு உள்ள 366-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'''இந்தக் கயிலாய மலையிலிருந்து திரும்பிச் செல்லும் அந்த அளவுதான் உமக்கு இனிமேல் செய்ய வேண்டிய கடமை'' என்று திகழும் தோள்களையும் மார்பினையும் அந்த மார்பில் புரளும் மூன்று நூல்களைப் பெற்ற பூணூலையும் பெற்றவராகிய அந்த முனிவராக எழுந்தருளிய கைலாசபதியார் திருவாய் மலர்ந்தருளிச்

செய்ய, ''அடியேனை ஆளாகக் கொள்ளும் தலைவனாகிய கயிலாசபதி அந்தக் கயிலாய மலையில் வீற்றிருக்கும் அழகைப் பார்க்காது மாண்டு போகும் இந்த அடியேனுடைய உடம்பைக் கொண்டு திரும்பிச் செல்ல மாட்டேன்'' என்று அந்தத் திருநாவுக்கரசு நாயனார் மறுத்துத் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

'''மீளும் அத்தனை உமக்கினிக்
கடன்' என விளங்கும்
தோளும் ஆகமும் துவளும்முந்
நூல்முனி சொல்ல
'ஆளும் நாயகன் கயிலையில்
இருக்கைகண் டல்லால்
மாளும் இவ்வுடல் கொண்டுமீ
ளேன்'என மறுத்தார்.''

மீளும் - இந்தக் கயிலாய மலையிலிருந்து திரும்பிச் செல்லும். அத்தனை - அந்த அளவுடைய செயல்தான். உமக்கு - உங்களுக்கு. இனி - இனிமேல் செய்ய வேண்டிய. க்: சந்தி. கடன் - கடமை. என - என்று; இடைக்குறை. விளங்கும் - வலிமையைப் பெற்றுத் திகழும். தோளும் - தோள்களையும்; ஒருமை பன்மை மயக்கம். ஆகமும் - திருமார்பையும். துவளும் - அந்த மார்பில் புரளும். முந்நூல் - மூன்று நூல்களைப் பெற்ற பூணூலையும் பெற்றவராகிய; ஆகு பெயர். நூல்: ஒருமை பன்மை மயக்கம். முனி - அந்த முனிவருடைய வேடத்தோடு எழுந்தருளிய கைலாச பதியார். சொல்ல - அவ்வாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்ய. ஆளும் - அடியேனை அடிமையாகக் கொண்டு ஆண்டருளும். நாயகன் - தலைவனாகிய கைலாசபதி. கயிலையில் - அந்தக் கயிலாய

மலையில். இருக்கை - வீற்றிருக்கும் அழகை. கண்டு அல்லால் - தரிசித்தால் அல்லாமல். மாளும் - என்றைக்காவது ஒருநாள் மாண்டு போகும். இவ்வுடல் - இந்த அடியேனுடைய உடம்பை. கொண்டு - தாங்கிக் கொண்டு. மீளேன் - அடியேன் திரும்பிப் போக மாட்டேன். என - என்று; இடைக்குறை. மறுத்தார் - மீண்டும் போக வேண்டுவதே உமக்குக் கடமை என்று அந்தக் கைலாச பதியார் திருவாய் மலர்ந்தருளிச் செய்ததை மறுத்து அந்தத் திருநாவுக்கரசு நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

அடுத்து உள்ள 367-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'அவ்வாறு அந்தத் திருநாவுக்கரசு நாயனாருடைய உறுதியாக உள்ள எண்ணத்தைத் தெரிந்து கொண்டவராகிய அந்தக் கைலாச பதியார் தம்மை அந்த நாயனார் தெரிந்து கொள்ளும் வண்ணம் அந்த இடத்தைவிட்டு அகன்ற பெருமையைப் பெற்ற தவசியாராகிய அந்தக் கைலாசபதி யார் ஆகாயத்தில் மறைந்தருளி நீண்ட தம்முடைய திருவாய் வார்த்தைகளினால், ''புகழோடு ஓங்கி விளங்கும் திருநாவுக்கரசனே, நீர் எழுவீராக'' என அந்தக் கைலாச பதியார் திருவாய் மலர்ந்தருளிச் செய்ய அந்த நாயனார் தீங்குகள் யாவும் அகன்ற திருமேனியைப் பெற்று தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு ஒளியோடு விளங்குவாரானார்.' பாடல் வருமாறு:

''ஆங்கு மற்றவர் துணிவறிந்
தவர்தமை அறிய
நீங்கு மாதவர் விசும்பிடைக்
கரந்துநீள் மொழியால்
'ஓங்கு நாவினுக் கரசனே
எழுந்தீர்' என்றுரைப்பத்

தீங்கு நீங்கிய யாக்கைகொண்
டெழுந்தொளி திகழ்வார்.''

ஆங்கு - அவ்வாறு. மற்று: அசை நிலை. அவர் - அந்தத் திருநாவுக்கரசு நாயனாருடைய. துணிவு - உறுதியாக உள்ள எண்ணத்தை. அறிந்தவர் - தெரிந்து கொண்டவராகிய அந்தக் கைலாச பதியார். தமை - தம்மை; இடைக்குறை. அறிய - அந்த நாயனார் தெரிந்து கொள்ளும் வண்ணம். நீங்கு - அந்த இடத்தை விட்டு அகன்ற. மாதவர் - பெருமையைப் பெற்ற தவசியாராகிய அந்தக் கைலாச பதியார். விசும்பிடை - ஆகாயத்தில். கரந்து - மறைந்தருளி. நீள் - நீண்ட. மொழியால் - தம்முடைய திருவாயிலிருந்து எழும் வார்த்தைகளால்; ஒருமை பன்மை மயக்கம். ஓங்கு - புகழோடு ஓங்கி விளங்கும். நாவினுக்கரசனே - திருநாவுக்கரசனே. எழுந்திர் - நீர் எழுவீராக. என்று - என. உரைப்ப - அந்தக் கைலாசபதியார் திருவாய் மலர்ந்தருளிச் செய்ய. த்: சந்தி. தீங்கு - தேய்ந்து போதல், எலும்புகள் வளைதல் முதலிய தீங்குகள்; ஒருமை பன்மை மயக்கம். நீங்கிய - அகன்ற. யாக்கை - திருமேனியை. கொண்டு - பெற்று. எழுந்து - தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு. ஒளி - பிரகாசத்தோடு. திகழ்வார் - அந்த நாயனார் விளங்குபவரானார்.

பிறகு வரும் 368-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'''அடியேனுடைய தலைவனாகிய கைலாச பதியே, அடியேனை அடிமையாக ஏற்றுக் கொண்டு, திருவருளை வழங்கிய அமுதத்தைப் போன்றவனே, ஆகாயத்தில் மறைந்து திருவருளை வழங்கும் இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங்களுக்கும் தலைவனாக விளங்குபவனே, அடியேனுடைய கண்களால் அழகிய கயிலாய மலையை

அடியேன் அடைந்து தேவரீரை வணங்குமாறு விரும்பித் திருவருளைப் புரிவாயாக'' என்று அந்தத் திருநாவுக்கரசு நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்து விட்டு அந்தக் கைலாச பதியை வணங்கினார்.' பாடல் வருமாறு:

"'அண்ண லேஎனை ஆண்டுகொண்
டருளிய அமுதே,
விண்ணி லேமறைந் தருள்புரி
வேதநா யகனே
கண்ணி னால்திருக் கயிலையில்
இருந்தநின் கோலம்
நண்ணி நான்தொழ நயந்தருள்
புரி'எனப் பணிந்தார்.''

அண்ணலே - அடியேனுடைய தலைவனாகிய கைலாசபதியே. எனை - அடியேனை; இடைக்குறை. ஆண்டுகொண்டு அருளிய - அடிமையாக ஏற்றுக் கொண்டு திருவருளை வழங்கிய. அமுதே - அமுதத்தைப் போன்ற வனே; உவம ஆகுபெயர். விண்ணில் - ஆகாயத்தில். ஏ: அசைநிலை. மறைந்து அருள்புரி - மறைந்து திருவருளை வழங்கும். வேத - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் என்னும் நான்கு வேதங் களுக்கும்; ஒருமை பன்மை மயக்கம். நாயகனே - தலைவனாக விளங்குபவனே. கண்ணினால் - அடியே னுடைய கண்களால்; ஒருமை பன்மை மயக்கம். திரு - அழகிய. க்: சந்தி. கயிலையில் - கயிலாய மலையில். இருந்த - எழுந்தருளியிருந்த. நின் - தேவரீருடைய. கோலம் - திருக்கோலத்தை. நண்ணி - இந்தக் கயிலாய மலையை அடியேன் அடைந்து. நான் - அடியேன். தொழ - தேவரீரை வணங்குமாறு. நயந்து - விரும்பி. அருள் புரி - திருவருளைப் புரிவாயாக. என - என்று அந்தத் திருநாவுக்

கரசு நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்துவிட்டு; இடைக்குறை. ப்: சந்தி. பணிந்தார் - அந்தக் கைலாசபதி யினுடைய திருவடிகளில் விழுந்து வணங்கினார்.

அமுதே: ''அருத்தனை அறவனை அமுதனை.'', ''தேனுமாய் அமுதாகி நின்றான்.'', ''எம்பிரான் எனக்கமுதம் ஆவானும்.'', ''கருகாவூர் அமுதர்.'' என்று திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும், ''வேதி குடி ஐயனை ஆரா அமுதனை.'', ''அத்தனை ஆரா அமுதினை.'', ''வேதிகுடி அத்தனை ஆரா அமுதினை.'', ''திருவேதிகுடி நண்ணரிய அமுதினை.'', ''வேதிகுடிச் சார்ந்த வயலணி தண்ண முதை.'', ''திருவேதி குடி அரிய அமுதினை.'', ''ஐயனை ஆரா அமுதினை நாமடைந்தாடுதுமே.'', ''பக்தர்கட் கமுதாய பரத்துனை '', ''பைஞ்ஞீலிஎம் ஆர்கிலா அமுதை.'', ''வித்தகர்க் கண்ணித்தாகும் அமுதினை.'', ''உள்ளத்தேறல் அமுத ஒளி.'', ''பருகா அமுதமாம் பாலின் நெய்யாம்.'', ''அம்மை பயக்கும் அமிர்து கண்டாய்.'', ''வானோர்க் கெல்லாம் அதிபதியே ஆரமுதே.'', ''அற்றவர்கட்காரமுதம் ஆனாய் போற்றி.'', ''கரும்புதரு கட்டியையின்னமிர்தை.'', ''ஆரா அமுதமும் ஆனார் தாமே.'', ''ஆரா அமுதே என் ஐயாறனே.'', ''அடியார்கட்காரமுதே.'', ''சார்ந்தார்க்கு இன்ன முதானான் காண்.'', ''அனலாடி காண் அடியார்க் கமுதானான்காண்.'', ''அத்தேனை அமுதத்தை ஆவின் பாலை.'', ''உளம் குளிரஅமுதூறி அண்ணிப்பாரும்.'', ''என் பிறவித் துயர் தீர்ப்பானை இன்னமுதை.'', ''அடைந்தவர்க் கமுதொப் பானை.'', ''ஆராத இன்னமுதை அம்மான் தன்னை.'', ''மாணிக் கருளீன்ற ஆரமுதை.'', ''ஆராத இன்னமுதை அடியார் தம்மேல் வரும் துயர் தவிர்ப்பானை.'', ''தன்னைப் புகழும் அன்பர்க் கின்பமரும் அமுதை.'', ''ஆவின் கீழ்

இருந்தானை அமுதானானை.'' என்று திருநாவுக்கரசு நாயனாரும், ''அடிகேள் என் அமுதே.'', ''இறைவா என் அமுதே.'', ''வீரட்டானத் தெம் அண்ணா என் அமுதே.'', ''அயனே என் அமுதே.'', ''ஆரூர் அத்தா ஐயாற்றமுதே.'', ''ஏழிசையாய் இசைப் பயனாய் இன்னமுதாய்.'', ''அங்கை நெல்லியின் பழத்திடையமுதே.'', ''நள்ளாறனை அமுதை.'', ''நிற்பதத்தினடி நள்ளாறனை அமுதை.'', ''நாதனை நள்ளாறனை அமுதை.'', ''சோதி நள்ளாறனை அமுதை.'', ''கோதிலா அமுதே அருள் பெருகு கோலமே.'' என்று சுந்தரமூர்த்தி நாயனாரும், ''ஆரா அமுதே அளவிலாப் பெம்மானே.'', ''என் சிந்தையுள் ஊற்றானை உண்ணார் அமுதே.'', ''அருள் நனிசுரக்கும் அமுதே காண்க.'', ''இன்றெனக் காரமுதானாய் போற்றி.'', ''அரசைபோற்றி அமுதே போற்றி.'', ''கண்ணமுதக் கடலே போற்றி.'', ''ஆரா அமுதே அருளே போற்றி.'', ''மாலமுதப் பெருங்கடலே.'', ''தேனே அமுதே கரும்பின் தெளிவே.'', ''தேனே அமுதே சிந்தைக் கரியாய்.'', ''தேனே அமுதே கரும்பின் தெளிவே தித்திக்கும் மானே.'', ''அப்பனே எனக் கமுதனே.'', ''தேனையும் பாலையும் கன்னலையும் அமுதத்தையும் ஒத்து.'', ''அத்தன் ஆனந்தன் அமுதன்.'', ''அங்கண் அரசை அடியோங்கட் காரமுதை.'', ''கண்ணாரமுதமுமாய் நின்றான்.'', ''என் உளம் புகுந்த ஆரா அமுதாய்.'', ''என்னுட் கலந்து தேனாய் அமுதமுமாய்.'', ''மனத்தமுதாம் சங்கரனை.'', ''உத்தர கோச மங்கை ஆரா அமுதின் அருட்டாளினை.'', ''அமுதே ஊறிநின்றென்னுள் எழுபரஞ் சோதி.'', ''திரை பொரா மன்னும் அமுதத் தென்கடலே.'', ''குறைவிலா நிறைவே கோதிலா அமுதே.'', ''ஆரா அமுதே ஆசைப்பட்டேன்.'', ''தன்னைத் தந்த என்னாரமுதை.'', ''ஆண்டு கொண்ட என்னாரமுதை.'', ''நிறையின அமுதை அமுதின்

சுவையை.'', ''அந்தமில் அமுதே அருட்பெரும் பொருளே ஆரமுதே.'', ''உள்குவார் மனத்தின் ஊறுசுவை அளிக்குமா ரமுதே.'', ''கோதி லமுதானானைக் குலாவு தில்லை கண்டேனே.'', ''கடல்வாய் அமுதென்கோ.'', ''பாண்டியற் காரமுதாம் ஒருவரை.'', ''அன்பினில் விளைந்த ஆரமுதே.'', ''தேனாய் இன்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான்.'', ''ஆருருவாய என்னாரமுதே.'', ''ஆரா அமுதாய் அமைந்தன்றே.'' என்று மாணிக்க வாசகரும், ''அப்பனே அம்பலத்தமுதே.'', ''திணிமணி நீல கண்டத்தென் அமுதே.'', ''ஆடரவாட ஆடும் அம்பலத் தமுதே.'' என்று திருமாளிகைத் தேவரும், ''இமையவர்க் கரசை என்னுயிர்க் கமுதினை.'', ''திருவாவடுதுறை அமுதே.'', ''தேனே அமுதே என் சித்தமே.'', ''பாலும் அமுதமும் தேனுமாய்.'' என்று சேந்தனாரும், ''எனக்கே கன்னலும் பாலும் தேனும் ஆரமுதம் கனியுமாய் இனிமை ஆயினையே.'', ''பாலுமாய் அமுதாம் பன்னகா பரணன்.'', ''கன்னலே தேனே அமுதமே.'', ''முக்கட் பகைவனாம் அகவுயிர்க் கமுதாம்.'', ''அமுதாங் கேதாய் தலைப் பட்டங்குருகி ஒன்றாய தன்மையில்.'', ''அன்பரானவர்கள் பருகும் ஆரமுதே.'', ''கட்டியர் அட்ட ஆரமிர்தர்.'' என்று கருவூர்த்தேவரும், ''பருகு தோற முதமொத் தவர்க்கே தித்தியா இருக்கும்.'' என்று பூந்துருத்தி நம்பி காட நம்பியும், ''தில்லை அம்பலத்துள் என்னாரமுதை.'', ''அடியார்க்கருளும் தெளிவாரமுதே.'' என்று கண்டராதித் தரும், ''அருவாய் உருவாய் ஆரா அமுதமுமாய்.'', ''பாலினை இன்னமுதைப் பரமாய பரஞ்சுடரை.'' என்று திருவாவிய முதனாரும், ''என அகம் நெக ஊறும் அமிர்தினுக்கு.'', ''ஆவிக்கமுதை என் ஆர்வத்தனத் தினை.'', ''என் மனத்தகத்தே பாலும் அமுதமும் ஒத்து நின்றானுக்கே பல்லாண்டு கூறுதுமே.'' என்று

சேந்தனாரும், ''அப்பனே நந்தியை ஆராஅமுதினை.'', ''அளித்தமுதூறிய ஆதிப்பிரானை.'', ''உண்ணீரமுதம் உறும் ஊறலை.'', ''வாவிய பேரமுதாகும் மதரமும் போலும்.'' என்று திருமூலரும், ''ஆரூர் அமர்ந் துறை அமுதன்.'', ''அலை புனல் ஆரூர் அமர்ந்துறை அமுதன்.'' என்று சேரமான் பெருமாள் நாயனாரும், ''களி வந்தமுதூறி.'', ''தெளி அமுதத்தின் கொழுஞ்சுவை நீடிய தில்லைநகரிற் செம்பொன் அம்பலம் மேவிய சிவனை.'', ''அடியவர்க் கமிர்தவாரி.'', ''அணைதொறும் சிறக்கும் அமிர்தே போற்றி.'' என்று பட்டினத்துப் பிள்ளையாரும், ''அமுதத் திருநடர்க்கு.'' என்று நம்பியாண்டார் நம்பியும், ''உய்யக் கொண்ட கோதிலா அமுதே.'', ''வோர்க் கமுதம் அன்ன செல்வனார் திருக்காளத்தி ஆறு சேர்சடையார்.'', ''திருவதிகை வீரட்டானத் தமுதை.'', ''அடியவர்தம் கண்ணாரமுதை.'', ''அண்ணலே எனை ஆண்டு கொண்டருளிய அமுதே.'', ''கண்ணாரமுதுண்டார் காலம் பெற அழுதார்.'', ''காரோணத்தாரமுதை.'', ''கோதிலா ஆரமுதைக் கோமளக் கொம்புடன் கூடக் கும்பிட்டேத்தி.'', ''திருக்கபாலீச் சரத்தமுதை.'', ''கண்ணார்ந்த இன்னமுதைக் கையாரத் தொழுதிறைஞ்சி.'' என்று சேக்கிழாரும் பாடியருளிய வற்றைக் காண்க.

பிறகு உள்ள 369-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு தம்மைத் தரையில் விழுந்து வணங்கிவிட்டுப்பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டிருந்த தம்முடைய திருத்தொண்டராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனாரைப் பார்த்தருளி ஆகாயமாகிய இடத்தில் எழுந்து கேட்ட பெருமையைப் பெற்ற அழகிய அசரீரி வாக்கினால் இறைவராகிய கைலாசபதியார், ''நீ இந்தப் பொய்கையில் முழுகி எம்மைக் கயிலாய

மலையில் எழுந்தருளியிருந்த அந்த முறையைக் குற்றம் இல்லாத சீர்த்தியைப் பெற்ற திருவையாற்றில் தரிசிப்பாயாக.'' என்று அந்தக் கைலாசபதியார் அந்த நாயனாருக்குக் கட்டளையிட்டருளினார்.' பாடல் வருமாறு:

''தொழுதெ ழுந்தநற் றொண்டரை
நோக்கிவிண் டலத்தில்
எழுபெ ருந்திரு வாக்கினால்
இறைவர்இப் பொய்கை
முழுகி நம்மைநீ கயிலையில்
இருந்தஅம் முறைமை
பழுதில் சீர்திரு வையாற்றிற்
காண்கெனப் பணித்தார்.''

தொழுது - அவ்வாறு தம்மைத் தரையில் விழுந்து வணங்கிவிட்டு. எழுந்த - பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டிருந்த. நல் - நல்ல. தொண்டரை - தம்முடைய திருத்தொண்டராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனாரை. நோக்கி - பார்த்தருளி. விண்தலத்தில் - ஆகாயமாகிய இடத்தில். எழு - எழுந்து கேட்ட. பெரும் - பெருமையைப் பெற்று விளங்கும். திரு - அழகிய. வாக்கினால் - ஓர் அசரீரி வாக்கினால். இறைவர் - இறைவராகிய கைலாச பதியார். இப்பொய்கை - இந்தப் பொய்கையில். பொய்கை - மனிதர் ஆக்காத நீர்நிலை. முழுகி - முழுகிவிட்டு. நம்மை - எம்மை. நீ கயிலையில் - நீ கயிலாய மலையில். இருந்த - யாம் எழுந்தருளியிருந்த. அம்முறைமை - அந்த அழகிய விதத்தை. பழுது - குற்றம். இல் - இல்லாத; கடைக்குறை. சீர் - சீர்த்தியைப் பெற்ற. த்: சந்தி. திருவையாற்றில் - பஞ்ச நதத்தலமாகிய திருவையாற்றில். காண்க என - காண்பாயாக என்று.

காண்கென: காண்க என; தொகுத்தல் விகாரம். என: இடைக்குறை. ப்: சந்தி. பணித்தார் - அந்தக் கைலாச பதியார் அந்த நாயனாருக்குக் கட்டளையிட்டருளினார்.

பிறகு வரும் 370-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் இடப வாகனத்தை ஓட்டுபவராகிய அந்தக் கைலாசபதியார் திருவாய் மலர்ந்தருளிச் செய்த கட்டளையைத் தம்முடைய தலையின்மேற் கொண்டு தரையிலிருந்து எழுந்து நின்றுகொண்டு அந்தக் கைலாச பதியாரை வணங்கிவிட்டு, ''வேற்றுமாகி விண்ணாகி நின்றார்'' என்ற செய்யுட் சொற்களைப் பெற்ற ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளி விருப்பத்தை அடைந்து பேராற்றலைப் பெற்ற அந்தத் தலைவராகிய கைலாச பதியாருக்குரிய ந, ம, சி, வா, ய என்னும் ஐந்து எழுத்துக்கள் அடங்கிய பஞ்சாட்சரத்தை உச்சரித்து, பக்கத்தில் உள்ள விசாலமான நீர் நிரம்பியுள்ள பொய்கையில் அந்தக் கைலாச பதியார் இட்டருளிய கட்டளையினால் முழுகினார்.' பாடல் வருமாறு:

''ஏற்றி னார்அருள் தலைமிசைக்
கொண்டெ ழுந்திறைஞ்சி
'வேற்று மாகிவிண் ணாகி'நின்
றார்'மொழி விரும்பி
ஆற்றல் பெற்றஅவ் வண்ணலார்
அஞ்செழுத் தோதிப்
பாற்ற டம்புனற் பொய்கையில்
மூழ்கினார் பணியால்.''

ஏற்றினார் - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் இடப வாகனத்தை ஓட்டுபவராகிய அந்தக் கைலாசபதியார். அருள் - திருவாய் மலர்ந்தருளிச் செய்த கட்டளையை.

தலைமிசைக் கொண்டு - தம்முடைய தலையின் மேற்கொண்டு. எழுந்து - தரையிலிருந்து எழுந்து நின்றுகொண்டு. இறைஞ்சி - அந்தக் கைலாசபதியாரை அந்த நாயனார் வணங்கிவிட்டு. 'வேற்றுமாகி விண்ணாகி நின்றார்' மொழி - 'வேற்றுமாகி விண்ணாகி நின்றார்' என்ற செய்யுட் சொற்களைப் பெற்ற. மொழி: ஒருமை பன்மை மயக்கம். விரும்பி - பாடியருளி விருப்பத்தை அடைந்து. ஆற்றல் பெற்ற - பேராற்றலைப் பெற்றுள்ள. அவ்வண்ண லார் - அந்தத் தலைவராகிய கைலாசபதியாருக்கு உரிய. அஞ்சு எழுத்து - ந, ம, சி, வா, ய என்னும் ஐந்து எழுத்துக்கள் அடங்கிய பஞ்சாட்சரத்தை. எழுத்து: ஒருமை பன்மை மயக்கம் . ஓதி - உச்சரித்து. ப்: சந்தி. பால் - பக்கத்தில் உள்ள. தடம் - விசாலமாக இருக்கும். புனல் - நீர் நிரம்பியுள்ள. பொய்கையில் - மனிதர் ஆக்காத ஒரு நீர் நிலையில். பணியால் - அந்தக் கைலாசபதியார் தமக்கு இட்ட கட்டளையினால். மூழ்கினார் - அந்த நாயனார் முழுகினார்.

இந்தப் பாடலில் குறிப்பிடப் பெற்ற பாசுரம் திருநாவுக்கரசு நாயனார் திருக்கயிலாயத்தைப் பற்றிப் பாடியருளிய போற்றித் திருத்தாண்டகங்களில் ஒன்று. அது வருமாறு:

"வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி
மீளாமே ஆள்என்னைக் கொண்டாய் போற்றி
ஊற்றாகி உள்ளே ஒளித்தாய் போற்றி
ஓவாத சத்தத் தொலியே போற்றி
ஆற்றாகி அங்கே அமர்ந்தாய் போற்றி
ஆறங்கம் நால்வேதம் ஆனாய் போற்றி
காற்றாகி எங்கும் கலந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி."

இந்தத் திருப்பதிகத்தில் வரும் இறுதித் திருத்தாண்டகம் வருமாறு:

"உண்ணா துறங்கா திருந்தாய் போற்றி
ஓதாதே வேதம் உணர்ந்தாய் போற்றி
எண்ணா இலங்கைக்கோன் தன்னைப் போற்றி
இறவிரலால் வைத்துகந்த ஈசா போற்றி
பண்ணார் இசையின்சொற் கேட்டாய் போற்றி
பண்டேஎன் சிந்தை புகுந்தாய் போற்றி
கண்ணாய் உலகுக்கு நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி."

இந்தத் தலத்தைப் பற்றி அந்த நாயனார் பாடியருளிய மற்றொரு போற்றித் திருத்தாண்டகம் வருமாறு:

"மாலை எழுந்த மதியே போற்றி
மன்னிஎன் சிந்தை இருந்தாய் போற்றி
மேலை வினைகள் அறுப்பாய் போற்றி
மேலாடு திங்கள் முடியாய் போற்றி
ஆலைக் கரும்பின் தெளிவே போற்றி
அடியார்கட் காரமுதம் ஆனாய் போற்றி
காலை முளைத்த கதிரே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி."

அந்த நாயனார் பாடியருளிய வேறொரு போற்றித் திருத்தாண்டகம் வருமாறு:

"பாட்டான நல்ல தொடையாய் போற்றி
பரிசை அறியாமை நின்றாய் போற்றி
சூட்டான திங்கள் முடியாய் போற்றி
தூமாலை மத்தம் அளந்தாய் போற்றி
ஆட்டான அஞ்சும் அமர்ந்தாய் போற்றி
அடங்கார் புரமெரிய நக்காய் போற்றி

காட்டானை மெய்த்தோல் உரித்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.''

பிறகு வரும் 371-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'எல்லாத் தேவர்களுக்கும் முதல் தேவராகிய அந்தக் கைலாசபதியார் வழங்கிய திருவருளினுடைய பெருமையை ஆர் அறிந்தவர்? மெய்ஞ்ஞானத்தைப் பெற்றவரும், பெருமையை உடைய தவசியாராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார் குளிர்ச்சியைப் பெற்றதும், செந்தாமரை மலர், வெண்டாமரை மலர், ஆம்பல் மலர், அல்லி மலர், நீலோற்பல மலர், குமுத மலர், செங்கழுநீர் மலர் முதலிய நீர்ப் பூக்கள் மலர்ந்திருக்கும் அந்தப் பொய்கையில் முழுகிவிட்டு மாதாகிய அறம் வளர்த்த நாயகியைத் தம்முடைய வாம பாகத்தில் எழுந்தருளச் செய்வித்தவராகிய பஞ்சநதேசுவரர் மகிழ்ச்சியை அடைந்து திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருவையாற்றில் உள்ள ஒரு வாவியின் மேல் தோன்றி இந்தப் பூமண்டலத்தில் வாழும் மக்கள் எல்லாரும் வியப்பை அடையுமாறு எழுந்தார்.' பாடல் வருமாறு:

''ஆதி தேவர்தம் திருவருட்
பெருமையார் அறிந்தார்?
போத மாதவர் பனிமலர்ப்
பொய்கையில் மூழ்கி
மாதொர் பாகனார் மகிழும்ஐ
யாற்றிலோர் வாவி
மீது தோன்றி வந்தெழுந்தனர்
உலகெலாம் வியப்ப.''

ஆதி தேவர் தம் - எல்லாத் தேவர்களுக்கும் முதல்வராகிய அந்தக் கயிலாசபதியார். தம்: அசைநிலை.

திருவருள் - வழங்கிய திருவருளினுடைய. பெருமை - பெருமையை. யார் - ஆர். அறிந்தார் - தெரிந்து கொண்டவர். போத - மெய்யான சிவஞானத்தைப் பெற்ற. மா - பெருமையை உடைய. தவர் - தவசியாராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார். பனி - குளிர்ச்சியைப் பெற்ற. மலர் - செந்தாமரை மலர், வெண்டாமரை மலர், ஆம்பல் மலர், அல்லி மலர், நீலோற்பல மலர், குமுத மலர், செங்கழுநீர் மலர் முதலிய நீர்ப்பூக்கள் மலர்ந்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். ப்: சந்தி. பொய்கையில் - அந்தப் பொய்கையில். இந்தப் பொய்கை அந்தக் கைலாசபதியார் காட்டியருளியது. மூழ்கி - மூழ்கி விட்டு. மாது - மாதாகிய அறம் வளர்த்த நாயகியை. ஓர் பாகனார் - தம்முடைய ஒரு பாகமாகிய வாம பாகத்தில் எழுந்தருளச் செய்வித்தவராகிய பஞ்சநதேசுவரர். மகிழும் - மகிழ்ச்சி அடைந்து திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும். ஐயாற்றில் - திருவையாற்றில் உள்ள. ஓர் - ஒரு. வாவி - வாவியினுடைய. மீது - மேல். உலகு - இந்தப் பூ மண்டலத்தில் வாழும் மக்கள்; இடஆகு பெயர். எலாம் - எல்லாரும்; இடைக்குறை. வியப்ப - வியப்பை அடையும் வண்ணம். தோன்றி வந்து எழுந்தனர் - தம்முடைய தோற்றத்தை அளித்து வந்து அந்த நாயனார் எழுந்தார்.

பிறகு வரும் 372-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் நறுமணம் கமழும் செந்தாமரை மலர், வெண்டாமரை மலர், ஆம்பல் மலர், அல்லி மலர், நீலோற்பல மலர், குமுத மலர், செங்கழுநீர் மலர் முதலிய நீர்ப்பூக்கள் மலர்ந்திருக்கும் அந்த வாவியினுடைய கரைக்கு ஏறிவந்து எல்லாத் தேவர்களினுடைய தலைவராகிய அந்தக் கயிலாசபதியார் தமக்கு வழங்கிய திருவருளினுடைய பெருமையைத் தெரிந்து

கொள்பவராகி, 'அடியேங்களுடைய தலைவனாகிய கைலாசபதி வழங்கும் கருணையோ இந்த வாவியில் அடியேன் முழுகுமாறு புரிந்தருளிய இந்தச் செயல்?' என்று அந்த நாயனார் தம்முடைய திருவுள்ளத்தில் எண்ணி தம்முடைய இரண்டு கண்களிலிருந்தும் பொங்கி எழும் தாரை தாரையாக வழியும் நீர் நிரம்பிய வாவியில் அமிழ்ந்து மூழ்கிவிட்டுப் பிறகு அந்த வாவியிலிருந்து எழுந்துவரும் திருவடிவத்தை உடையவர் ஆனார் அந்த நாயனார்.' பாடல் வருமாறு:

"வம்பு லாம்மலர் வாவியின்
கரையில் வந்தேறி
உம்பர் நாயகர் திருவருட்
பெருமையை உணர்வார்
'எம்பி ரான்தரும் கருணைகொல்
இது?'என இருகண்
பம்பு தாரை நீர்வாவியிற்
படிந்தெழும் படியார்."

வம்பு - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் நறுமணம். உலாம் - பரவிக் கமழும். மலர் - செந்தாமரை மலர், வெண்டாமரை மலர், ஆம்பல் மலர், அல்லி மலர், நீலோற் பல மலர், குமுத மலர், செங்கழுநீர் மலர் முதலிய நீர்ப் பூக்கள் மலர்ந்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். வாவியின் - அந்த வாவியினுடைய. கரையில் வந்து ஏறி - கரைக்கும் ஏறி வந்து. கரையில்: உருபு மயக்கம். உம்பர் - எல்லாத் தேவர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். நாயகர் - தலைவராகிய அந்தக் கயிலாசபதியார். திருவருள் - தமக்கு வழங்கிய திருவருளினுடைய. பெருமையை - பெருமையினை. உணர்வார் - தெரிந்து கொள்பவராகி; முற்றெச்சம். எம் - அடியேங்களுடைய; இது சேக்கிழார்

தம்மையும் வேறு தொண்டர்களையும் சேர்த்துக் கூறியது. பிரான் - தலைவனாகிய அந்தக் கைலாசபதி. தரும் - வழங்கியருளும். கருணைகொல் - கருணையோ. இது - இந்த வாவியில் அடியேன் முழுகுமாறு புரிந்தருளிய இந்தச் செயல். என - என்று அந்த நாயனார் தம்முடைய திருவுள்ளத்தில் எண்ணி; இடைக்குறை. இருகண் - தம்முடைய இரண்டு கண்களிலிருந்தும்; கண்: ஒருமை பன்மை மயக்கம். பம்பு - பொங்கி எழும். தாரை - தாரை தாரையாக வழியும். நீர் - நீர் நிரம்பியுள்ள. வாவியில் - அந்த வாவியில். படிந்து - அமிழ்ந்து முழுகிவிட்டு. எழும் - அந்த வாவியிலிருந்து எழுந்து வரும். படியார் - திருவடிவத்தை உடையவர் ஆனார் அந்த நாயனார்.

பிறகு வரும் 373-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'நெருங்கியிருக்கும் நீளமாகிய துவசங்கள் காற்றில் பறக்கும் திருவீதிகள் பொலிந்துள்ள திருவையாற்றைத் தாம் எழுந்தருளும் இடமாகப் பெற்ற தலைவராகிய பஞ்சநதேசுவரருடைய செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்த திருவடிகளை வணங்கும் பொருட்டு அந்தத் திருவையாற்றிற்கு எழுந்தருளி வந்து அடைபவராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அந்தச் சிவத்தலம் முழுவதும் நின்று கொண்டிருப்பவையும், நடந்து கொண்டிருப்பவையுமாகிய மரம் செடி கொடி ஆகியவையும், ஆடவர்கள், பெண்மணிகள், விலங்குகள், பறவைகள், ஊர்வன, புழுக்கள், பூச்சிகள், நீர்வாழ் பிராணிகள் முதலியவையும் தங்களுடைய பக்கங்களில் வீற்றிருந்த தங்கள் மனைவிகளோடும் விளங்குபவையா கிய அவற்றை அந்த நாயனார் பார்த்தார்.' பாடல் வருமாறு:

"மிடையும் நீள்கொடி வீதிகள் விளங்கிய ஐயா
றுடைய நாயகர் சேவடி பணியவந் துறுவார்

அடைய அப்பதி நிற்பவும் சரிப்பவு மான
புடைஅ மர்ந்ததம் துணையொடும் பொலிவன கண்டார்."

மிடையும் - நெருங்கியிருக்கும். நீள் - நீளமாகிய. கொடி - துவசங்கள் காற்றில் பறக்கும்; ஒருமை பன்மை மயக்கம். வீதிகள் - திருவீதிகள். விளங்கிய - பொலிந்துள்ள. ஐயாறு - திருவையாற்றை. உடைய - தாம் எழுந்தருளும் இடமாகப் பெற்ற. நாயகர் - தம்முடைய தலைவராகிய பஞ்சநதேசுவரருடைய. சேவடி - செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்த திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். பணிய - வணங்கும் பொருட்டு. வந்து - அந்தத் திருவையாற்றிற்கு எழுந்தருளி வந்து. உறுவார் - அடைபவராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார். அடைய அப்பதி - அந்தச் சிவத்தலம் முழுவதும். நிற்பவும் - நின்று கொண்டிருப்பவையும். சரிப்பவும் - சஞ்சரித்துக் கொண்டிருப்பவையும். ஆன - ஆக உள்ள மரம் செடி கொடி ஆகியவையும், ஆடவர்கள், பெண்மணிகள், விலங்குகள், பறவைகள், ஊர்வன, புழுக்கள், பூச்சிகள், நீர்வாழ் பிராணிகள் முதலியவையும். புடை - தங்களுடைய பக்கங்களில்; ஒருமை பன்மை மயக்கம். அமர்ந்த - வீற்றிருந்த. தம் - தங்களுடைய. துணையொடும் - மனைவிகளோடும்; ஒருமை பன்மை மயக்கம். பொலிவன - விளங்குபவையாகிய அவற்றை. கண்டார் - அந்த நாயனார் பார்த்தார்.

இந்தப் பாடலில் குறிப்பிட்ட செய்தியை உணர்த்தும் பாசுரம் காந்தாரப் பண்ணில் திருவையாற்றைப் பற்றி அந்தத் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளியது. அது வருமாறு:

"மாதர்ப் பிறைக்கண்ணி யானை
மலையான் மகளொடும் பாடிப்

போதொடு நீர்சுமந் தேத்திப்
புகுவா றவர்பின் புகுவேன்
யாதும் சுவடுப டாமல்
ஐயா றடைகின்ற போது
காதல் மடப்பிடி யோடும்
களிறு வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதம்
கண்டறி யாதன கண்டேன்.''

மற்றொரு பாசுரம் வருமாறு:

''போழிளங் கண்ணியி னானைப்
பூந்துகி லாளொடும் பாடி
வாழியம் போற்றிஎன் றேத்தி
வட்டமிட் டாடா வருவேன்
ஆழி வலவன்நின் றேத்தும்
ஐயா றடைகின்ற போது
கோழி பெடையொடும் கூடிக்
குளிர்ந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதம்
கண்டறி யாதன கண்டேன்.''

பின்னும் ஒரு பாசுரம் வருமாறு:

''எரிப்பிறைக் கண்ணியி னானை
ஏந்திழை யாளொடும் பாடி
முரித்த இலயங்கள் இட்டு
முகமலர்ந் தாடா வருவேன்
அரிந்தொ முகும்வெள் ளருவி
ஐயாற டைகின்ற போது
வரிக்குயில் பேடையொ டாடி
வைகி வருவன கண்டேன்

கண்டே னவர்திருப் பாதம்
கண்டறி யாதன கண்டேன்.''

பிறகும் ஒரு பாசுரம் வருமாறு:

''பிறையிளம் கண்ணியி னானைப்
பெய்வளை யாளொடும் பாடித்
துறையிளம் பனிமலர் தூவித்
தோளைக் குளிரத் தொழுவேன்
அறையிளம் பூங்குயில் ஆறும்
ஐயா றடைகின்ற போது
சிறையிளம் பெடையோ டாடிச்
சேவல் வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதம்
கண்டறி யாதன கண்டேன்.''

அடுத்து வரும் பாசுரம் வருமாறு:

''ஏடு மதிக்கண்ணி யானை
ஏந்திழை யாளொடும் பாடிக்
காடொடு காடும் மலையும்
கைதொழு தாடா வருவேன்
ஆடல் அமர்ந்துறை கின்ற
ஐயா றடைகின்ற போது
பேடை மயிலொடும் கூடிப்
பிணைந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதம்
கண்டறி யாதன கண்டேன்.''

பிறகு வரும் பாசுரம் வருமாறு:

''தண்மதிக் கண்ணியி னானைத்
தையல்நல் லாளொடும் பாடி
உண்மெலி சிந்தைய னாகி

உணரா உருகா வருவேன்
அண்ணல் அமர்ந்துறை கின்ற
ஐயா றடைகின்ற போது
வண்ணப் பகன்றிலொ டாடி
வைகி வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதம்
கண்டறி யாதன கண்டேன்."

பிறகு உள்ள பாசுரம் வருமாறு:

"கடிமதிக் கண்ணியி னானைக்
காரிகை யாளொடும் பாடி
வடிவொடு வண்ணம் இரண்டும்
வாய்வேண் டுவசொல்லி வாழ்வேன்
அடியிணை ஆர்க்கும் கழலான்
ஐயா றடைகின்ற போது
இடிகுரல் அன்னதொர் ஏனம்
இசைந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதம்
கண்டறி யாதன கண்டேன்."

அடுத்து வரும் பாசுரம் வருமாறு:

"விரும்பு மதிக்கண்ணி யானை
மெல்லிய லாளொடும் பாடிப்
பெரும்புலர் காலை எழுந்து
பெறுமலர் கொய்யா வருவேன்
அருங்கலம் பொன்மணி உந்தும்
ஐயா றடைகின்ற போது
கருங்கலை பெடையோ டாடிக்
கலந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதம்
கண்டறி யாதன கண்டேன்."

பிறகு உள்ள பாசுரம் வருமாறு:

"முற்பிறைக் கண்ணியி னானை
மொய்குழ லாளொடும் பாடிப்
பற்றிக் கயிறறுக் கில்லேன்
பாடியும் ஆடா வருவேன்
அற்றருள் பெற்றுநின் றாரோ
டையா றடைகின்ற போது
நற்றுணைப் பெடையோ டாடி
நாரை வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதம்
கண்டறி யாதன கண்டேன்."

பிறகு உள்ள பாசுரம் வருமாறு:

"திங்கள் மதிக்கண்ணி யானைத்
தேமொழி யாளொடும் பாடி
எங்கருள் நல்குங்கொல் எந்தை
எனக்கினி என்னா வருவேன்
அங்கிள மங்கையர் ஆடும்
ஐயா றடைகின்ற போது
பைங்கிளி பெடையோ டாடிப்
பரந்து வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதம்
கண்டறி யாதன கண்டேன்."

இந்தத் திருப்பதிகத்தில் இறுதியில் உள்ள பாசுரம் வருமாறு:

"வளர்மதிக் கண்ணியி னானை
வார்குழ லாளொடும் பாடிக்
களவு படாததொர் காலம்
காண்பான் கடைக்கணிக் கின்றேன்

அளவு படாததொர் அன்பொ
டையா றடைகின்ற போது
இளமண நாகு தழுவி
ஏறு வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதம்
கண்டறி யாதன கண்டேன்.''

பிறகு வரும் 374-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'தங்கம் தோன்றும் இமய மலையரசனுடைய புதல்வியும், பூங்கொடியைப் போன்றவளும் ஆகிய பார்வதி தேவியோடு, அழகிய வெள்ளி மலையாகிய கயிலாய மலையில் எழுந்தருளியிருக்கும் பான்மை ஆகுமாறு பராசத்தியும், சிவபெருமானும் ஆகும் வரலாற்றைப் பெற்று விளங்கும் பலவகையாக உள்ள தன்மையில் இந்த உலகத்தில் தோன்றிய யோனிகள் எல்லாவற்றையும் அந்தக் கயிலாய மலையில் பழகி வாழ்பவற்றை அந்தத் திருநாவுக்கரசு நாயனார் வணங்கி விட்டு, அந்தக் கயிலாய மலையில் தங்கிக் கொண்டிருக் கும் பெரிய தவசியாராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார் தம்முடைய தலைவனாகிய கைலாச பதியினுடைய திருக்கோயிலுக்கு முன்னால் அந்த நாயனார் எழுந்தருளி வந்தார்.' பாடல் வருமாறு:

''பொன்ம லைக்கொடி யுடனமர்
வெள்ளியம் பொருப்பில்
தன்மை யாம்படி சத்தியும்
சிவமுமாம் சரிதைப்
பன்மை யோனிகள் யாவையும்
பயில்வன பணிந்தே
மன்னு மாதவர் தம்பிரான்
கோயில்முன் வந்தார்.''

பொன் - தங்கம் தோன்றும். மலை - இமய மலையரசனுடைய புதல்வியும்; திணை மயக்கம். க்: சந்தி. கொடியுடன் - பூங்கொடியைப் போன்ற பார்வதி தேவியோடும்; உவம ஆகுபெயர். அமர் - எழுந்தருளி யிருக்கும். வெள்ளியம் பொருப்பில் - அழகிய வெள்ளி மலையாகிய கயிலாய மலையில். தன்மை - எழுந்தருளி யிருக்கும் பான்மை. ஆம்படி - ஆகுமாறு. சத்தியும் - பராசத்தியும். சிவமுமாம் - சிவபெருமானுமாகும். சரிதை - வரலாற்றைப் பெற்று விளங்கும். ப்: சந்தி. பன்மை - பலவகையாக உள்ள தன்மையில். என்றது எண்பத்து நான்கு லட்சம் என்பதை. யோனிகள் - பிறந்த பிறப்பைப் பெற்ற உயிர்கள். யாவையும் - எல்லாவற்றையும். பயில்வன - பழகி வாழ்பவற்றை. பணிந்து - வணங்கி விட்டு. ஏ: அசை நிலை. மன்னும் - அந்தக் கயிலாய மலையில் தங்கிக் கொண்டிருக்கும். மா - பெரிய. தவர் - தவசியாராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார். தம் - தம்முடைய. பிரான் - தலைவனாகிய கைலாச பதியி னுடைய. கோயில் - திருக்கோயிலுக்கு. முன் - முன்னால். வந்தார் - அந்த நாயனாா எழுந்தருளி வந்தார்.

பிறகு வரும் 375-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'தாம் பார்க்கும் அந்தப் பெருமையைப் பெற்று விளங்கும் பஞ்சநதீசுவரருடைய திருக்கோயிலும் பெரியதாக விளங்கும் கயிலாய மலையாகி விரும்பி வணங்கும் திருமால் பிரமதேவன், இந்திரன் முதலாக உள்ள பெரியவர்களாக இருக்கும் தேவர்கள் தங்களுடைய திருவுள்ளங்களில் அணிகலனைப் போலக் கொண்டிருக் கும் பக்தியோடு அந்தக் கைலாசபதியை வாழ்த்தித் தோத்திரங்களைத் திருவாய் மலர்ந்தருளிச் செய்து எழும் சத்தம் பொங்கி எழு வஜ்ரத் தூணைப் போன்றவராகிய

கைலாச பதியார் திருவாய் மலர்ந்தருளிச் செய்த பெருமையைப் பெற்ற இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் ஆகிய வேதங்கள் எல்லாம் தனித் தனியாக முழக்கத்தைப் புரிய.' பாடல் வருமாறு:

''காணும் அப்பெருங் கோயிலும்
கயிலைமால் வரையாய்ப்
பேணு மாலயன் இந்திரன்
முதற்பெரும் தேவர்
பூணும் அன்பொடு போற்றிசைத்
தெழும்ஒலி பொங்கத்
தாணு மாமறை யாவையும்
தனித்தனி முழங்க.''

இந்தப் பாடல் குளகம். காணும் - தாம் பார்க்கும். அப்பெரும் - அந்தப் பெருமையைப் பெற்று விளங்கும். கோயிலும் - பஞ்சநதீசுவரருடைய திருக்கோயிலும். கயிலை மால் வரையாய் - பெரியதாக விளங்கும் கயிலாய மலையாக மாறி. ப்: சந்தி. பேணும் - இங்கே வந்து விரும்பி அந்தக் கயிலாய பதியை வணங்கும். மால் - திருமால். அயன் - பிரம தேவன். இந்திரன் - தேவர்களுக்கு அரசனாகிய இந்திரன். முதல் - முதலாக உள்ள. பெரும் - பெருமையைப் பெற்று விளங்கும். தேவர் - தேவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். பூணும் - அணிகலனைப் போலக் கொண்டிருக்கும். அன்பொடு - பக்தியோடு. போற்று - வாழ்த்துக்களை; ஒருமை பன்மை மயக்கம்; முதல் நிலைத் தொழிற்பெயர். இசைத்து - திருவாய் மலர்ந்தருளிச் செய்து. எழும் - எழுந்து கேட்கும். ஒலி - இனிய நாதம். பொங்க - பொங்கி எழ. த்: சந்தி. தாணு - வஜ்ரத்தம்பத்தைப் போன்றவராகிய கைலாசபதியார்; உவம ஆகுபெயர். மா - திருவாய் மலர்ந்தருளிச் செய்த

பெருமையைப் பெற்ற. மறை - இருக்கு வேதம், யஜுர் வேதம், சாம வேதம், அதர்வண வேதம் ஆகிய வேதங்கள்; ஒருமை பன்மை மயக்கம். யாவையும் - எல்லாம். தனித்தனி - தனித்தனியாக. முழங்க - முழக்கத்தை எழுப்ப.

பிறகு வரும் 376-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'தேவர்கள், அசுரர்கள், சித்தர்கள், வித்தியாதரர்கள், யட்சர்கள், அந்தக் கயிலாய மலைக்கு எழுந்தருளும் பெருமையைப் பெற்ற தவசிகளும், முனிவர்களும் பக்கங்கள் எல்லாவற்றிலும் நெருங்கி நின்று கொண்டிருக்க நீலோற்பல மலர்களையும், வாளாயுதங்களையும் போன்ற கண்களைப் பெற்ற தேவலோகத்தில் வாழும் அணங்குகள் இசைக்கும் இசைப் பாடல்களின் இனிய நாதமும், மத்தளத்தின் ஒலியும், கெடுதல் இல்லாத ஏழு சமுத்திரங்கள் முழங்கும் முழக்கத்தைக் காட்டிலும் பெருகி எழும் சத்தம் தழைத்து ஓங்கி எழ.' பாடல் வருமாறு:

"தேவர் தானவர் சித்தர்விச் சாதரர் இயக்கர்
மேவும் மாதவர் முனிவர்கள் புடையெலாம் மிடையக்
காவி வாள்விழி அரம்பையர் கானமும் முழவும்
தாவில் ஏழ்கடல் முழக்கினும் பெருகொலி தழைப்ப."

இந்தப் பாடலும் குளகம். தேவர் - தேவலோகத்தில் வாழும் தேவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். தானவர் - அசுரர்கள்; ஒருமை பன்மை மயக்கம். சித்தர் - சித்தர்கள்; ஒருமை பன்மை மயக்கம். விச்சாதரர் - வித்தியாதரர்கள்; ஒருமை பன்மை மயக்கம். இயக்கர் - யட்சர்கள்; ஒருமை பன்மை மயக்கம். மேவும் - அந்தக் கயிலாய மலைக்குக் கயிலாயபதியை வணங்கும் பொருட்டு எழுந்தருளும். மா - பெருமையைப் பெற்ற. தவர் - தவசிகள்; ஒருமை பன்மை மயக்கம். முனிவர்கள் - முனிவர்கள் ஆகிய இவர்கள்.

புடைஎலாம் - கயிலாய மலையினுடைய பக்கங்கள் எல்லாவற்றிலும். புடை: ஒருமை பன்மை மயக்கம். எலாம்: இடைக்குறை. மிடைய - நெருங்கி நின்று கொண்டிருக்க. க்: சந்தி. காவி - நீலோற்பல மலர்களையும்; ஒருமை பன்மை மயக்கம். வாள் - வாளாயுதங்களையும் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். விழி - கண்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். அரம்பையர் - தேவலோகத்தில் வாழும் அணங்குகள். கானமும் - இசைக்கும் இசைப்பாடல்களின் இனிய நாதமும். முழவும் - மத்தளத்தை வைத்திருப்பவர் அதைக் கொட்டும் முழக்கமும்; ஆகுபெயர். தா - கெடுதல். இல் - இல்லாத; கடைக்குறை. ஏழ் - ஏழு. கடல் - சமுத்திரங்கள்; ஒருமை பன்மை மயக்கம். முழக்கினும் - முழங்கும் முழக்கத்தைக் காட்டிலும். பெருகு - பெருகி எழும். ஒலி - முழக்கம். தழைப்ப - தழைத்து ஓங்கி எழ.

பிறகு வரும் 377-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'கங்கையாறு முதலாக உள்ள தீர்த்தங்களாக விளங்கும் தெய்வத் தன்மை வாய்ந்த பெருமையைப் பெற்ற ஆறுகளினுடைய மங்கலம் விளங்கும் நீர் நிறைந்திருக்கும் பெருமையைப் பெற்று விளங்கும் தடாகங்களைத் தங்களோடு எடுத்துக் கொண்டு வந்து அந்தக் கைலாசபதியைப் பணிய எல்லா இடங்களிலும் நெடுங்காலமாக விளங்கிய பெருமையைப் பெற்று விளங்கும் சிவ கணநாதர்கள் அந்தக் கைலாச பதியை வணங்கப் பொங்கி எழும் பலவகை வாத்தியங்களை முழக்கிக் கொண்டு பூதங்களும் வேதாளங்களும் அந்தக் கைலாசபதியாரை வாழ்த்தி வணங்க.' பாடல் வருமாறு:

''கங்கை யேமுதல் தீர்த்தமாம்
கடவுள்மா நதிகள்

மங்க லம்பொலி புனற்பெருந்
தடங்கொடு வணங்க
எங்கும் நீடிய பெருங்கண
நாதர்கள் இறைஞ்சப்
பொங்கி யல்களால் பூதவே
தாளங்கள் போற்ற."

இந்தப் பாடலும் குளகம். கங்கையே - கங்கையாறே. முதல் - முதலாக உள்ள. தீர்த்தமாம் - தீர்த்தங்களாக விளங்கும்; ஒருமை பன்மை மயக்கம். கடவுள் - தெய்வத் தன்மையைப் பெற்ற. மா - பெருமை வாய்ந்த. நதிகள் - ஆறுகளினுடைய. மங்கலம் பொலி - மங்கலமாக விளங்கும். புனல் - நீர் நிறைந்திருக்கும். பெரும் - பெருமையைப் பெற்றுத் திகழும். தடம் - தடாகங்கள்; ஒருமை பன்மை மயக்கம். 'வழியை' எனலும் ஆம். கொடு - மேற்கொண்டு; தங்களோடு எடுத்துக்கொண்டு வந்து. வணங்க - அந்தக் கைலாசபதியைப் பணிய. எங்கும் - எல்லா இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். நீடிய - நெடுங்காலமாக வாழ்ந்து விளங்கிய. பெரும் - பெருமையைப் பெற்றுப் பொலியும். கணநாதர்கள் - சிவகணத் தலைவர்கள். இறைஞ்ச - அந்தக் கைலாச பதியாரை வணங்க. ப்: சந்தி. பொங்கு - பொங்கி எழும். இயல்களால் - பலவகை வாத்தியங்களை முழக்கிக் கொண்டு. இயல்களால்: உருபு மயக்கம். அந்த வாத்தியங்களாவன: யாழ், வீணை, நாகசுரம், ஒத்து, மத்தளம், கஞ்சதாளங்கள், முரசு, பேரிகை, முகவீணை, சல்லரி, படகம், தாரை, தப்பட்டை, கஞ்சிரா, தம்புரா, புல்லாங்குழல், ஊதுகொம்பு, பறை முதலியவை. பூத - பூதங்களும்; ஒருமை பன்மை மயக்கம். வேதாளங்கள் - வேதாளங்களும். போற்ற - அந்தக் கைலாசபதியாரை வாழ்த்தி வணங்க.

பிறகு உள்ள 378-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அழகிய குளிர்ச்சியையும் பெருமையையும் பெற்று விளங்கும் வெள்ளி மலையாகிய கயிலாய மலை இரண்டு ஆகும் என்று கூறுமாறு தன்னை அடைந்த பக்தர்கள் தங்களுடைய திருவுள்ளங்களில் தியானம் புரியுமாறு சிவப்பாக விளங்கும் கண்களைப் பெற்ற திருமாலாகிய இடபவாகனம் தங்களுக்கு எதிரில் நின்று கொண்டிருக்க, முன்பிறவியில் புரிந்த பெரிய தவத்தினுடைய பிரயோசனத்தை அடையும் முதன்மையான தன்மையோடு மகிழ்ச்சியை அடைந்து நந்தியாகிய அடியேங்களுடைய தலைவன் நடுநடுவாக உள்ள இடங்களில் அசைந்து கொண்டு முன்னால் எழுந்தருள.' பாடல் வருமாறு:

"அந்தண் வெள்ளிமால் வரையிரண்
டாம்என அணைந்தோர்
சிந்தை செய்திடச் செங்கண்மால்
விடைஎதிர் நிற்ப
முந்தை மாதவப் பயன்பெறு
முதன்மையால் மகிழ்ந்தே
நந்தி எம்பிரான் நடுவிடை
ஆடிமுன் நணுக."

இந்தப் பாடலும் குளகம். அம் - அழகிய. தண் - குளிர்ச்சியைப் பெற்ற. வெள்ளிமால் வரை - பெருமையைப் பெற்ற வெள்ளி மலையாகிய கயிலாய மலை. இரண்டு ஆம் - இரண்டு ஆகும். என - என்று கூறுமாறு; இடைக்குறை. அணைந்தோர் - தன்பால் அடைந்த பக்தர்கள்; ஒருமை பன்மை மயக்கம். சிந்தை - தங்களுடைய திருவுள்ளங்களில்; ஒருமை பன்மை மயக்கம். செய்திட - தியானம் புரியுமாறு. ச்: சந்தி. செம் - சிவப்பாக விளங்கும். கண் - கண்களைப் பெற்ற; ஒருமை

பன்மை மயக்கம். மால்விடை - திருமாலாகிய இடபவாகனம். எதிர் - தங்களுடைய எதிரில். நிற்ப - நின்று கொண்டிருக்க. முந்தை - முன்பிறவியில் புரிந்த. மா - பெரிய. தவப்பயன் - தவத்தினுடைய பிரயோசனத்தை. பெறு - அடையும். முதன்மையால் - முதன்மையான தன்மையோடு; உருபு மயக்கம். மகிழ்ந்து - மகிழ்ச்சியை அடைந்து. ஏ: அசை நிலை. நந்தி - நந்தி தேவராகிய. எம்பிரான் - அடியேங்களுடைய தலைவன். இது சேக்கிழார் தம்மையும் வேறு தொண்டர்களையும் சேர்த்துக் கூறியது. நடு - நடு நடுவாக உள்ள. இடை - கைலாச மலையில் உள்ள இடங்களில்; ஒருமை பன்மை மயக்கம். ஆடி - அசைந்து கொண்டு. முன் - முன்னால். நணுக - எழுந்தருள.

அடுத்து வரும் 379-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'அந்த வெள்ளி மலையாகிய கயிலாய மலையின் மேல் மரகதக் கொடியைப் போன்ற பார்வதி தேவியோடும் திகழும் தெளிவாக இருக்கும் பெரிய பிரகாசத்தை வீசும் ஒரு பவளமலை என்று கூறுமாறு தம்முடைய வாம பாகத்தைத் தனக்கு உரிய இடமாகக் கொண்டருளும் பெருமையைப் பெற்ற இமாசல அரசனுடைய புதல்வியாகிய பார்வதி தேவியோடு சேர்ந்து எழுந்தருளி யிருந்த வள்ளலாராகிய கைலாச பதியாரைத் தமக்கு முன்னால் திருவாக்குக்கு அரசராகிய திருநாவுக்கரசு நாயனார் தரிசித்தார்.' பாடல் வருமாறு:

"வெற்றி வெற்பின்மேல் மரகதக்
கொடியுடன் விளங்கும்
தெள்ளு பேரொளிப் பவளவெற்
பெனஇடப் பாகம்

கொள்ளும் மாமலை யாளுடன்
கூடவீற் றிருந்த
வள்ள லாரைமுன் கண்டனர்
வாக்கின்மன் னவனார்.''

வெள்ளி வெற்பின் மேல் - அந்த வெள்ளி மலையாகிய கயிலாய மலையின் மேல். மரகதக் கொடியுடன் - ஒரு மரகதக் கொடியைப் போல விளங்கும் பார்வதி தேவியொடு. விளங்கும் - தோற்றப் பொலிவோடு எழுந்தருளியிருக்கும். தெள்ளு - தெளிவாக இருக்கும். பேரொளி - பெரிய பிரகாசத்தை வீசும். ப்: சந்தி. பவளவெற்பு - ஒரு பவள மலை. என - என்று கூறுமாறு; இடைக்குறை. இடப்பாகம் - தம்முடைய வாமபாகத்தை. கொள்ளும் - தனக்கு உரிய இடமாகக் கொண்டருளும். மா - பெருமையைப் பெற்ற. மலையாளுடன் - இமாசல அரசனுடைய புதல்வியாகிய பார்வதி தேவியோடு. மலை: திணை மயக்கம். கூட - சேர்ந்து; எச்சத்திரிபு. வீற்றிருந்த - எழுந்தருளியிருந்த. வள்ளலாரை - வள்ளலாராகிய கைலாசபதியாரை. முன் - தமக்கு முன்னால். வாக்கின் - திருவாக்குக்கு. மன்னவனார் - அரசராகிய திருநாவுக்கரசு நாயனார். கண்டனர் - தரிசித்தார்.

பிறகு உள்ள 380-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அவ்வாறு தாம் தரிசித்த பேரானந்த சாகரமாகிய கைலாசபதியாரைத் தம்முடைய விழிகளால் மொண்டு கொண்டு தம்முடைய கரங்களைத் தம்முடைய தலையின் மேல் வைத்துக் கூப்பிக் கும்பிட்டு விட்டு அந்தக் கைலாசபதியாருடைய சந்நிதியில் தரையில் விழுந்து அந்தக் கைலாச பதியாரை வணங்கி விட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்றுகொண்டு தம்முடைய திருமேனி அலசுமாறு, தழுதழுக்குமாறு, அந்த

மகாதேவராகிய கைலாச பதியாருக்கு முன்னால் நின்று கொண்டு கூத்தாடினார்; பாடல்களைப் பாடினார்; விக்கி விக்கிப் புலம்பினார்; அந்தத் திருத்தொண்டராகிய திருநாவுக்கரசு நாயனாருக்கு அந்தக் கயிலாய மலையில் நடந்தவற்றை ஆர் எடுத்துக் கூற வல்லவர்?' பாடல் வருமாறு:

"கண்ட ஆனந்தக் கடலினைக்
கண்களால் முகந்து
கொண்டு கைகுவித் தெதிர்விழுந்
தெழுந்துமெய் குலைய
அண்டர் முன்புநின் றாடினார்;
பாடினார்; அழுதார்;
தொண்ட னார்க்கங்கு நிகழ்ந்தன
யார்சொல வல்லார்?"

கண்ட - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அவ்வாறு தரிசித்த. ஆனந்தக் கடலினை - பேரானந்த சாகரமாகிய கைலாசபதியாரை. க்: சந்தி. கண்களால் - தம்முடைய விழிகளால். முகந்துகொண்டு - மொண்டு கொண்டு. கை - தம்முடைய கரங்களை; ஒருமை பன்மை மயக்கம். குவித்து - தம்முடைய தலையின் மேல் வைத்துக் கூப்பிக் கும்பிட்டு விட்டு. எதிர் - அந்தக் கைலாச பதியாருடைய சந்நிதியில். விழுந்து - தரையில் விழுந்து அந்தக் கைலாசபதியாரை வணங்கிவிட்டு. எழுந்து - பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு. மெய் - தம்முடைய திருமேனி. குலைய - அலசுமாறு. அண்டர் - அந்த மகாதேவராகிய கைலாசபதியாருக்கு. முன்பு - முன்னால். நின்று - நின்று கொண்டு. ஆடினார் - கூத்தாடினார். பாடினார் - பாடல்களைப் பாடினார். அழுதார் - விக்கி விக்கிப் புலம்பினார். தொண்டனார்க்கு -

திருவதிகை வீரட்டானேசுவரருடைய திருத்தொண்டராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனாருக்கு. அங்கு - அந்தக் கயிலாய மலையில். நிகழ்ந்தன - நடந்தவற்றை. யார் - ஆர். சொல - எடுத்து உரைக்க; இடைக்குறை. வல்லார் - வல்லமையைப் பெற்றவர்.

பிறகு உள்ள 381-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்த வரம்பு இல்லாத தவத்தை முன்பிறவியில் புரிந்தருளியவராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார் தமக்கு முன்னால் அந்தக் கைலாச பதியாரைத் தரிசித்துக் கொண்டு அவர் வழங்கிய திருவருளாகிய கிடைப்பதற்கு அருமையாக உள்ள அமுதமாகிய சாகரத்தைக் குடிக்க தொலையாத பக்தியைப் பெற்றவராகிய அந்த நாயனார் ஓர் அளவு இல்லாத பேராவல் அந்தக் கைலாசபதியாருடைய சந்நிதியில் பொங்கி எழத் தங்கத்தைப் போல் விளங்கிய சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற் பெற்ற வராகிய அந்தக கைலாசபதியாரை வாழ்த்திப் பாடியருளும் திருத்தாண்டகங்கள் பலவற்றை அந்த நாயனார் வாழ்த்திப் பாடியருளிய பேரானந்தம் தம்முடைய திருவுள்ளத்தில் ஓங்கி எழுமாறு அந்தக் கைலாசபதியாரைத் துதித்தார்.' பாடல் வருமாறு:

'முன்பு கண்டுகொண் டருளின்ஆர்
அமுதுண்ண மூவா
அன்பு பெற்றவர் அளவிலா
ஆர்வம்முன் பொங்கப்
பொன்பி றங்கிய சடையரைப்
போற்றுதாண் டகங்கள்
இன்பம் ஓங்கிட ஏத்தினார்
எல்லையில் தவத்தோர்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. எல்லை - ஒரு வரம்பு. இல் - இல்லாத; கடைக்குறை. தவத்தோர் - தவத்தை முன்பிறவியல் புரிந்தருளியவராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார். முன்பு - தமக்கு முன்னால். கண்டுகொண்டு - தரிசித்துக் கொண்டு. அருளின் - அந்தக் கைலாசபதியார் வழங்கிய திருவருளாகிய. ஆர் - கிடைப்பதற்கு அருமையாக உள்ள. அமுது - அமுதமாகிய சாகரத்தை. உண்ண - குடிக்க. மூவா - தொலையாத. அன்பு - பக்தியை. பெற்றவர் - பெற்றவராகிய அந்த நாயனார். அளவு - ஓர் அளவும். இலா - இல்லாத; இடைக்குறை. ஆர்வம் - பேராவல். முன் - அந்தக் கைலாச பதியாருடைய சந்நிதியில். பொங்க - பொங்கி எழ. ப்: சந்தி. பொன் - தங்கத்தைப் போல; உவம ஆகு பெயர். பிறங்கிய - விளங்கிய. சடையரை - சடாபாரத்தைத் தம்முடைய தலையின்மேற் பெற்றவராகிய அந்தக் கைலாசபதியாரை. ப்: சந்தி. போற்று - வாழ்த்திப் பாடியருளிய. தாண்டகங்கள் - திருத்தாண்டகங்கள் பலவற்றை. இன்பம் - பேரானந்தம். ஓங்கிட - தம்முடைய திருவுள்ளத்தில் ஓங்கி எழுமாறு. ஏத்தினார் - அந்தக் கைலாசபதியாரைத் துதித்தார்.

கயிலாயத்தைப்பற்றி திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு நேரிசை வருமாறு:

"கடியவன் கண்சி வந்து
கயிலைநன் மலையை ஓடி
வடிவுடை மங்கை அஞ்ச
எடுத்தலும் மருவ நோக்கிச்
செடிபடத் திருவி ரலால்
ஊன்றலும் சிதைந்து வீழ்ந்தான்
வடிவுற ஊன்றி னானேல்
மறித்துநோக் கில்லை யன்றே."

அந்த நாயனார் பாடியருளிய ஒரு போற்றித் திருத் தாண்டகம் வருமாறு:

"ஊராகி நின்ற உலகே போற்றி
ஓங்கி அழலாய் நிமிர்ந்தாய் போற்றி
பேராகி எங்கும் பரந்தாய் போற்றி
பெயராதென் சிந்தை புகுந்தாய் போற்றி
நீராவி யான நிழலே போற்றி
நேர்வார் ஒருவரையும் இல்லாய் போற்றி
காராகி நின்ற முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி."

அந்த நாயனார் பாடியருளிய வேறொரு போற்றித் திருத்தாண்டகம் வருமாறு:

"உடலின் வினைகள் அறுப்பாய் போற்றி
ஒள்ளெரி வீசும் பிரானே போற்றி
படரும் சடைமேல் மதியாய் போற்றி
பல்கணக் கூத்தப் பிரானே போற்றி
சுடரில் திகழ்கின்ற சோதி போற்றி
தோன்றிஎன் உள்ளத் திருந்தாய் போற்றி
கடலில் ஒளியாய முதலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி."

அந்த நாயனார் பாடியருளிய மற்றொரு போற்றித் திருத்தாண்டகம் வருமாறு:

"எண்மேலும் எண்ணம் உடையாய் போற்றி
ஏறரிய ஏறும் குணத்தாய் போற்றி
பண்மேலே பாலித் திருந்தாய் போற்றி
பண்ணொடி யாழ்வீணை பயின்றாய் போற்றி
விண்மேலும் மேலும் நிமிர்ந்தாய் போற்றி
மேலார்கள் மேலார்கள் மேலாய் போற்றி

கண்மேலும் கண்ணொன் றுடையாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.''

பிறகு வரும் 382-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு உண்டாகிய வண்ணத்தில் அந்தத் திருநாவுக்கரசு நாயனார் தம்முடைய திருவுள்ளத்தில் பேரானந்தத்தை அடையுமாறு கயிலாய மலையில் விரும்பி எழுந்தருளியுள்ள தலைவராகிய கயிலாசபதியார் தம்முடைய துணைவியாராகிய பார்வதி தேவியாரொடும் அந்தக் கயிலாய மலையில் அமர்ந்திருந்தருளிப் பரிசுத்தமான தம்முடைய திருத்தொண்டராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனாரும் அந்தக் கைலாச பதியாரைத் தரையில் விழுந்து வணங்கிவிட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து அந்தக் கைலாசபதியாருக்கு எதிரில் நின்று கொண்டிருக்கத் தாம் காட்டியருளிய அந்தத் திருக் கோலத்தை அந்தக் கயிலாச பதியார் தாம் திருவையாற்றில் எழுந்தருளிய பான்மை விளங்கும் வண்ணம் கயிலாய மலையிலிருந்து நெடுந்தூரத்தில் உள்ளதாக ஆக்கியருளி னார்.' பாடல் வருமாறு:

''ஆய வாறுமற் றவர்மனம்
களிப்புறக் கயிலை
மேய நாதர்தம் துணையொடும்
வீற்றிருந் தருளித்
தூய தொண்டரும் தொழுதெதிர்
நிற்கஅக் கோலம்
சேய தாக்கினார் திருவையா
றமர்ந்தமை திகழ.''

ஆய - அவ்வாறு உண்டாகிய. ஆறு - விதத்தில். மற்று: அசைநிலை. அவர் - அந்தத் திருநாவுக்கரசு நாயனா

ருடைய. மனம் - திருவுள்ளத்தில். களிப்பு - பேரானந் தத்தை. உற - அடையுமாறு. க்: சந்தி. கயிலை - கயிலாய மலையில். மேய - விரும்பி எழுந்தருளியுள்ள. நாதர் - தலைவராகிய கயிலாச பதியார். தம் - தம்முடைய. துணை யொடும் - துணைவியாராகிய பார்வதி தேவியாரோடும்; திணை மயக்கம். வீற்றிருந்தருளி - அமர்ந்திருந்தருளி. த்: சந்தி. தூய - பரிசுத்தமாகிய. தொண்டரும் - திருத் தொண்டராகிய அந்த நாயனாரும். தொழுது - அந்தக் கைலாசபதியாரைத் தரையில் விழுந்து வணங்கிவிட்டு. எதிர் - பிறகு தரையிலிருந்து எழுந்து அந்தக் கைலாச பதியாருக்கு எதிரில். நிற்க - நின்று கொண்டிருக்க. அக்கோலம் - தாம் முன்பு அந்த நாயனாருக்குக் காட்டி அருளிய அந்தத் திருக்கோலத்தை அந்தக் கயிலாசபதியார். திருவையாறு - தாம் திருவையாற்றில். அமர்ந்தமை - வீற்றிருந்த பான்மை. திகழ - விளங்கும் வண்ணம். சேயது ஆக்கினார் - அந்தக் கயிலாய மலையிலிருந்து நெடுந்தூரத் தில் உள்ளதாக ஆக்கியருளினார்.

பிறகு உள்ள 383-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'ஐயராகிய பஞ்சநதேசுவரர் தம்முடைய திருக் கோலத்தை அந்தத் திருவையாற்றில் வழங்கியருளிவிட்டு அகன்றருள அவருடைய திருவடிகளுக்குத் திருத் தொண்டராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார் மயக் கத்தைப் பெற்று தம்முடைய திருவுள்ளம் மகிழ்ச்சியை அடைய வருத்தத்தை அடைந்து ''இந்தத் திருவையாற்றில் சிவந்த சடாபாரத்தைத் தம்முடைய திருமுடியின்மேல் பெற்றவராகிய பஞ்சநதீசுவரர் புரிந்த திருவருள் இந்தச் செயலோ'' என்று எண்ணி அந்த நாயனார் தெளிவை அடைந்து இந்தப் பூமண்டலத்தில் வாழும் மக்கள் உஜ்ஜீவனத்தை அடையப் பார்த்தமையை அந்த நாயனார்

மகிழ்ச்சியை அடைந்து ஒரு திருப்பதிகத்தைப் பாடியருள் வாரானார்.' பாடல் வருமாறு:

''ஐயர் கோலம்அங் களித்தகன்
றிடஅடித் தொண்டர்
மையல் கொண்டுளம் மகிழ்ந்திட
வருந்திமற் றிங்குச்
'செய்ய வேணியர் அருளிது
வோ?'எனத் தெளிந்து
வையம் உய்ந்திடக் கண்டமை
பாடுவார் மகிழ்ந்து.''

ஐயர் - ஐயராகிய பஞ்சநதேசுவரர். கோலம் - தம்முடைய திருக்கோலத்தை. அங்கு - அந்தத் திருவையாற்றில். அளித்து - வழங்கியருளிவிட்டு. அகன்றிட - அகன்றருள. அடி - அவருடைய திருவடிகளுக்கு; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தொண்டர் - திருத் தொண்டராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார். மையல் - மயக்கத்தை. கொண்டு - பெற்று. உளம் - தம்முடைய திருவுள்ளம்; இடைக்குறை. மகிழ்ந்திட - மகிழ்ச்சியை அடைய. வருந்தி - வருத்தத்தை அடைந்து. மற்று: அசை நிலை. இங்கு - இந்தச் திருவையாற்றில். ச்: சந்தி. செய்ய - சிவந்த. வேணியர் - சடாபாரத்தைத் தம்முடைய திருமுடியின் மேற் பெற்றவராகிய பஞ்சநதீசுவரர். அருள் - புரிந்த திருவருள். இதுவோ - இந்தச் செயலோ. என - என்று எண்ணி; இடைக்குறை. த்: சந்தி. தெளிந்து - அந்த நாயனார் தெளிவை அடைந்து. வையம் - இந்தப் பூமண்டலத்தில் வாழும் மக்கள்; இடஆகுபெயர். உய்ந்திட - உஜ்ஜீவனத்தை அடைய. க்: சந்தி. கண்டமை - தாம் பார்த்த பான்மையை. மகிழ்ந்து - மகிழ்ச்சியை அடைந்து. பாடுவார் - ஒரு திருப்பதிகத்தைப் பாடியருள்பவரானார்.

பிறகு வரும் 384-ஆம் கவியின் கருத்து வருமாறு:

' ''மாதர்ப் பிறைக் கண்ணியானை மலையான் மகளொடும்'' என்று தொடங்கும் குற்றம் அற்ற குளிர்ச்சியைப் பெற்ற செந்தமிழ் மொழியில் அமைந்த சொற்களால் தம்மிடம் எழுந்து குலாவும் பல திருப்பதிகங்களை, ''வேத முதல்வர் விரவும் சராசரம் எல்லாம், காதல் துணையொடும் கூடக் கண்டேன்'' என்று அந்தத் திருநாவுக்கரசு நாயனரர் பாடியருளிய நின்றுகொண்டிருந்தார்.' பாடல் வருமாறு.

''மாதர்ப் பிறைக்கண்ணி யானை
மலையான் மகளொடும்' என்னும்
கோதறு தண்டமிழ்ச் சொல்லால்
குலவு திருப்பதி கங்கள்
வேத முதல்வர்ஐ யாற்றில்
விரவும் சராசரம் எல்லாம்
காதல் துணையொடும் கூடக்
கண்டேன்' எனப்பாடி நின்றார்.''

'மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளொடும்' என்னும் - 'மாதர்ப்பிறைக் கண்ணி யானை மலையான் மகளொடும்' என்று தொடங்கும். கோது - ஒரு குற்றமும், அறு - அற்ற. தண் - குளிர்ச்சியைப் பெற்ற. தமிழ் - செந்தமிழ் மொழியில் அமைந்த. ச்: சந்தி. சொல்லால் - சொற்களால்; ஒருமை பன்மை மயக்கம். குலவு - தம்மிடம் எழுந்து குலாவும். திருப்பதிகங்கள் - பல திருப்பதிகங்களை. 'வேத முதல்வர் ஐயாற்றில் விரவும் சராசரம் எல்லா காதல் துணையொடும் கூடக் கண்டேன்' என - 'வேத முதல்வர் ஐயாற்றில் விரவும் சராசரம் எல்லாம் காதல் துணையொடும் கூடக் கண்டேன்' என்றுஇ என: இடைக்குறை. க்:சந்தி. கண்டேன் - அடியேன் பார்த்தேன்.

என - என்று; இடைக்குறை. ப்:சந்தி. பாடி - அந்த நாயனார் பாடியருளிய. நின்றார் - நின்றுகொண்டிருந்தார்.

பிறகு உள்ள 385-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'அவ்வாறு அந்தத் திருநாவுக்கரசு நாயனார் பார்த்து விட்டுத் தம்முடைய கைகளைத் தம்முடைய தலையின் மேல் வைத்துக் கூப்பிப் பஞ்சநதீசுவரரைக் கும்பிட்டு விட்டு, பிறகு அந்த ஈசுவரரைத் தரையில் விழுந்து பணிந்து விட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்றுகொண்டு நெற்றியில் ஒற்றைக் கண்ணைப் பெற்றவராகிய அந்த ஈசுவரரை வாழ்த்திவிட்டுத் தம் திருவுள்ளத்தில் பாடியருள்வதற்கு எடுத்துக்கொண்ட பல திருத்தாண்டகங் களையும், ஒரு திருக்குறுந்தொகையையும், ஒரு திருநேரிசையையும் பக்தியோடு பொருந்தியுள்ள பல திருவிருத்தங்களையும் அந்த நாயனார் பாடியருளி அந்த ஈசுவரரைப் பணிந்து விட்டுத் தமக்கு உரிய உழவாரத் திருத்தொண்டினையும், வேறு பல திருத்தொண்டுகளை யும் புரிந்துகொண்டே தேவர்களுடைய தலைவனாகிய பஞ்சநதீசுவரன் எழுந்தருளியிருக்கும் திருவையாற்றுக்கு எழுந்தருளி அந்தச் சிவத்தலத்தில் தங்கியிருந்தார்.' பாடல் வருமாறு:

"கண்டு தொழுது வணங்கிக்
கண்ணுத லார்தமைப் போற்றிக்
கொண்ட திருத்தாண் டகங்கள்
குறுந்தொகை நேரிசை அன்பின்
மண்டு விருத்தங்கள் பாடி
வணங்கித் திருத்தொண்டு செய்தே
அண்டர் பிரான்திரு வையா
றமர்ந்தனர் நாவுக் கரசர்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. நாவுக்கரசர் - அந்தத் திருநாவுக்கரசு நாயனார். கண்டு - அவ்வாறு பார்த்துவிட்டு. தொழுது - தம்முடைய கைகளைத் தம்முடைய தலையின்மேல் வைத்துக் கூப்பிப் பஞ்சநதீசுவரரைக் கும்பிட்டுவிட்டு. வணங்கி - பிறகு அந்த ஈசுவரரைத் தரையில் விழுந்து பணிந்துவிட்டு. க்: சந்தி. கண்ணுதலார் தமை - பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு நெற்றியில் ஒற்றைக் கண்ணைப் பெற்றவராகிய அந்த ஈசுவரரை. தமை: இடைக்குறை. தம்: அசைநிலை. ப்: சந்தி. போற்றி - வாழ்த்திவிட்டு. க்: சந்தி. கொண்ட - தம்முடைய திருவுள்ளத்தில் பாடியருள்வதற்கு எடுத்துக் கொண்ட. திருத்தாண்டகங்கள் - பல திருத்தாண்டகங்களையும். குறுந்தொகை - ஒரு திருக்குறுந்தொகையையும். நேரிசை - ஒரு திருநேரிசையையும். அன்பின் - பக்தியோடு. மண்டு - மிகுதியாகப் பொருந்தியுள்ள. விருத்தங்கள் - பல திருவிருத்தங்களையும். பாடி - அந்த நாயனார் பாடியருளி. வணங்கி - அந்த ஈசுவரரைப் பணிந்துவிட்டு. த்: சந்தி. திருத் தொண்டு - தமக்கு உரிய உழவாரத் திருத்தொண்டினையும் வேறு பல திருத்தொண்டுகளையும்; ஒருமை பன்மை மயக்கம். செய்தே - புரிந்து கொண்டே. அண்டர் - தேவர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். பிரான் - தலைவனாகிய பஞ்சநதீசுவரன். திருவையாறு - எழுந்தருளியிருக்கும் திருவையாற்றுக்கு. அமர்ந்தனர் - எழுந்தருளி அந்தச் சிவத்தலத்தில் அந்த நாயனார் தங்கிக்கொண்டிருந்தார்.

அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"ஆரார் திரிபுரங்கள் நீறா நோக்கும்
அனலாடி ஆரமுதே என்றேன் நானே

கூரார் மழுவாட் படையொன் றேந்திக்
குறட்பூதப் பலபடையா யென்றேன் நானே
பேரா யிரமுடையாய் ஒன்றேன் நானே
பிறைசூடும் பிஞ்ஞகனே என்றேன் நானே
ஆரா அமுதேயென் ஐயா றன்னே
என்றென்றே நானரற்றி நைகின் றேனே.''

மற்றொரு திருத்தாண்டகம் வருமாறு:

''தீவாயின் முப்புரங்கள் நீறா நோக்கும்
தீர்த்தா புராணனே என்றேன் நானே
மூவா மதிசூடி என்றேன் நானே
முதல்வாமுக் கண்ணனே என்றேன் நானே
ஏவார் சிலையானே என்றேன் நானே
இடும்பைக் கடல்நின்றும் ஏற வாங்கி
ஆவாவென் றருள்புரியும் ஐயா றன்னே
என்றென்றே நானரற்றி நைகின் றேனே.''

அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருக்குறுந்தொகை வருமாறு:

''சிந்தை வாய்தலு ளான்வந்து சீரியன்
பொந்து வார்புலால் வெண்தலைக் கையினன்
முந்தி வாயதோர் மூவிலை வேல்பிடித்
தந்தி வாயதோர் பாம்பர்ஐ யாறரே.''

அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருநேரிசை வருமாறு:

''ஏறுகந் தேற வைத்தார்
இடைமரு திடமும் வைத்தார்
நாறுபூங் கொன்றை வைத்தார்
நாகமும் அரையில் வைத்தார்

கூறுமை யாக வைத்தார்
கொல்புலித் தோலும் வைத்தார்
ஆறுமோர் சடையில் வைத்தார்
ஐயன்ஐ யாற னாரே.''

அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருவிருத்தம் வருமாறு:

''குறுவித்த வாகுற்ற நோய்வினை
காட்டிக் குறுவித்தநோய்
உறுவித்த வாவுற்ற நோய்வினை
தீர்ப்பான் உகந்தருளி
அறிவித்த வாறடி யேனைஐ
யாறன் அடிமைக்குளே
செறிவித்த வாதொண்ட னேனைத்தன்
பொன்னடிக் கீழெனையே.''

மற்றொரு திருவிருத்தம் வருமாறு:

''படக்கின் வாபட நின்றுபன்
னாளும் படக்கினநோய்
அடக்கின் வாறது வன்றியும்
தீவினை பாவமெல்லாம்
அடக்கின வாறடி யேனைஐ
யாறன் அடிமைக்குளே
தொடக்கின வாதொண்ட னேனைத்தன்
பொன்னடிக் கீழெனையே.''

பிறகு வரும் 386-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'நெடுங்காலமாகப் புகழோடு விளங்கிய அந்தச் சிவத்தலமாகிய திருவையாற்றிலிருந்து மேலே எழுந்தருளி திருநெய்த்தானமே முதலாக உள்ள பக்கத்தில் உயர்ச்சியைப் பெற்ற சிவத்தலங்களுக்கு அந்த நாயனார்

எழுந்தருளி அந்தச் சிவத்தலங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்களை வணங்கிவிட்டு, அப்பால் எழுந்தருளி திருமழபாடியில் எழுந்தருளியிருக்கும் வஜ்ரத்தம்பேசுவரரைப் பணிந்து விட்டுத் தாம் பாடியருளிய செந்தமிழ் மொழியில் அமைந்த மாலையாகிய ஒரு திருப்பதிகத்தைப் பாடியருளிப் பிறகு தமக்கு உரிய உழவாரத் திருப்பணியையும், வேறு பல திருப்பணிகளையும் புரிந்துகொண்டு, அந்த வஜ்ரத்தம் பேசுவரரை வாழ்த்தி வணங்கிவிட்டு, தம்முடைய திருவடிகளைப் பன்றியுருவத்தை எடுத்துக்கொண்டு தேடிப் பார்த்தும், திருமாலுக்குக் காண்பதற்கு அரியவராகிய புஷ்பவன நாதேசுவரர் ஆலயம் விளங்கும் திருப்பூந்துருத்தியை அந்த நாயனார் அடைந்தார்.' பாடல் வருமாறு:

"நீடிய அப்பதி நின்று
நெய்த்தான மேமுத லாக
மாடுயர் தானம் பணிந்து
மழபாடி யாரை வணங்கிப்
பாடிய செந்தமிழ் மாலை
பகர்ந்து பணிசெய்து போற்றித்
தேடிய மாலுக் கரியார்
திருப்பூந் துருத்தியைச் சேர்ந்தார்."

நீடிய - நெடுங்காலமாகப் புகழோடு விளங்கிய. அப்பதி - அந்தச் சிவத்தலமாகிய திருவையாற்றில். நின்று - இருந்து. நெய்த்தானமே - திருநெய்த்தானமே. முதலாக - முதலாக உள்ள. மாடு - பக்கத்தில். உயர் - உயர்ச்சியைப் பெற்ற. தானம் - சிவத்தலங்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். பணிந்து - அந்த நாயனார் எழுந்தருளி அந்தச் சிவத்தலங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி

யிருக்கும் சிவ பெருமான்களை வணங்கிவிட்டு. மழபாடியாரை - அப்பால் எழுந்தருளித் திருமழபாடியில் எழுந்தருளியிருக்கும் வஜ்ரத்தம்பேசுவரரை. வணங்கி - பணிந்துவிட்டு. ப்: சந்தி. பாடிய - தாம் பாடியருளிய. செந்தமிழ் - செந்தமிழ் மொழியில் அமைந்த. மாலை - மாலையாகிய ஒரு திருப்பதிகத்தை. பகர்ந்து - பாடியருளி. பணி - பிறகு தமக்கு உரிய உழவாரத் திருப்பணியையும் வேறு பல திருப்பணிகளையும்; ஒருமை பன்மை மயக்கம். செய்து - புரிந்துகொண்டு. போற்றி - அந்த வஜ்ரத்தம் பேசுவரரை வாழ்த்தி வணங்கிவிட்டு. த்: சந்தி. தேடிய - தம்முடைய திருவடிகளைப் பன்றி உருவத்தை எடுத்துக்கொண்டு தேடிப் பார்த்தும். மாலுக்கு அரியார் - திருமாலுக்குக் காண்பதற்கு அரியவராகிய புஷ்பவன நாதேசுவரர் ஆலயம் விளங்கும். திருப்பூந்துருத்தியை - திருப்பூந்துருத்தியாகிய சிவத்தலத்தை. ச்: சந்தி. சேர்ந்தார் - அந்த நாயனார் அடைந்தார்.

திருநெய்த்தானம்: இது சோழ நாட்டில் காவிரியாற்றின் கரையில் உள்ளது. இங்கே கோயில்கொண்டிருப்பவர் நெய்யாடியப்பர். அம்பிகையின் திருநாமங்கள் பாலாம்பிகையம்மை, இளமங்கை அம்மை என்பவை. இந்தத் தலம் இந்தக் காலத்தில் தில்லைஸ்தானம் என வழங்கும். இது திருவையாற்றிலிருந்து மேற்குத் திசையில் ஒரு மைல் தூரத்தில் உள்ளது. இது சப்ஸ்தானத் தலங்களுக்குள் ஏழாவது தலம். கலைமகள் வழிபட்ட தலம் இது. இதைப் பற்றிய ஒரு பாசுரம் வருமாறு:

"தேய்ந்திலங் குஞ்சிறு வெண்மதி
யாயநின் திருச்சடைமேல்
பாய்ந்தகங் கைப்புனல் பன்முக
மாகிப் பரந்தொலிப்ப

ஆய்ந்தி லங்கும்மழு வேலுடை
யாயடி யேற்குரைநீ
ஏந்திள மங்கையும் நீயும்நெய்த்
தானத் திருந்ததுவே.''

இந்தத் தலத்தைப்பற்றித் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் நட்டபாடைப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

''மையாடிய கண்டன்மலை
மகள்பாகம துடையான்
கையாடிய கேடில்கரி
உரிமூடிய ஒருவன்
செய்யாடிய குவளைம்மலர்
நயனத்தவ ளோடும்
நெய்யாடிய பெருமானிடம்
நெய்த்தான மெனீரே.''

இந்தத் தலத்தைப்பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திருநேரிசை வருமாறு:

''வானவர் வணங்கி ஏத்தி
வைகலும் மலர்கள் தூவத்
தானவர்க் கருள்கள் செய்யும்
சங்கரன் செங்கண் ஏற்றன்
தேனமர் பொழில்கள் சூழத்
திகழுநெய்த் தானம் மேய
கூனிள மதியி னானைக்
கூடுமா றறிகி லேனே.''

பிறகு வரும் 387-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'அவ்வாறு அந்தத் திருநாவுக்கரசு நாயனார் திருப்பூந்துருத்தியை அடைந்து விருப்பத்தோடும் அந்த

ஆலயத்துக்குள் நுழைந்து நடராஜப் பெருமானார் திருநடனம் புரிந்தருளும் மாளிகையாகிய திருக்கோயி லுக்கு முன்னால் அடைந்து வலமாக வந்து அந்த நடராஜப் பெருமானாரை வணங்கிவிட்டுத் தம்முடைய தலைவனாகிய வஜ்ரத்தம்பேசுவரரைத் தரையில் விழுந்து வணங்கிவிட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்றுகொண்டு தம்முடைய திருவுள்ளத்தில் நிரம்பி ஒழியாத பக்தி எழுந்து பொங்கிவர நிறைந்த தம்முடைய கண்களிலிருந்து நீர் மாரியைப் போல வழியச் சோர்வை அடையும் பான்மையைப் பெற்றவரானார் அந்த நாயனார்.'

பாடல் வருமாறு:

"சேர்ந்து விருப்பொடும் புக்குத்
திருநட மாளிகை முன்னர்ச்
சார்ந்து வலங்கொண் டிறைஞ்சித்
தம்பெரு மான்திரு முன்பு
நேர்ந்த பரிவொடு தாழ்ந்து
நிறைந்தொழி யாஅன்பு பொங்க
ஆர்ந்தகண் ணீர்மழை தூங்க
அயர்வுறும் தன்மைய ரானார்."

சேர்ந்து - அவ்வாறு அந்தத் திருநாவுக்கரசு நாயனார் திருப்பூந்துருத்தியை அடைந்து. விருப்பொடும் - விருப்பத்தோடும். புக்கு - அந்த ஆலயத்துக்குள் நுழைந்து. த்: சந்தி. திருநட - நடராஜப் பெருமானார் திருநடனம் புரிந்தருளும். மாளிகை - மாளிகையாகிய திருக்கோயி லுக்கு. முன்னர் - முன்னால். ச்: சந்தி. சார்ந்து - அடைந்து. வலம்கொண்டு - வலமாக வந்து. இறைஞ்சி - அந்த நடராஜப் பெருமானாரை வணங்கிவிட்டு. த்: சந்தி. தம் - தம்முடைய. பெருமான் - ,தலைவனாகிய வஜ்ரத்தம் பேசுவரனுடைய. திரு - அழகிய. முன்பு - சந்நிதியில்.

நேர்ந்த - தாம் விரும்பிய. பரிவொடு - பக்தியோடும். தாழ்ந்து - அந்த வஜ்ரத்தம்பேசுவரரைத் தரையில் விழுந்து வணங்கிவிட்டு. நிறைந்து - பிறகு தரையிலிருந்து எழுந்து நின்றுகொண்டு. ஒழியா - ஒழியாத. அன்பு - பக்தி. பொங்க - எழுந்து பொங்கி வர. ஆர்ந்த - நிறைந்த. கண் - தம்முடைய கண்களிலிருந்து; ஒருமை பன்மை மயக்கம். நீர் - புனல். மழை - மாரியைப் போல; உவம ஆகுபெயர். தூங்க - வழிய. அயர்வு - சோர்வை. உறும் - அடையும். தன்மையர் - பான்மையைப் பெற்றவர். ஆனார் - அந்த நாயனார் ஆனார்.

திருப்பூந்துருத்தி: இது சோழநாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவர் புஷ்பவன நாதேசுவரர். அம்பிகை அழகாலமர்ந்த நாயகி. இது திருக்கண்டியூரிலிருந்து மேற்குத் திசையில் 2 மைல் தூரத்தில் உள்ளது. ஒரு சோழ மன்னர் துருத்தியை வைத்துப் பூசிக்கச் செய்ததனால் திருப்பூந்துருத்தி என்னும் பெயர் இந்தத் தலத்திற்கு வந்தது என்பர் ஆன்றோர். இந்த ஆலயத்தில் நந்திகள் விலகி உள்ளன. முதலில் அமர்ந்திருக்கும் நந்தி பெரியது. அழகாகவும் உள்ளது. அவை திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்காக விலகின என்பர். திருநாவுக்கரசு நாயனார் ஒரு திருமடத்தை இந்தத் தலத்தில் கட்டச்செய்து பலவகையான திருத்தாண்டகங் களையும், திரு அங்கமாலை முதலிய திருப்பதிகங்களையும் பாடியருளிக் கொண்டு தங்கியிருந்த சிவத்தலம் இது. பாண்டி நாட்டுக்கு எழுந்தருளிச் சமணர்களைப் பலவகையான வாதங்களைப் புரிந்து வெற்றியைப் பெற்று மீண்டும் எழுந்தருளிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு நாயனார் இந்தத் தலத்தில் தங்கியிருப்பதைக் கேள்வியுற்று வந்து அந்தத் திருநாவுக்கரசு நாயனாரோடு. சில காலம் இருந்தருளிய

திருத்தலம் இது. திருநாவுக்கரசு நாயனார் தங்கியிருந்த திருமடம் இது என்று ஒரு திருமடத்தை இன்று காட்டுகிறார்கள். அது இப்போது இடிந்து கிடக்கிறது. இது சப்த ஸ்தானங்களில் ஆறாவது தலம். இந்திரனும் காசிப முனிவரும் வழிபட்டுப் பேறு பெற்ற தலம் இது. இதைப்பற்றிய ஒரு பாசுரம் வருமாறு:

"அருசடை மாலையும் தானுடை
யாழை காலமைந்த
உருவுடை மங்கையும் தன்னொரு
பாலுல காயும்நின்றான்
பொருபடை வேலினன் வில்லினன்
பூந்துருத் தியுறையும்
திருவுடைத் தேச மதியனை
யானடி போற்றுவதே."

பிறகு உள்ள 388-ஆம் கவியின் கருத்து வருமாறு:

"'திருப்பூந்துருத்தி என்னும் சிவத்தலத்தில் வீற்றிருந்தருளிய சிவப்பாக இருக்கும் சடாபாரத்தைத் தன்னுடைய தலையின்மேல் பெற்றவனாகிய புஷ்பவன நாதேசுவரரை இடபமாகிய காளை மாடு ஆகிய மலையை ஓட்டியருளுகின்ற தலைவனாகிய அந்தப் புஷ்பளநாதேசுவரனை, பொய் இல்லாதவனை, அடியேன் தரிசனம் செய்து கொண்டேன்'' என்னும் விருப்பத்தைப் பெற்ற ஒரு திருத்தாண்டகத்தோடு, தாம் விரும்பிய பக்தி விளையுமாறு புரிய, "இருப்போம் திருவடிக் கீழ்நாம்" என்று வரும் ஒரு திருக்குறுந்தொகையை அந்த நாயனார் பாடியருளி.' பாடல் வருமாறு:

"திருப்பூந் துருத்திஅமர்ந்த செஞ்சடை
யானை ஆன் ஏற்றுப்

பொருப்பூர்ந் தருளும் பிரானைப்
பொய்யிலி யைக்கண் டேன்'என்று
விருப்புறு தாண்டகத் தோடு
மேவிய காதல் விளைப்ப,
'இருப்போம் திருவடிக் கீழ்நாம்'
என்னும் குறுந்தொகை பாடி.''

இந்தப் பாடல் குளகம். திருப்பூந்துருத்தி - திருப்பூந்துருத்தி என்னும் சிவத்தலத்தில். அமர்ந்த - வீற்றிருந்தருளிய. செம் - சிவப்பாக இருக்கும். சடையானை - சடாபாரத்தைத் தன்னுடைய தலையின் மேல் பெற்றவனாகிய புஷ்பவனநாதேசுவரனை. ஆன் இடபமாகிய. ஏற்று - காளைமாடு ஆகிய. ப்: சந்தி. பொருப்பு - மலையை. ஊர்ந்தருளும் - ஓட்டியருளுகின்ற. பிரானை - தலைவனாகிய அந்தப் புஷ்பவனநாதேசு வரனை. ப்: சந்தி. பொய் இலியை - பொய் இல்லாதவனை. இலி: இடைக்குறை. க்: சந்தி. கண்டேன் - அடியேன் தரிசனம் செய்துகொண்டேன். என்று - என. விருப்பு - விருப்பத்தை. உறு - பெற்ற. தாண்டகத்தோடு - ஒரு திருத்தாண்டகத்தோடு. மேவிய - தாம் விரும்பிய. காதல் - பக்தி. விளைப்ப - விளையுமாறு புரிய. 'இருப்போம் திருவடிக்கீழ் நாம்' என்னும் - 'இருப்போம் திருவடிக் கீழ் நாம்' என்று வரும். குறுந்தொகை - ஒரு திருக்குறுந்தொகையை. பாடி - அந்த நாயனார் பாடியருளி.

அவ்வாறு அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"நில்லாத நீர்சடைமேல் நிற்பித் தானை
நினையா என்நெஞ்சை நினைவித் தானைக்
கல்லா தனவெல்லாம் கற்பித் தானைக்
காணா தனவெல்லாம் காட்டி னானைச்

சொல்லா தனவெல்லாம் சொல்லி என்னைத்
தொடர்ந்திங் கடியேனை ஆளாக் கொண்டு
பொல்லாஎன் நோய்தீர்த்த புனிதன் தன்னைப்
புண்ணியனைப் பூந்துருத்திக் கண்டேன் நானே.''

அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருக்குறுந்தொகை வருமாறு:

''கொடிகொள் செல்வ விழாக்குணலை அறாக்
கடிகொள் பூம்பொழிற் கச்சிஏ கம்பனார்
பொடிகள் பூசி பூந்துருத் திந்நகர்
அடிகள் சேவடிக் கீழ்நாம் இருப்பதே.''

இவற்றையல்லாமல் அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருவிருத்தம் வருமாறு:

''மாலினை மாலுற நின்றான்
மலைமகள் தன்னுடைய
பாலனைப் பால்மதி சூடியைப்
பண்புணரார் மதில்மேல்
போலனைப் போர்விடை ஏரியைப்
பூந்துருத் திம்மகிழும்
ஆலனை ஆதி புராணனை
நானடி போற்றுவதே.''

பிறகு வரும் 389-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'அந்தத் திருப்பூந்துருத்தியில் தாம் தங்கிக் கொண்டிருக்கும் பான்மையை அந்த நாயனார் விரும்பி, ''நாமடி போற்றுவ'' தென்று வரும் பொங்கி எழும் செந்தமிழ் மொழியில் அமைந்த சொற்களைப் பெற்ற ஒரு திருவிருத்தத்தை அந்த புஷ்பவனநாதேசுவரரை வாழ்த்தி யருளிய ஒரு பாசுரத்தை விரும்பி அந்தத் திருப்பூந் துருத்தியில் அந்த நாயனார் தங்கிக் கொண்டு தமக்கு உரிய

உழவாரத் திருத்தொண்டினையும், வேறு பல திருத் தொண்டுகளையும் புரிபவராகி தம்முடைய தலைவ னாராகிய அந்தப் புஷ்பவன நாதேசுவரர் வழங்கிய திருவருளை அந்த நாயனார் பெற்றுக் கொண்டு சந்திரனும், சூரியனும் தவழும் அழகிய திருமடத்தை அந்தத் திருப்பூந்துருத்தியில் ஒன்றைக் கட்டுவித்தார்.' பாடல் வருமாறு:

"அங்குறை யும்தன்மை வேண்டி,
'நாமடி போற்றுவ' தென்று
பொங்கு தமிழ்ச்சொல் விருத்தம்
போற்றிய பாடல் புரிந்து
தங்கித் திருத்தொண்டு செய்வார்
தம்பிரா னார்அருள் பெற்றுத்
திங்களும் ஞாயிறும் தோயும்
திருமடம் ஆங்கொன்று செய்தார்."

அங்கு - அந்தத் திருப்பூந்துருத்தியில். உறையும் - தாம் தங்கிக்கொண்டிருக்கும். தன்மை - பான்மையை. வேண்டி - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் விரும்பி. 'நாம் அடி போற்றுவ'தென்று - 'நாம் அடி போற்றுவ'தென்று வரும். பொங்கு - தம்முடைய திருவுள்ளத்தில் பொங்கி எழும். தமிழ் - செந்தமிழ் மொழியில் அமைந்த. ச்: சந்தி. சொல் - சொற்களைக் கொண்ட; ஒருமை பன்மை மயக்கம். விருத்தம் - ஒரு திருவிருத்தத்தை. போற்றிய - அந்த புஷ்பவன நாதேசுவரரை வாழ்த்தியருளிய. பாடல் - ஒரு பாசுரத்தை. புரிந்து - விரும்பி. தங்கி - அந்தத் திருப்பூந் துருத்தியில் அந்த நாயனார் தங்கிக்கொண்டு. த்: சந்தி. திருத்தொண்டு - தமக்கு உரிய உழவாரத் திருத் தொண்டினையும், வேறு பல திருத்தொண்டுகளையும்; ஒருமை பன்மை மயக்கம். செய்வார் - புரிபவராகி;

முற்றெச்சம். தம் - தம்முடைய. பிரானார் - தலைவராகிய அந்தப் புஷ்பவன நாதேசுவரர். அருள் - வழங்கிய திருவருளை. பெற்று - அந்த நாயனார் பெற்றுக் கொண்டு. த்: சந்தி. திங்களும் - சந்திரனும். ஞாயிறும் - சூரியனும். தோயும் - தவழும். திரு - அழகிய. மடம் - ஒரு திருமடம். ஆங்கு - அந்தத் திருப்பூந்துருத்தியில். ஒன்று - ஒன்றினை. செய்தார் - கட்டுவித்தார்.

அவ்வாறு அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருவிருத்தம் வருமாறு:

''அந்தியை நல்ல மதியினை
யார்க்கும் அறிவரிய
செந்தியை வாட்டும்செம் பொன்னினைச்
சென்றடைந் தேனுடைய
புந்தியைப் புக்க அறிவினைப்
பூந்துருத் திய்யுறையும்
நந்தியை நங்கள் பிரான்றனை
நானடி போற்றுவதே.''

பிறகு வரும் 390-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் பலவகையாக அமைந்த திருத்தாண்டகங்களோடும் தாம் புகழும் தனியாக உள்ள ஒரு திருத்தாண்டகத்தையும், பலவகையாகிய துன்பங்களைப் போக்கியருளுபவராகிய அந்தப் புஷ்பவன நாதேசுவரர் எழுந்தருளியுள்ள சிவத்தலத்தில், இந்தப் பிறவிக்குப் பிறகு போகும் நல்ல கதியைக் காண்பிக்குமாறு தாம் வாழ்த்தியருளும் திருஅங்க மாலையையும் உள்ளடக்கி வரம்பு இல்லாத பலவாகிய தன்மையைப் பெற்ற திருத்தொகையையும் பாடியருளியவராகி அந்தப் புஷ்பவன நாதேசுவரரைத் துதித்துவிட்டு, அந்தத்

திருப்பூந்துருத்தியில் தங்கிக் கொண்டிருந்தார்.' பாடல் வருமாறு:

"பல்வகைத் தாண்டகத் தோடும்
பரவும் தனித்தாண் டகமும்
அல்லல் அறுப்பவர் தானத்
தடைவு திருத்தாண் டகமும்
செல்கதி காட்டிடப் போற்றும்
திருஅங்க மாலையும் உள்ளிட்
டெல்லையில் பன்மைத் தொகையும்
இயம்பினர் ஏத்தி இருந்தார்."

பல்வகை - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் பலவகையாக அமைந்த. த்: சந்தி. தாண்டகத்தோடும் - திருத்தாண்டகங்களோடும்; ஒருமை பன்மை மயக்கம். பரவும் - தாம் புகழும். தனி - தனியாக உள்ள. த்: சந்தி. தாண்டகமும் - ஒரு திருத்தாண்டகத்தையும். அல்லல் - பலவகையாகிய துன்பங்களை; ஒருமை பன்மை மயக்கம். அறுப்பவர் - போக்கியருளுபவராகிய அந்தப் புஷ்பவன நாதேசுவரர். தானத்து - எழுந்தருளியுள்ள சிவத்தலத்தில். அடைவு திருத்தாண்டகமும் - ஓர் அடைவு திருத்தாண்டகத்தையும். செல் - இந்தப் பிறவிக்குப் பிறகு போகும். கதி - நல்ல கதியை. காட்டிட - காண்பிக்குமாறு. ப்: சந்தி. போற்றும் - தாம் வாழ்த்தியருளும். திருஅங்க மாலையும் - திருஅங்க மாலையையும். உள்ளிட்டு - உள்ளடக்கி. எல்லை - வரம்பு. இல் - இல்லாத; கடைக்குறை. பன்மை - பலவாகிய தன்மையைப் பெற்ற. த்: சந்தி. தொகையும் - ஒரு திருக்குறுந்தொகையையும். இயம்பினர் - பாடியருளியவராகி; முற்றெச்சம். ஏத்தி - அந்தப் புஷ்பவனநாதேசுவரரைத் துதித்துவிட்டு. இருந்தார் - அந்தத் திருப்பூந்துருத்தியில் தங்கிக்கொண்டிருந்தார்.

அவ்வாறு அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"எனக்கென்றும் இனியானை எம்மான் தன்னை
எழிலாளும் ஏகம்பம் மேயான் தன்னை
மனக்கென்றும் வருவானை வஞ்சர் நெஞ்சில்
நில்லானை நின்றியூர் மேயான் தன்னைத்
தனக்கென்றும் அடியேனை ஆளாக் கொண்ட
சங்கரனைச் சங்கவார் குழையான் தன்னைப்
புனக்கொன்றைத் தாரணிந்த புனிதன் தன்னைப்
பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே."

அந்த நாயனார் பாடியருளிய மற்றொரு திருத்தாண்டகம் வருமாறு:

"வைத்தானை வானோர் உலகம் எல்லாம்
வந்திறைஞ்சி மலர்கொண்டு நின்று எல்லாம்
வித்தானை வேண்டிற்றொன் றீவான் தன்னை
விண்ணவர்தம் பெருமானை வினைகள் போக
உய்த்தானை ஒலிகங்கை சடைமேல் தாங்கி
ஒளித்தானை ஒருபாகத் துமையோ டாங்கே
பொய்த்தானைப் புண்ணியனைப் புனிதன் தன்னைப்
பொய்யிலியைப் பூந்துருத்திக் கண்டேன் நானே."

அந்த நாயனார் பாடியருளிய ஒரு தனித்திருத்தாண்டகம் வருமாறு:

"அப்பன்நீ அம்மைநீ ஐயனும் நீ
அன்புடைய மாமனும் மாமியும் நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ
ஒருகுலமும் சுற்றமும் ஓரூரும் நீ
துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய் நீ
துணையாயென் நெஞ்சம் துறப்பிப்பாய் நீ

இப்பொன்நீ இம்மணிநீ இம்முத்தும் நீ
இறைவன்நீ ஏறூர்ந்த செல்வன் நீயே.''

மற்றொரு தனித் திருத்தாண்டகம் வருமாறு:

''அணிதில்லை அம்பலமா டரங்காக் கொண்டார்
ஆலால வருநஞ்சம் அமுதாக் கொண்டார்
கணிவளர்தார்ப் பொன்னிதழிக் கமழ்தார் கொண்டார்
காதலார் கோடிகலந் திருக்கை கொண்டார்
மணிபணத்த அரவம்தோள் வளையார் கொண்டார்
மால்விடைமேல் நெடுவீதி போதக் கொண்டார்
துணிபுலித்தோ லினையாடை உடையாக் கொண்டார்
சூலங்கைக் கொண்டார் தொண்டெனைக் கொண்டாரே.''

பிறகு வரும் *391*-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'பொன்னைக் கொழிக்கும் காவிரியாறு வலமாக வந்த திருப்பூந்துருத்தியில் அந்தத் திருநாவுக்கரசு நாயனார் தங்கிக்கொண்டிருக்க கற்களைப் போன்ற வலிமையாகிய உள்ளங்களைப் பெற்ற வன்மையாகிய செயல்களைப் புரிவதில் வல்லவர்களாகிய சமணர் நெருப்பு வாதம், நீர் வாதம், தருக்க வாதம் ஆகிய வாதங்களினால் அவர்களுடைய கூட்டத்தை அடியோடு அழித்து விட்டுத் தென்னவனாகிய பாண்டிய மன்னனுடைய கூனை நிமிரச் செய்தருளி விபூதியினுடைய பிரகாசத்தை அந்தப் பாண்டிநாட்டில் பரவுவதைப் பார்த்து நிலைபெற்ற கீர்த்தியைக் கொண்ட சண்பை நகராகிய சீகாழியில் திருவவதாரம் செய்தருளிய வேதியராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், அந்தப் பாண்டிநாட்டுக்கு எழுந்தருளுகிறவரானார்.' பாடல் வருமாறு:

''பொன்னிவலம் கொண்டதிருப்
பூந்துருத்தி அவர்இருப்பக்

கன்மனத்து வல்லமணர்
தமைவாதிற் கட்டழித்துத்
தென்னவன்கூன் நிமிர்த்தருளித்
திருநீற்றின் ஒளிகண்டு
மன்னியசீர்ச் சண்பைநகர்
மறையவனார் வருகின்றார்.''

பொன்னி - பொன்னைக் கொழிக்கும் காவிரி ஆறு. வலம்கொண்ட - வலமாக வந்த. திருப்பூந்துருத்தி - திருப்பூந்துருத்தியில். அவர் - அந்தத் திருநாவுக்கரசு நாயனார். இருப்ப - தங்கிக்கொண்டிருக்க. க்: சந்தி. கல் - கருங்கற்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். மனத்து - உள்ளங்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். வல் - வன்மையாகிய செயல்களைப் புரிவதில் வல்லவர்களாகிய; வினையாலணையும் பெயர். அமணர் தமை - சமணர்களை; ஒருமை பன்மை மயக்கம். தமை: இடைக்குறை. தம்: அசைநிலை. வாதில் - நெருப்புவாதம், நீர்வாதம், தருக்கவாதம் ஆகிய வாதங்களினால்; ஒருமை பன்மை மயக்கம்; உருபு மயக்கம். கட்டழித்து - கூட்டத்தை அடியோடு அழித்துவிட்டு. த்: சந்தி. தென்னவன் - தென்னாடாகிய பாண்டி நாட்டை ஆட்சி புரியும் பாண்டிய மன்னனுடைய. கூன் - முதுகுக் கூனலையும் மார்புக் கூனலையும்; ஒருமை பன்மை மயக்கம். நிமிர்த்தருளி - நிமிருமாறு செய்தருளி. த்: சந்தி. திருநீற்றின் - விபூதியினுடைய. ஒளி - பிரகாசத்தை. கண்டு - பாண்டி நாட்டில் பரவுவதைப் பார்த்து. மன்னிய - நிலைபெற்ற. சீர் - சீர்த்தியைக் கொண்ட. ச்: சந்தி. சண்பைநகர் - சண்பை நகரமாகிய சீகாழி மாநகரத்தில் திருவவதாரம் செய்தருளிய; இடஆகுபெயர். மறையவனார் - வேதியராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார்.

வருகின்றார் - அந்தப் பாண்டி நாட்டுக்கு எழுந்தருளுகிற வரானார்.

பிறகு வரும் 392-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'இனிமையாகிய சுவையைப் பெற்ற செந்தமிழ் மொழியைப் பேசும் மக்கள் வாழ்ந்து வரும் பாண்டி நாட்டிலிருந்தும் எழுந்தருளிச் செழிப்பை உண்டாக்கு வதும் பொன்னைக் கொழிப்பதுமாகிய் காவிரியாறு வாய்ப்பாக அமைந்த பயிர் வளங்களை வழங்கும் பாண்டி நாட்டுக்கு எழுந்தருளிவந்து சேர்ந்த திருவாக்குக்களுக்கு அரசராகிய திருநாவுக்கரசு நாயனார் திருப்பூந்துருத்தியில் தங்கிக் கொண்டிருந்த பான்மையைக் கேள்வியுற்று வேகமாகச் சென்று ''அந்தத் திருநாவுக்கரசு நாயனாரிடம் யான் போவேன்'' என்று கூறிவிட்டு திருப்பூந் துருத்தியாகிய நீர்வளம், நிலவளம், ஆலயவளம், நன்மக்கள் வளம் முதலிய வளங்களைப் பெற்ற சிவத்தலமாகிய அந்தத் திருப்பூந்துருத்திக்கு வெளியில் உள்ள இடத்திற்கு வந்து அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சேர்ந்தார்.' பாடல் வருமாறு:

''தீந்தமிழ்நாட் டிடைநின்றும்
எழுந்தருளிச் செழும்பொன்னி
வாய்ந்தவளம் தருநாட்டு
வந்தணைந்தார் வாக்கினுக்கு
வேந்தர்இருந் தமைகேட்டு
'விரைந்தவர்பால் செல்வன்'எனப்
பூந்துருத்தி வளம்பதியின்
புறம்பணையில் வந்தணைந்தார்.''

தீம் - கேட்பதற்கு இனிமையாகிய சுவையைப் பெற்ற. தமிழ் - செந்தமிழ் மொழியைப் பேசும் மக்கள்

வாழ்ந்து வரும்; ஆகுபெயர். நாட்டிடை நின்றும் - பாண்டி நாட்டிலிருந்தும். எழுந்தருளி - அப்பால் எழுந்தருளி. ச்: சந்தி. செழும்' - வயல்களில் பாய்ந்து சம்பா நெற்பயிர்கள் செழித்து வளர்வதையும், குறுவை நெற்பயிர்கள் செழித்து வளர்வதையும், வேறு பலவகையான பயிர்களும் செழித்து வளர்வதையும் புரியும். பொன்னி - பொன்னைக் கொழிக்கும் காவிரியாறு. வாய்ந்த - வாய்ப்பாக அமைந்த. வளம் - சம்பா நெற்பயிர்களின் வளத்தையும், குறுவை நெற்பயிர்களின் வளத்தையும், கரும்புச் செடிகளின் வளத்தையும் இவற்றைப் போன்ற வேறு பல பயிர்களின் வளத்தையும்; ஒருமை பன்மை மயக்கம். தரு - வழங்கும். நாட்டு - பாண்டி நாட்டுக்கு. வாக்கினுக்கு - திருவாக்குக்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். வேந்தர் - அரசராகிய திருநாவுக்கரசு நாயனார். வந்து - எழுந்தருளி வந்து. அணைந்தார் - சேர்ந்தார். இருந்தமை - அந்த நாயனார் திருப்பூந்துருத்தியில் தங்கிக் கொண்டிருந்த பான்மையை. கேட்டு - கேள்வியுற்று. விரைந்து - வேகமாகச் சென்று. அவர்பால் - அந்தத் திருநாவுக்கரசு நாயனாரிடம். செல்வன் - யான் போவேன். என - என்று கூறிவிட்டு; இடைக்குறை. ப்: சந்தி. பூந்துருத்தி - திருப்பூந்துருத்தியாகிய. வளம் - நீர் வளம், நில வளம், செல்வ வளம், ஆலய வளம், நன்மக்கள் வளம் முதலிய வளங்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். பதியின் - சிவத்தலமாகிய அந்தத் திருப்பூந்துருத்திக்கு. புறம்பு - வெளியில் உள்ள. அணையில் - இடத்திற்கு; உருபு மயக்கம். வந்து அணைந்தார் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் வந்து சேர்ந்தார்.

பிறகு உள்ள 393-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'சண்பையாகிய சீகாழியில் திருவவதாரம் செய்தருளி வரும் முத்தமிழ் விரகராகிய திருஞான சமபந்த மூர்த்தி

நாயனார் திருப்பூந்துருத்திக்கு எழுந்தருளி வந்ததை அந்தத் திருநாவுக்கரசு நாயனார் கேள்வியுற்று இந்த மண்ணுலகத்தில் வாழும் மக்கள் புகழ்ந்து பாராட்டும் பெருமையையும் சீர்த்தியையும் பெற்றவராகிய வாகீசர் என்னும் திருநாவுக்கரசு நாயனார் தம்முடைய திருவுள்ளத்தில் மகிழ்ச்சியை அடைந்து தம்முடைய விழிகளில் பெருகி எழும் ஆனந்தத்தை அடையுமாறு அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைத் தரிசித்து அந்த நாயனாரை வணங்கும் விருப்பத்தோடு தம்முடைய எண்ணத்தில் பெருகி எழும் விருப்பம் அடையத் திருப்பூந்துருத்திக்கு அந்தத் திருநாவுக்கரசு நாயனார் எழுந்தருளி அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரை எதிர்கொண்டு வரவேற்றார்.' பாடல் வருமாறு:

"சண்பைவரும் தமிழ்விரகர்
எழுந்தருளத் தாம்கேட்டு
மண்பரவும் பெருங்கீர்த்தி
வாகீசர் மனம்மகிழ்ந்து
கண்பெருகும் களிகொள்ளக்
கண்டிறைஞ்சும் காதலினால்
எண்பெருகும் விருப்பெய்த
எழுந்தருளி எதிர்சென்றார்."

சண்பை - சண்பையாகிய சீகாழியில். வரும் - திருவவதாரம் செய்து எழுந்தருளும். தமிழ்விரகர் - முத்தமிழ் விரகராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். எழுந்தருள - திருப்பூந்துருத்திக்கு எழுந்தருளி வந்ததை; வினையாலணையும் பெயர். த்: சந்தி. 'தாம்' என்றது திருநாவுக்கரசு நாயனாரை. கேட்டு - கேள்வியுற்று. மண் - இந்த மண்ணுலகத்தில் வாழும் மக்கள்; இடஆகுபெயர். பரவும் - புகழ்ந்து பாராட்டும். பெரும் - பெருமையையும்.

கீர்த்தி - கீர்த்தியையும் பெற்றவராகிய; ஆகுபெயர். வாகீசர் - வாகீசர் என்னும் திருநாவுக்கரசு நாயனார். மனம் - தம்முடைய திருவுள்ளத்தில். மகிழ்ந்து - மகிழ்ச்சியை அடைந்து. கண் - தம்முடைய விழிகளில்; ஒருமை பன்மை மயக்கம். பெருகும் - பெருகி எழும். களி - ஆனந்தத்தை. கொள்ள - அடையுமாறு. க்: சந்தி. கண்டு - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைத் தரிசித்து. இறைஞ்சும் - அந்த நாயனாரை வணங்கும். காதலினால் - விருப்பத்தோடு; உருபு மயக்கம். எண் - தம்முடைய எண்ணத்தில். பெருகும் - பெருகி எழும். விருப்பு - விருப்பம். எய்த - அடைய. எழுந்தருளி - திருப்பூந் துருத்திக்கு அந்த நாயனார் எழுந்தருளி. எதிர் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு எதிரில். சென்றார் - போய் வரவேற்றார்.

பிறகு வரும் 394-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'சீகாழியில் வாழும் மக்களுக்கு அரசராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் திருப்பூந்துருத்திக்கு எழுந்தருளிவரும் சமயத்தில் அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரோடு சேர்ந்து கொண்டு அந்தத் திருநாவுக்கரசு நாயனாரும் அந்தத் திருப்பூந்துருத்தியை அடைவதற்கு விருப்பத்தைக் கொண்டவராகி, சுற்றிலும் நெருங்கியிருக்கும் மக்களுடைய நெருக்கமாக உள்ள கூட்டத்தில் யாரும் பாராமல் அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைத் தரையில் விழுந்து வணங்கியருளி, ''அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைச் சுமந்து கொண்டு வரும் மாணிக்கங்களைப் பதித்திருக்கும் முத்துப் பல்லக்கைத் தாழ்வாக இருக்கும் அடியேனுடைய உடம்பாகிய இதனைக் கொண்டு சுமப்பேன் அடியேன்'' என்று எண்ணி

அந்த முத்துப் பல்லக்கைத் தாங்கிக் கொண்டு எழுந்தருளினார்.' பாடல் வருமாறு:

''காழியர்கோன் வரும்எல்லை
கலந்தெய்திக் காதலித்தார்
சூழுமிடைந் திடுநெருக்கிற்
காணாமே தொழுதருளி
'வாழியவர் தமைத்தாங்கும்
மணிமுத்தின் சிவிகையினைத்
தாழும்உடல் இதுகொண்டு
தாங்குவன்யான்' எனத்தரித்தார்.''

காழியர் - சீகாழியில் வாழும் மக்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். கோன் - அரசராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். வரும் - திருப்பூந்துருத்திக்கு எழுந்தருளி வரும். எல்லை - சமயத்தில். கலந்து - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரோடு சேர்ந்து கொண்டு. எய்தி - அந்தத் திருநாவுக்கரசு நாயனாரும் அந்தத் திருப்பூந்துருத்தியை அடைந்து சேர்வதற்கு. க்: சந்தி. காதலித்தார் - விருப்பத்தைக் கொண்டவராகி; முற்றெச்சம். சூழும் - தம்மைச் சுற்றிலும். மிடைந்திடு -நெருங்கி யிருக்கும். நெருக்கில் - மக்கள் நெருக்கமாக நின்று கொண்டிருந்த கூட்டத்தில். காணாமே - யாரும் பாராதவாறு. தொழுது அருளி - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைத் தரையில் விழுந்து வணங்கியருளி. வாழி - அசைநிலை. அவர்தமை - அந்தத் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரை. தமை: இடைக்குறை. தம்: அசை நிலை. த்: சந்தி. தாங்கும் - சுமந்து கொண்டு வரும். மணி - மாணிக்கங்களைப் பதித்து இருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். முத்தின் சிவிகையினை - முத்துப் பல்லக்கை. இது திருநெல்வாயில்

அரத்துறைநாதர் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாருக்கு வழங்கியருளியது. த்: சந்தி. தாழும் - தாழ்வாக இருக்கும். உடல் - அடியேனுடைய உடம்பாகிய. இதுகொண்டு - இதனைக் கொண்டு. தாங்குவன் யான் - அடியேன் சுமப்பேன். என - என்று எண்ணி; இடைக்குறை. த்: சந்தி. தரித்தார் - அந்த முத்துப் பல்லக்கைத் தாங்கிக்கொண்டு எழுந்தருளினார்.

பிறகு உள்ள 395-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் ஏறிக்கொண்டு எழுந்தருளிய முத்துப் பல்லக்கை வந்து வேறு ஒருவரும் தெரிந்து கொள்ளாதவண்ணம் மறைவாக ஒளித்துக் கொண்ட வடிவத்தோடும் புகலியாகிய சீகாழியில் திருவவதாரம் செய்து அருளிய வேதியராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் ஏறிக்கொண்டு எழுந்தருளி வரும் மாணிக்கங்களைப் பதித்திருக்கும் முத்துக்களாலாகிய சந்தனக் கட்டையினால் செய்த அழகிய பல்லக்கைச் சுமக்கும் வேலையாட்களோடு தாமும் சுமந்து கொண்டு தம்முடைய திருவுள்ளம் களிப்பை அடையுமாறு எழுந்தருளுபவராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனாரை வேறு எந்த மனிதரும் தெளிவாக அறிந்து கொள்ள வில்லை.' பாடல் வருமாறு:

''வந்தொருவர் அறியாமே
மறைந்தவடி வொடும்புகலி
அந்தணனார் ஏறியெழுந்
தருளிவரும் மணிமுத்தின்
சந்தமணிச் சிவிகையினைத்
தாங்குவா ருடன்தாங்கிச்

சிந்தைகளிப் புறவருவார்
தமையாரும் தெளிந்திலரால்.''

வந்து - அவ்வாறு அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் ஏறிக்கொண்டு எழுந்தருளிய முத்துப் பல்லக்கை வந்து. ஒருவர் - வேறு ஒருவரும். அறியாமே - தெரிந்து கொள்ளாத வண்ணம். மறைந்த - மறைவாக ஒளித்துக்கொண்ட. வடிவொடும் - வடிவத்தோடும். புகலி - புகலியாகிய சீகாழியில் திருவவதாரம் செய்தருளிய; இடஆகுபெயர். அந்தணனார் - வேதியராகிய திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார். ஏறி - ஏறிக் கொண்டு. எழுந்தருளிவரும் மணி - எழுந்தருளி வரும் மாணிக்கங்களைப் பதித்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். முத்தின் - முத்துக்களால் செய்யப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். சந்த - சந்தனக் கட்டையினால் அமைத்த. மணி - அழகைப் பெற்ற. ச்: சந்தி. சிவிகையினை - பல்லக்கை. த்: சந்தி. தாங்குவாருடன் - சுமக்கும் வேலையாட்களோடு; ஒருமை பன்மை மயக்கம். தாங்கி - தாமும் சுமந்து கொண்டு. 'தாமும்' என்றது திருநாவுக்கரசு நயானாரை. ச்: சந்தி. சிந்தை - தம்முடைய திருவுள்ளம். களிப்பு உற - மகிழ்ச்சியை அடையுமாறு. வருவார் தமை - எழுந்தருளுபவராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனாரை. தமை: இடைக்குறை. தம்: அசைநிலை. யா்ரும் - வேறு எந்த மனிதரும். தெளிந்திலர் - தெளிவாக அறிந்து கொள்ளவில்லை. ஆல்: ஈற்றசை நிலை.

பிறகு வரும் 396-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'அந்தப் பெருமையைப் பெற்றிருக்கும் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாராகிய முனிவர் அந்தத் திருநாவுக்கரசு நாயனார் தாங்கிக் கொண்டிருந்த திருப்பூந்துருத்திக்குச் சமீபமாக எழுந்தருளி வந்து, ''அப்பர்

சுவாமிகள் எந்த இடத்தில் இருக்கிறார்?'' என்று கேட்க, அந்தத் திருநாவுக்கரசு நாயனார் உருக்கத்தை அடைந்து நின்றுகொண்டு, ''தேவரீருடைய அடியேனாகிய யான் தேவரீருடைய திருவடிகளைச் சுமந்து கொண்டு வரும் பெருமையைப் பெற்ற நல்ல வாழ்வு அடியேனுக்கு வந்து அடையும் பாக்கியத்தைப் பெற்றுக் கொண்டு இந்த முத்துப் பல்லக்கிற்கு அடியில் இருக்கிறேன்'' என்று அந்தத் திருநாவுக்கரசு நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.' பாடல் வருமாறு:

''திருஞான மாமுனிவர்
அரசிருந்த பூந்துருத்திக்
கருகாக எழுந்தருளி
'எங்குற்றார் அப்பர்?' என
உருகாநின், 'றும்அடியேன்
உம்அடிகள் தாங்கிவரும்
பெருவாழ்வு வந்தெய்தப்
பெற்றிங்குற் றேன்'என்றார்.''

திருஞான மாமுனிவர் - அந்தப் பெருமையைப் பெற்று விளங்கும் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாராகிய முனிவர். அரசு - அந்தத் திருநாவுக்கரசு நாயனார்; திணை மயக்கம். இருந்த - தங்கிக் கொண்டிருந்த. பூந்துருத்திக்கு - திருப்பூந்துருத்திக்கு. அருகாக - சமீபமாக. எழுந்தருளி - எழுந்தருளி வந்து. அப்பர் - அப்பர் சுவாமிகள். எங்கு - எந்த இடத்தில். உற்றார் - இருக்கிறார். என - என்று அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் கேட்க; இடைக்குறை. உருகா - உருக்கத்தை அடைந்து. நின்று - நின்றுகொண்டு. உம் - தேவரீருடைய. அடியேன் - அடியேனாகிய நான். உம் - தேவரீருடைய. அடிகள் - திருவடிகளை. தாங்கி வரும் - சுமந்து கொண்டு வரும். பெரு - பெருமையைப் பெற்ற.

வாழ்வு - நல் வாழ்வு. வந்து எய்த - அடியேனுக்கு வந்து அடையும்; எச்சத் திரிபு. ப்: சந்தி. பெற்று - பாக்கியத்தைப் பெற்றுக் கொண்டு. இங்கு - இந்த முத்துப் பல்லக்கிற்கு அடியில். உற்றேன் - இருக்கிறேன். என்றார் - என்று அந்தத் திருநாவுக்கரசு நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்தார்.

பிறகு உள்ள 397-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'ஆளுடைய பிள்ளையாராகிய அந்தத் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் திருநாவுக்கரசு நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்த அந்த வார்த்தைகளைக் கேட்டருளி பெருகி எழுந்த வேகத்தோடு முத்துப் பல்லக்கிலிருந்து இறங்கி வந்து தம்முடைய திருவுள்ளத்தில் மிகுதியாக எழுந்த பதைபதைப்பை அடைந்து திருவதிகை வீரட்டானேசுவரர் தடுத்து ஆட்கொண்டு தம்முடைய அடிமையாக ஏற்றுக் கொண்டருளிய திருநாவுக்கரசு நாயனாரை அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தரையில் விழுந்து பணிய அப்பொழுது வள்ளலாரும் வாகீசரும் ஆகிய திருநாவுக்கரசு நாயனார் அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தம்மைப் பணியாததற்கு முன்பே தாம் அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைப் பணியத் துள்ளிக் குதிக்கும் மான் குட்டியைத் தம்முடைய திருக்கரத்தில் ஏந்தியவராகிய புஷ்பவன நாதேசுவரருடைய திருத் தொண்டர்கள் எல்லாரும் அந்த இரண்டு நாயன்மார் களையும் வணங்கிப் பேராரவாரத்தை எழுப்பினார்கள்.' பாடல் வருமாறு:

"பிள்ளையார் அதுகேளாப்
பெருகுவிசை யுடன்இழிந்தே
உள்ளமிகு பதைப்பெய்தி
உடையஅர சினைவணங்க

வள்ளலார் வாகீசர்
அவர்வணங்கா முன்வணங்கத்
துள்ளுமான் மறிக்கரத்தார்
தொண்டரெலாம் தொழுதார்த்தார்.''

பிள்ளையார் - ஆளுடைய பிள்ளையாராகிய அந்தத் திருஞானசம்பந்த மூர்த்தி நயானார். அது - திருநாவுக்கரசு நாயனார் மலர்ந்தருளிச் செய்த அந்த வார்த்தைகளை; ஒருமை பன்மை மயக்கம். கேளா - கேட்டருளி. ப்: சந்தி. பெருகு - பெருகி எழுந்த. விசையுடன் - வேகத்தோடு. இழிந்து - முத்துப் பல்லக்கிலிருந்து இறங்கி வந்து. ஏ: அசை நிலை. உள்ளம் - தம்முடைய திருவுள்ளத்தில். மிகு - மிகுதியாக எழுந்த. பதைப்பு - பதைபதைப்பை. எய்தி - அடைந்து. உடைய - திருவதிகை வீரட்டானேசுவரர் தடுத்து ஆட்கொண்டு தம்முடைய அடிமையாக ஏற்றுக் கொண்டருளிய. அரசினை - திருநாவுக்கரசு நாயனாரை; திணை மயக்கம். வணங்க - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தரையில் விழுந்து பணிய. வள்ளலார் - அப்பொழுது வள்ளலாரும். வாகீசர் - வாகீசருமாகிய திருநாவுக்கரசு நாயனார். அவர் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். வணங்காமுன் - தம்மைப் பணியாததற்கு முன்பே. வணங்க - தாம் அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரைப் பணிய. த்: சந்தி. துள்ளு - துள்ளிக் குதிக்கும். மான்மறி - மான்குட்டியை. க்: சந்தி. கரத்தார் - தம்முடைய திருக்கரத்தில் ஏந்தியவராகிய புஷ்பவனநாதேசு வரருடைய. தொண்டர் - திருத்தொண்டர்கள்; ஒருமை பன்மை மயக்கம். எலாம் - எல்லாரும்; இடைக்குறை. தொழுது - அந்த இரண்டு நாயன்மார்களையும் வணங்கி. ஆர்த்தார் - பேராரவாரத்தை எழுப்பினார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு உள்ள 398-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'கழுமலமாகிய சீகாழியை ஆட்சி புரிந்தருளும் அரசராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அந்தத் திருநாவுக்கரசு நாயனாரோடு சேர்ந்து கொண்டருளி செழுமையைப் பெற்ற சந்திரன் தன்மேலே தவழும் பூம்பொழிலைப் பெற்ற திருப்பூந்துருத்தியாகிய செல்வர்கள் வாழும் அழகிய சிவத்தலத்தில் மழுவாயுதத் தோடு மான் குட்டியை ஏந்திக் கொண்டிருக்கும் அழகிய கரங்களைப் பெற்றவராகிய புஷ்பவன நாதேசுவரருடைய செந்தாமரை மலர்களைப் போன்ற திருவடிகளை வணங்கித் தம்முடைய திருவுள்ளத்தில் பக்தியினால் உருக்கத்தை அடைந்து ஆனந்தத்தைப் பெற்று அந்தப் புஷ்பவன நாதேசுவரரை துதிகளைப் புரிந்தருளி அந்தத் திருப்பூந்துருத்தியில் அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரோடு தாமும் கூடத் தங்கிக் கொண்டிருந்தார்.' பாடல் வருமாறு:

"கழுமலக்கோன் திருநாவுக்
கரசருடன் கலந்தருளிச்
செழுமதியம் தவழ்சோலைப்
பூந்துருத்தித் திருப்பதியில்
மழுவினொடும் மான்ஏந்து
திருக்கரத்தார் மலர்த்தாள்கள்
தொழுதுருகி இன்புற்றுத்
துதிசெய்தங் குடனிருந்தார்."

கழுமல - கழுமலமாகிய சீகாழியை. க்: சந்தி. கோன் - ஆட்சி புரிந்தருளும் அரசராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். திருநாவுக்கரசருடன் - அந்தத் திருநாவுக்கரசு நாயனாரோடு. கலந்தருளி - சேர்ந்து கொண்டருளி. ச்: சந்தி. செழு - செழுமையைப் பெற்ற. மதியம் - சந்திரன். தவழ்

- தன் மேலே தவழும். சோலை - பூம்பொழிலைப் பெற்ற. ப்: சந்தி. பூந்துருத்தி - திருப்பூந்துருத்தியாகிய. த்: சந்தி. திரு - செல்வம் படைத்தவர்கள் வாழும்; திணை மயக்கம். ப்: சந்தி. பதியில் - அழகிய சிவத்தலத்தில். மழுவினொடு - மழுவாயுதத்தோடு. மான் - மான் குட்டியை. ஏந்து - ஏந்திக் கொண்டிருக்கும். திரு - அழகிய. க்: சந்தி. கரத்தார் - கரங்களைப் பெற்றவராகிய; ஒருமை பன்மை மயக்கம். மலர் - செந்தாமரை மலர்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தாள்கள் - திருவடிகளை. தொழுது - வணங்கி. உருகி - தம்முடைய திருவுள்ளத்தில் பக்தியினால் உருக்கத்தை அடைந்து. இன்புற்று - பேரானந்தத்தைப் பெற்று. த்: சந்தி. துதி - அந்தப் புஷ்பவன நாதேசுவரரைத் தோத்திரங்களை; ஒருமை பன்மை மயக்கம். செய்து - புரிந்து கொண்டருளி. அங்கு - அந்தத் திருப்பூந்துருத்தியில். உடன் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரோடு. இருந்தார் - தாமும் கூடத் தங்கிக்கொண்டிருந்தார். 'தாம்' என்றது திருநாவுக்கரசு நாயனாரை.

பிறகு வரும் 399-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'வன்மையான செயல்களைப் புரிந்து வரும் சமணர்களை நெருப்பு வாதத்திலும், நீர் வாதத்திலும், தருக்க வாதத்திலும் அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் வெற்றியைப் பெற்றதையும், பாண்டிய மன்னனிடம் பொருந்தியிருந்த முதுகுக் கூன், மார்புக் கூன் ஆகிய இரண்டு கூனல்களையும் அந்த நாயனார் நிமிருமாறு புரிந்தருளியதையும், குளிர்ச்சியைப் பெற்ற தாமிரபருணி யாறு ஓடும் நீரைப் பெற்ற நீர்வளத்தைப் பெற்ற பாண்டி நாட்டில் வரம்பு இல்லாத அழகைப் பெற்ற விபூதியைப் பக்தர்கள் தங்களுடைய திருமேனிகள் முழுவதிலும்

பூசிக்கொள்வதை வளரப் புரிந்தருளியதையும், பெருமையைப் பெற்ற தவத்தைப் புரிந்தருளிய அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் தமக்குத் திருவாய் மலர்ந்தருளிச் செய்ய அந்த வார்த்தைகளைப் பரிசுத்தமாகிய புகழைப் பெற்றவரும் வாகீசருமாகிய திருநாவுக்கரசு நாயனார் கேட்டருளி மகிழ்ச்சியை அடைந்தார்.' பாடல் வருமாறு:

"வல்அமணர் தமைவாதில்
வென்றதுவும் வழுதிபால்
புல்லியகூன் நிமிர்த்ததுவும்
தண்பொருந்தப் புனல்நாட்டில்
எல்லையிலாத் திருநீறு
வளர்த்ததுவும் இருந்தவத்தோர்
சொல்லஅது கேட்டுவந்தார்
தூயபுகழ் வாகீசர்."

வல் - வன்மையான செயல்களையே புரிந்து கொண்டு வரும்; ஒருமை பன்மை மயக்கம். அமணர்தமை - சமணர்களை. தமை: இடைக்குறை. தம்: அசைநிலை. வாதில் - நெருப்பு வாதத்திலும், நீர் வாதத்திலும், தருக்க வாதத்திலும்; ஒருமை பன்மை மயக்கம். வென்றதுவும் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் வெற்றியைப் பெற்றதையும். வழுதிபால் - பாண்டிய மன்னனிடம். புல்லிய - பொருந்தியிருந்த. கூன் - முதுகுக் கூன், மார்புக் கூன் ஆகிய இரண்டு கூனல்களையும்; ஒருமை பன்மை மயக்கம். கூன் - வளைவு. நிமிர்த்ததுவும் - அந்தத் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் நிமிருமாறு புரிந்தருளியதையும். தண் - குளிர்ச்சியைப் பெற்ற. பொருந்த - தாமிரபருணியாறு ஓடும். ப்: சந்தி. புனல் - நீர் வளத்தைப் பெற்ற. நாட்டில் - பாண்டி நாட்டில். எல்லை - வரம்பு. இலா - இல்லாத; இடைக்கறை. த்: சந்தி. திரு நீறு -

விபூதியைப் பக்தர்கள் தங்களுடைய திருமேனிகள் முழுவதிலும் பூசிக் கொண்டதை; ஆகு பெயர். வளர்த்தது வும் - அந்த நாயனார் வளருமாறு புரிந்தருளியதையும். இரும் - பெருமையைப் பெற்று விளங்கும். தவத்தோர் - தவத்தைப் புரிந்தருளிய தவசியாராகிய அந்தத் திருஞான சம்பந்தர் மூர்த்தி நாயனார். சொல்ல - தமக்குத் திருவாய் மலர்ந்தருளிச் செய்ய. 'தமக்கு' என்றது திருநாவுக்கரசு நாயனாருக்கு என்பதை. அது - அந்த வார்த்தைகளை; ஒருமை பன்மை மயக்கம். கேட்டு - கேட்டருளி. தூய - பரிசுத்தமாகிய. புகழ் - புகழைப் பெற்றவரும்; வினையாலணையும் பெயர். வாகீசர் - வாகீசருமாகிய திருநாவுக்கரசு நாயனார். உவந்தார் - மகிழ்ச்சியை அடைந்தார்.

பிறகு வரும் 400-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'நல்ல குணங்களைப் பெற்ற பாண்டிய மன்ன னுடைய பெருமையைப் பெற்ற பட்டமகிஷியாராகிய மங்கையர்க் கரசியாருடைய இரக்கத்தையும் அவரோடு நட்பைப் பெற்ற பாண்டிய மன்னனுடைய முதல் அமைச்சராகிய குலச்சிறை நாயனாருடைய பெருமையை யும், சிவஞானத்திற்குத் தலைவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் அந்தத் திருநாவுக்கரசு நாயனாருடைய எண்ணத்தில் பெருகிப் பதியுமாறு திருவாய் மலர்ந்தருளிச் செய்ய வரம்பு இல்லாத சீர்த்தியைப் பெற்ற வாகீசராகிய திருநாவுக்கரசு நாயனார் இந்த மண்ணுலகத்தில் புகழோடு நிலாவும் தமிழ்நாடாகிய சோழ நாட்டைச் சென்று பார்ப்பதற்கு தம்முடைய திருவுள்ளத்தில் விருப்பத்தைக் கொண்டருளினார்.' பாடல் வருமாறு:

"பண்புடைய பாண்டிமா
தேவியார் தம்பரிவும்

நண்புடைய குலச்சிறையார்
பெருமையும்ஞா னத்தலைவர்
எண்பெருக உரைத்தருள
எல்லையில்சீர் வாகீசர்
மண்குலவு தமிழ்நாடு
காண்பதற்கு மனம்கொண்டார்.''

பண்பு - நல்ல குணங்களை; ஒருமை பன்மை மயக்கம். உடைய - பெற்ற. பாண்டிமா தேவியார்தம் - பாண்டிய மன்னனுடைய பெருமையைப் பெற்ற பட்ட மகிஷியாராகிய மங்கையர்க்கரசியாருடைய. தம்: அசை நிலை. பரிவும் - இரக்கத்தையும். நண்புஉடைய - அந்த மங்கையர்க்கரசியாரோடு நட்பைப் பெற்ற. குலச்சிறை யார் - பாண்டிய மன்னனுடைய முதல் அமைச்சராகிய குலச்சிறை நாயனாருடைய. பெருமையும் - பெருமையை யும். ஞான - சிவஞானத்திற்கு. த்: சந்தி. தலைவர் - தலைவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். எண் - அந்தத் திருநாவுக்கரசு நாயனாருடைய எண்ணத்தில். பெருக - பெருகிப் பதியுமாறு. உரைத்தருள - திருவாய் மலர்ந்தருளிச் செய்ய. எல்லை - வரம்பு. இல் - இல்லாத; கடைக்குறை. சீர் - சீர்த்தியைப் பெற்ற. வாகீசர் - வாகீசராகிய திருநாவுக்கரசு நாயனார். மண் - இந்த மண்ணுலகத்தில். குலவு - புகழோடு நிலாவும். தமிழ்நாடு - தமிழ்நாடாகிய சோழ நாட்டை. காண்பதற்கு - சென்று பார்ப்பதற்கு. மனம் - தம்முடைய திருவுள்ளத்தில். கொண்டார் - விருப்பத்தைக் கொண்டருளினார்.

அடுத்து வரும் 401-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'பிரமபுரமாகிய சீகாழியில் திருவவதாரம் செய்தருளிய அழகிய முனிவராகிய திருஞான சம்பந்த

மூர்த்தி நாயனார் பெருமையைப் பெற்று விளங்கும் நல்ல தொண்டை நாட்டிற்கு எழுந்தருளி ஹரனாகிய சிவபெருமான் தங்கித் திருக்கோயில் கொண்டிருக்கும் சிவத்தலங்களை அடைந்து அந்தத் தலங்களில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்களை வணங்கி விட்டு பாடியருளுமாறு அந்தச் சிவத்தலங்களில் அறிவைப் பெற்ற திருநாவுக்கரசு நாயனார் திருவாய் மலர்ந்தருளிச் செய்ய தாரகாட்சன், வித்யுன்மாலி, வாணன் என்னும் மூன்று அசுரர்களுக்கு உரிய பறக்கும் கோட்டைகளாகிய மூன்று புரங்களை எரித்தவராகிய பிரமபுரீசருடைய அழகிய புதல்வராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் திருப்பூந்துருத்திக்கு எழுந்தருளி அங்கே கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் புஷ்பவன நாதேசுவரரை வணங்கி விட்டு அந்தத் திருப்பூந்துருத்தியை விட்டுவிட்டு அப்பால் எழுந்தருளலானார்.' பாடல் வருமாறு:

"பிரமபுரத் திருமுனிவர்
பெருந்தொண்டை நன்னாட்டில்
அரனுறையும் தானங்கள்
அணைந்திறைஞ்சிப் பாடுதற்கங்
குரனுடைய திருநாவுக்
கரசர்உரை செய்தருளப்
புரமெரித்தார் திருமகனார்
பூந்துருத்தி தொழுதகன்றார்."

பிரமபுர - பிரமபுரமாகிய சீகாழியில் திருவவதாரம் செய்தருளிய; ஆகுபெயர். த்: சந்தி. திரு - அழகிய. முனிவர் - முனிவராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார். பெரும் - பெருமையைப் பெற்று விளங்கும். தொண்டை நன்னாட்டில் - நல்ல தொண்டை நாட்டில். அரன் - ஹரனாகிய சிவபெருமான். உறையும் - தங்கித்

திருக்கோயில் கொண்டிருக்கும். தானங்கள் - பல சிவத்தலங்களுக்கு. அணைந்து - அந்த நாயனார் அடைந்து. இறைஞ்சி - அந்தச் சிவத்தலங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்களை வணங்கிவிட்டு. பாடுதற்கு - பாடும் பொருட்டு. அங்கு - அந்தச் சிவத்தலங்களில். உரன் - அறிவை. உடைய - பெற்ற. திருநாவுக்கரசர் - திருநாவுக்கரசு நாயனார். உரை - செய்தருள - திருவாய் மொழிந்தருளிச் செய்ய. ப்: சந்தி. புரம் - தாரகாட்சன், வித்யுன்மாலி, வாணன் என்னும் மூன்று அசுரர்களுக்கு உரிய பறக்கும் கோட்டைகளாகிய மூன்று புரங்களை; ஒருமை பன்மை மயக்கம். எரித்தார் - எரித்தவராகிய பிரமபுரீசருடைய. திரு - அழகிய. மகனார் - புதல்வராகிய திருஞான சம்பந்த மூர்த்தி நயானார். பூந்துருத்தி - திருப்பூந்துருத்திக்கு எழுந்தருளி. தொழுது - புஷ்பவன நாதேசுவரரை வணங்கிவிட்டு. அகன்றார் - அந்தத் திருப்பூந்துருத்தியை விட்டுவிட்டு மேலே எழுந்தருளினார்.

புரமெரித்தார் திருமகனார்: ''இமையப் பாவை திருமுலைப்பால் தேகம் உய்ய உண்டவர்தாம் திருமாமகனார் ஆதலினால்.'', ''சேவிற்றிகழ்ந்தவர் மைந்தரான திருஞான சம்பந்தர்.'', ''புரமெரித்தார் திருமகனார்.'', ''செய்ய மேனியர் திருமகனார்.'' ''சூகரமும் அன்னமுமாய்த் தேடினார் இருவர்க்கும் தெரிவரியார் திருமகனார்.'', ''ஆறு சூடினார் திருமகனார்.'' என்று சேக்கிழார் பாடியருளியவற்றைக் காண்க.

பிறகு உள்ள 402-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'திருவதிகை வீரட்டானேசுவரர் தடுத்து ஆட்கொண்ட திருநாவுக்கரசு நாயனார் அழகிய கண்களைப் பெற்றவராகிய புஷ்பவன நாதேசுவரர் வழங்கிய

சீர்த்தியைப் பெற்ற திருவருளைப் பெற்றுக் கொண்டு அந்தச் சிவத்தலமாகிய திருப்பூந்துருத்தியிலிருந்தும் புறப்பட்டு அந்த நாயனார் பாண்டி நாட்டுக்கு எழுந்தருளும் திருவுள்ளப் பான்மையைப் பெற்றவராகித் தெற்குத் திசைக்கு எழுந்தருளி பார்ப்பதற்கு உரிய தகுதியைப் பெற்ற திருப்புத்தூருக்கு அந்த நாயனார் எழுந்தருளி அந்தச் சிவத்தலத்தில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீதளி நாதரை வணங்கித் துதித்து விட்டுச் சூரியனும் சந்திரனும் தடவித் தவழும் துவசங்களைக் கட்டியிருக்கும் திருமதிலைப் பெற்ற மதுரையில் உள்ள திருக்கோயிலாகிய திரு ஆலவாயை அடைந்தார்.' பாடல் வருமாறு:

"ஆண்டஅர சங்கணர்சீர்
அருள்பெற்றப் பதிநின்றும்
பாண்டிநாட் டெழுந்தருளும்
பான்மையராய்த் தென்றிசைபோய்க்
காண்டகைமை திருப்புத்தூர்
பணிந்தேத்திக் கதிர்மதியம்
தீண்டுகொடி மதில்மதுரைத்
திருஆல வாய்சேர்ந்தார்."

ஆண்ட - திருவதிகை வீரட்டானேசுவரர் தடுத்து ஆட்கொண்ட. அரசு - திருநாவுக்கரசு நாயனார்; திணை மயக்கம். அம் - அழகிய. கணர் - கண்களைப் பெற்ற வராகிய புஷ்பவன நாதேசுவரர். கண்: ஒருமை பன்மை மயக்கம். கணர்: இடைக்குறை. சீர் - சீர்த்தியைப் பெற்ற. அருள் - வழங்கிய திருவருளை. பெற்று - பெற்றுக் கொண்டு. அப்பதி நின்றும் - அந்தச் சிவத்தலமாகிய திருப்பூந்துருத்தியிலிருந்தும் புறப்பட்டு. பாண்டிநாட்டு - பாண்டி நாட்டுக்கு. எழுந்தருளும் - எழுந்தருளிச் செல்லும்.

பான்மையராய் - திருவுள்ளப் பான்மையைக் கொண்டவராகி. த்: சந்தி. தென்திசை - தெற்குத் திசைக்கு. போய் - அந்த நாயனார் எழுந்தருளி. க்: சந்தி. காண்டகைய - பார்ப்பதற்கு உரிய தகுதியைப் பெற்ற. திருப்புத்தூர் - திருப்புத்தூருக்கு அந்த நாயனார் எழுந்தருளி. பணிந்து - அந்தச் சிவத்தலத்தில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீதளிநாதரை வணங்கி. ஏத்தி - துதித்துவிட்டு. க்: சந்தி. கதிர் - சூரியனும். மதியம் - சந்திரனும். தீண்டு - தடவித் தவழும். கொடி - துவசங்களைக் கட்டியிருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். மதில் - திருமதில் சூழ்ந்த. மதுரை - மதுரை மாநகரத்தில் விளங்கும் திருக்கோயிலாகிய; இடஆகு பெயர். த்:சந்தி. திரு ஆலவாய் - திருவால வாயை. சேர்ந்தார் - அந்த நாயனார் அடைந்தார்.

திருப்புத்தூர்: இது பாண்டி நாட்டில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவருடைய திருநாமங்கள் புத்தூரீசர், ஸ்ரீதளி நாதர் என்பவை. அம்பிகை சிவகாமி அம்மை. தீர்த்தம் ஸ்ரீதளி தீர்த்தம். தலவிருட்சம் கொன்றை மரம். இது திருக்கோஷ்டியூரிலிருந்து வடக்குத் திசையில் ஐந்தரை மைல் தூரத்தில் உள்ளது. இது திருமகள் வழிபட்ட சிவத்தலம். வயிரவர் சந்நிதி சிறப்பைப் பெற்றது. சபாபதியின் திருவுருவமும் சிவகாமியம்மையின் திருவுருவமும் சிலை வடிவத்தில் உள்ளன. திருமாலுக்கும் தனியாக ஒரு சந்நிதி இந்தத் திருக்கோயிலில் இருக்கிறது. திருக்கோயிலுக்கு வடக்குத் திசையில் ஸ்ரீதளி தீர்த்தமும் கிழக்குத் திசையில் சிவகங்கையும் உள்ளன.

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"ஏடேறு மலர்க்கமலத் தயனும் மாலும்
இந்திரனும் பணிந்தேத்த இருக்கின் றான்காண்
தோடேறு மலர்க்கடுக்கை வன்னி மத்தம்
துன்னியசெஞ் சடையான்காண் துகடீர் சங்கம்
மாடேறி முத்தீனும் கானல் வேலி
மறைக்காட்டு மாமணிகாண் வளங்கொள் மேதி
சேடேறி மடுப்படியும் திருப்புத் தூரில்
திருத்தளியான் காணவனென் சிந்தை யானே."

இந்தத் தலத்தைப் பற்றித் தக்கராகப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"எங்கள் விம்மு வெறியார் பொழிற் சோலை
திங்க ளோடு திளைக்கும் திருப்புத் தூரர்க்
கங்கை தங்கும் முடியா ரவர் போலும்
எங்கள் உச்சி உறையும் இறை யாரே."

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய மற்றோரு திருத்தாண்டகம் வருமாறு:

"மின்காட்டும் கொடிமருங்குல் உமையாட் கென்றும்
விருப்பவன்காண் பொருப்புவலிச் சிலைக்கை
யோன்காண்
நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கம் ஏறி
நற்கனகக் கிழிதருமிக் கருளி னோன்காண்
பொன்காட்டக் கடிக்கொன்றை மருங்கே நின்ற
புனக்காந்தள் கைகாட்டக் கண்டு வண்டு
தென்காட்டும் செழுபுறவில் திருப்புத் தூரில்
திருத்தளியான் காணவனென் சிந்தை யானே."

பிறகு வரும் *403*-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அவ்வாறு அந்தத் திருநாவுக்கரசு நாயனார் எழுந்தருளி மதுரை மாநகரத்தை அடைந்து அந்த நகரத்தில் திருத்தமாக அமைந்ததும், செந்தமிழ் நூல்களை ஆராய்வதும் ஆகிய தமிழ்ச் சங்கத்தில் அந்த பழங்காலத்தில் தாமும் ஒரு புலவராக வீற்றிருந்து தமிழ் நூல்களை ஆராய்ச்சி புரிந்தருளிய அழகிய கண்களைப் பெற்றவராகிய ஆலவாய் இறையனார் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலினுடைய முற்றத்திற்கு எழுந்தருளி அந்தத் திருக்கோயிலை வலமாக வந்து சுந்தரேசப் பெருமானுடைய சந்நிதியில் அந்தப் பெருமானை வணங்கிவிட்டு ஆலயத்துக்குள் அந்த நாயனார் நுழைந்து வலிமையைப் பெற்ற ஒப்பற்ற திருமாலாகிய இடப வாகனத்தை ஓட்டுபவராகிய அந்தச் சொக்கலிங்கக் கடவுளைப் பணிந்து மகிழ்ச்சியோடும் ஆனந்த சாகரத்தில் முழுகி இன்புற்றார்.' பாடல் வருமாறு:

"சென்றணைந்து மதுரையினில்
திருந்தியநூற் சங்கத்துள்
அன்றிருந்து தமிழாராய்ந்
தருளியஅங் கணர்கோயில்
முன்றிலினை வலங்கொண்டு
முன்இறைஞ்சி உள்புக்கு
வன்றனிமால் விடையாரை
வணங்கிமகிழ் வொடும்திளைத்தார்."

சென்று - அவ்வாறு அந்தத் திருநாவுக்கரசு நாயனார் எழுந்தருளி. அணைந்து - மதுரை மாநகரத்தை அடைந்து. மதுரையினில் - அந்த மதுரை மாநகரத்தில். திருந்திய - திருத்தமாக அமைந்த. நூல் - புலவர்கள் செந்தமிழ் நூல்களை ஆராய்ச்சி புரியும்; ஒருமை பன்மை மயக்கம். சங்கத்துள் - தமிழ்ச் சங்கத்தில். அன்று - அந்தப் பழங்காலத்தில். இருந்து - தாமும் ஒரு புலவராக

வீற்றிருந்து. தமிழ்ச் சங்கத்தில் வீற்றிருந்த புலவர்களுள், 'திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளும் ஒருவர்' என்று இறையனார் அகப்பொருள் உரையில் வருவதைக் காண்க. தமிழ் - செந்தமிழ் நூல்களை; ஆகுபெயர். ஆராய்ந்தருளிய - ஆராய்ச்சி புரிந்தருளிய. அம் - அழகிய. கணர் - கண்களைப் பெற்றவராகிய ஆலவாய் இறையனார். கணர்: இடைக்குறை. கண்: ஒருமை பன்மை மயக்கம். கோயில் - எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலினுடைய. முன்றி லினை - முற்றத்திற்கு எழுந்தருளி; உருபு மயக்கம். முன்றில் - இல்முன்; பின் முன்னாகத் தொக்க தொகை. வலங்கொண்டு - அந்தத் திருக்கோயிலை வலமாக வந்து. முன் - சுந்தரேசப் பெருமானுடைய சந்நிதியில். இறைஞ்சி - அந்தப் பெருமானை அந்த நாயனார் வணங்கி விட்டு. உள் - திருக்கோயிலுக்குள். புக்கு - நுழைந்து. வன் - வலிமையைப் பெற்ற. தனி - ஒப்பற்ற. மால் - திரு மாலாகிய. விடையாரை - இடப வாகனத்தை ஓட்டு பவராகிய அந்தச் சொக்கலிங்கக் கடவுளை. வணங்கி - பணிந்து. மகிழ்வொடும் - மகிழ்ச்சியோடும். திளைத்தார் - ஆனந்தசாகரத்தில் முழுகி இன்புற்றார்.

மதுரை: இது பாண்டி நாட்டின் தலைநகர். இங்கே உள்ள திருக்கோயிலுக்கு ஆலவாய் என்று பெயர். இங்கே கோயில் கொண்டிருப்பவருடைய திருநாமங்கள் சொக்க நாதர், சொக்கலிங்கக் கடவுள், சோமசுந்தரக் கடவுள், சுந்தரேசர் என்பவை. அம்பிகையின் திருநாமங்கள் மீனாட்சியம்மை, அங்கயற்கண் அம்மை, மீனலோசனி என்பவை. இது வைகை ஆற்றங்கரையில் உள்ள தலம். இங்கே உள்ள தீர்த்தங்கள் பொற்றாமரைக் குளம், எழுகடல் முதலியவை. தலவிருட்சம் கடம்ப மரம். இது சோமசுந்தரக் கடவுள் அறுபத்து நான்கு திருவிளை யாடல்களைப் புரிந்தருளிய தலம். அவற்றைப் பரஞ்சோதி

முனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணத்தினால் தெரிந்து கொள்ளலாம். கபிலர், பரணர், நக்கீரர் முதலிய பொய்யடிமை இல்லாத 49 புலவர்களாகிய சங்கத்தார் இருந்த தலம் இது. திருநீறு, உருத்திராக்கம், சடைமுடி என்னும் மூன்றையும் தரித்துக் கொண்டு மூர்த்தி நாயனார் அரசாட்சி புரிந்தருளிய தலம் இது. இதை, ''மும்மையால் உலகாண்ட மூர்த்திக்கும் அடியேன்'' என்று சுந்தரமூர்த்தி நாயனார் பாடியருளிய திருத்தாண்டகத் தொகையில் வருவதனால் உணரலாம். அரிமர்த்தன பாண்டிய மன்னன், அரசாட்சி புரிந்த காலத்தில் மாணிக்கவாசகர், ''தென்னவன் பிரமராயன்'' என்னும் திருநாமத்தோடு அமைச்சராக இருந்து விளங்கிய தலம் இது. திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் சமண சமயத்தைச் சார்ந்திருந்த கூன்பாண்டிய னுடைய சுரநோயை, ''மந்திர மாவதுநீறு'' என்று தொடங்கும் திருநீற்றுப் பதிகத்தைப் பாடியருளி தீர்த்தும், ''போகமார்த்த பூண்முலையாள்'' என்று தொடங்கும் திருநள்ளாற்றுத் திருப்பதிகத்தை எழுதியிருந்த ஏட்டைக் கனலில் இட்டு வேகாமல் எடுத்தும், ''வாழ்க அந்தணர்'' என்று தொடங்கும் திருப்பாசுரம் வரைந்துள்ள ஏட்டை வையையாற்றில் விட்டு அது நீரை எதிர்த்துக்கொண்டு செல்லுமாறு புரிந்தருளியும், இவ்வாறு சமணர்களை வென்று அந்தப் பாண்டிய மன்னனுடைய கூனையும் நீக்கியருளியும், சமண சமயமாகிய இருட்டைப் போக்கியருளி அந்த மன்னனையும் சைவ சமயத்தினராகப் புரிந்தருளிப் பாண்டி நாட்டில் சைவ சமயத்தினுடைய புகழைப் பரப்பியருளிய திருத்தலம் இது. அந்தக் கூன் பாண்டியன் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் திருநீற்றைத் தன்னுடைய திருமேனியிற் பூச, அதனால் கூன் நிமிர்ந்து நெடுமாற நாயனார் என்ற திருநாமத்தோடு அரசாட்சி புரிந்த தலம் இது. அவருடைய பத்தினியாரும்

சைவ சிரோமணியுமாகிய மங்கையர்க்கரசி யாரும், அந்தப் பாண்டிய மன்னனுடைய முதலமைச்சராகிய குலச்சிறை நாயனாரும் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார், ''மங்கையர்க்கரசி'' எனத் தொடங்கும் திருப்பதிகத்தில் சிறப்பித்துப் பாடும் பெரும் பேற்றைப் பெற்று வாழ்ந்திருந்த மாநகரம் இது. பஞ்ச சபைகளில் ஒன்றாகிய ரஜதசபை என்னும் வெள்ளியம்பலத்தைப் பெற்ற தலம் இது. இந்த வெள்ளியம்பலத்தில் நடராஜப் பெருமானார் கால் மாறி ஆடியருளினார். எல்லாம் வல்ல சித்தருடைய திருவுருவம் இந்தத் திருக்கோயிலில் உள்ளது. மீனாட்சி அம்பிகையுடைய சந்நிதிக்கு எதிரில் உள்ள கிளி மண்டபத்தில் தல விநாயகராகிய சித்தி விநாயகரும், முருகப் பெருமானும் எழுந்தருளியிருக்கிறார்கள். பொற்றாமரைக் குளம் திருக்கோயிலுக்குள் உள்ளது.

இந்தத் தலத்தைப் பற்றித் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

''மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி
பணிசெய்து நாடொறும் பரவப்
பொங்கழல் உருவன் பூதநா யகன்நால்
வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற் கண்ணி தன்னொடும் அமர்ந்த
ஆலவா யாவதும் இதுவே.''

இந்தத் தலத்தைப் பற்றி குறிஞ்சிப் பண்ணில் அமைந்த திருவிருக்குக்குறளையும், காந்தாரப் பண் அமைந்த திருநீற்றுப்பதிகத்தையும், கொல்லிப் பண் அமைந்த ஒரு திருப்பதிகத்தையும், அதே பண் அமைந்த மற்றொரு திருப்பதிகத்தையும், கௌசிகப் பண் அமைந்த

ஒரு திருப்பதிகத்தையும், அதே பண் அமைந்த திருவிராகப் பதிகத்தையும், பழம்பஞ்சுரப் பண் அமைந்த நாலடிமேல் வைப்பையும், அதே பண் அமைந்த திருவியமகத்தையும், புறநீர்மைப் பண் அமைந்த ஒரு திருப்பதிகத்தையும் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளி யிருக்கிறார். அவற்றுள் குறிஞ்சிப் பண் அமைந்த ஒரு திருவிருக்குக் குறள் வருமாறு:

''நீல மாமிடற் - றாலவாயிலான்
பால தாயினார் - ஞாலம் ஆள்வரே.''

காந்தாரப் பண் அமைந்த திருநீற்றுப் பதிகத்தில் வரும் ஒரு பாசுரம் வருமாறு:

''மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாய்மை பங்கன் திருஆல வாயன் திருநீறே.''

கொல்லிப் பண் அமைந்த ஒரு பாசுரம் வருமாறு:

''மானி னேர்விழி மாத ராய்வழு
திக்கு மாபெருந் தேவிகேள்
பானல் வாயொரு பாலன் ஈங்கிவன்
என்று நீபரி வெய்திடேல்
ஆனை மாமலை ஆதி யாய
இடங்க ளிற்பல அல்லல்சேர்
ஈனர் கட்கெளி யேன லேன்திரு
ஆல வாயரன் நிற்கவே.''

கௌசிகப் பண் அமைந்த ஒரு பாசுரம் வருமாறு:

''காட்டு மாவ துரித்துரி போர்த்துடல்
நாட்டம் மூன்றுடை யாயுரை செய்வனான்

வேட்டு வேள்விசெய் யாஅமண் கையரை
ஓட்டி வாதுசெய் யத்திரு வுள்ளமே.''

அதே பண் அமைந்த மற்றொரு பாசுரம் வருமாறு:

''செய்ய னேதிரு ஆலவாய் மேவிய
ஐய னேயஞ்சல் என்றருள் செய்யெனைப்
பொய்ய ராம்அம ணர்கொளு வும்சுடர்
பைய வேசென்று பாண்டியற் காகவே.''

அதே பண் அமைந்த திருவிராகப் பாசுரம் ஒன்று வருமாறு:

''வீடலால வாயிலாய் விழுமியார்கள் நின்கழல்
பாடலால வாயிலாய் பரவநின்ற பண்பனே
காடலால வாயிலாய் கபாலிநீள்க டிம்மதில்
கூடலால வாயிலாய் குலாயதென்ன கொள்கையே.''

பழம்பஞ்சுரப் பண் அமைந்த நாலடிமேல் வைப்புப் பாசுரம் ஒன்று வருமாறு:

''வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
ஆதம் இல்லி அமணொடு தேரரை
வாதில் வென்றழிக் கத்திரு வுள்ளமே
பாதி மாதுடன் ஆய பரமனே
ஞாலம் நின்புக ழேமிக வேண்டும்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே.''

பழம் பஞ்சுரப் பண் அமைந்த திருவியமகப் பாசுரம் ஒன்று வருமாறு:

''ஆல நீழ லுகந்த திருக்கையே
ஆன பாட லுகந்த திருக்கையே
பாலின் நேர்மொழி யாளொரு பங்கனே
பாத மோதலர் சேர்புரு பங்கனே

கோல நீறணி மேதகு பூதனே
கோதி லார்மனம் மேவிய பூதனே
ஆல நஞ்சமு துண்டக ளத்தனே
ஆல வாயுற அண்டர்க ளத்தனே.''

இந்தத் தலத்தைப்பற்றித் திருநேரிசை, திருத்தாண்டகம் என்பவை அடங்கிய திருப்பதிகங்களைத் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளியிருக்கிறார். அவற்றுள் ஒரு திருநேரிசை வருமாறு:

''வேதியா வேத கீதா
விண்ணவர் அண்ணா என்றென்
றோதியே மலர்கள் தூவ
ஒருங்கிநின் கழல்கள் காணப்
பாதியோர் பெண்ணை வைத்தாய்
படர்சடை மதியம் சூடும்
ஆதியே ஆல வாயில்
அப்பனே அருள்செ யாயே.''

அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''முளைத்தானை எல்லார்க்கும் முன்னே தோன்றி
முதிரும் சடைமுடிமேல் முகிழ்வெண் திங்கள்
வளைத்தானை வல்லசுரர் புரங்கள் மூன்றும்
வரைசிலையா வாசுகிமா நாணாக் கோத்துத்
துளைத்தானைச் சுடுசரத்தால் துவள நீறாத்
தூமுத்த வெண்முறுவல் உமையோ டாடித்
திளைத்தானைத் தென்கூடல் திருவால வாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.''

இந்தத் தலத்தைப் பற்றித் திருவாசகத்தில் வரும் இடங்கள் வருமாறு:

"மதுரைப் பெருநன் மாநகர் இருந்து
குதிரைச் சேவகன் ஆகிய கொள்கையும்
ஆங்கது தன்னில் அடியவட் காகப்
பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும்."

*(கீர்த்தித் திரு அகவல், 44-7)*

"ஆடக மதுரை அரசே போற்றி."

*(போற்றித் திரு அகவல், 90)*

"கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை
மண்சுமந்து கூலிகொண் டக்கோலால் மொத்துண்டு
புண்சுமந்து பொன்மேனி பாடுதும்காண் அம்மானாய்."

*(திருஅம்மானை, 8)*

"நரியைக் குதிரைப் பரியாக்கி
ஞாலம் எல்லாம் நிகழ்வித்துப்
பெரிய தென்னன் மதுரையெல்லாம்
பிச்ச தோற்றும் பெருந்துறையாய்."

*(ஆனந்த மாலை, 7)*

"மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவு பால்நிற வரிச்சிறை
அன்னம் பயில்பொழில் ஆல வாயில்
மன்னிய சிவன்யான் பொழிதரு மாற்றம்."

*(திருவாலவாயுடையார் அருளிச் செய்த திருமுகப் பாசுரம்.)*

"செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போரறு வாயில்

திருவீற் றிருந்த தீதுதீர் நியமித்து
மாடமாலி மறுகிற் கூடல்.''

*(திருமுருகாற்றுப்படை, 67-71)*

பிறகு வரும் 404-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'திருநாவுக்கரசு நாயனார் தாம் அடைந்த பேரானந்த சாகரத்தில் எழுந்த இன்பத்தில் ஆழ்ந்து அமைந்த சிவந்த நிறம் விளங்கும் சடாபாரத்தைப் பெற்றவனாகிய சுந்தரேசப் பெருமானை, ''முளைத்தானை'' என்று தொடங்கி தாம் புரிந்த தவத்தின் பயனாக ஒரு திருத்தாண்டகமாகிய செந்தமிழ் மொழியில் அமைந்த பாசுரத்தை அந்த நாயனார் பாடியருளி அந்த மதுரை மாநகரத்துக்கு வெளியில் எழுந்தருள்பவராகித் தம்முடைய கைகளைத் தம்முடைய தலையின் மேல் வைத்துக் கூப்பி அந்தச் சோமசுந்தரக் கடவுளைக் கும்பிட்டு விட்டுப் பிறகு தரையில் விழுந்து அந்தக் கடவுளை வணங்கி விட்டுப் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு அந்தக் கடவுளைத் துதித்துத் தம்முடைய திருவுள்ளத்தில் உண்டான களிப்பில் தலைசிறந்து நின்றார்.' பாடல் வருமாறு:

''எய்தியபே ரானந்த
இன்பத்தி னிடைஅழுந்தி
மொய்திகழும் சடையானை
'முளைத்தானை' என்றெடுத்துச்
செய்தவத்தோர் தாண்டகச்செந்
தமிழ்பாடிப் புறத்தணைவார்
கைதொழுது பணிந்தேத்தித்
திருவுள்ளம் களிசிறந்தார்.''

எய்திய - திருநாவுக்கரசு நாயனார் தாம் அடைந்த. பேரானந்த - பேரானந்த சாகரத்தில் எழுந்த. இன்பத்தினிடை - இன்பத்தில். அழுந்தி - ஆழ்ந்து. மொய் - அமைந்த சிவந்த நிறம். திகழும் - விளங்கும். சடையானை - சடாபாரத்தைப் பெற்றவனாகிய சுந்தரேசப் பெருமானை. 'முளைத்தானை' என்று - 'முளைத்தானை' என. எடுத்து - தொடங்கி. ச்: சந்தி. செய் - தாம் புரிந்த. தவத்து - தவத்தின் பயனாக; ஆகுபெயர். ஓர் - ஒரு. தாண்டக - திருத் தாண்டகமாகிய. ச்: சந்தி. செந்தமிழ் - செந்தமிழ் மொழி யில் அமைந்த பாசுரத்தை; ஆகுபெயர். பாடி - அந்த நாயனார் பாடியருளி. ப்: சந்தி. புறத்து - அந்த மதுரை மாநகரத்துக்கு வெளியில். அணைவார் - எழுந்தருள் பவராகி; முற்றெச்சம். கை - தம்முடைய கைகளை; ஒருமை பன்மை மயக்கம். தொழுது - தம்முடைய தலையின் மேல் வைத்துக் கூப்பி அந்தச் சோம சுந்தரக் கடவுளை கும்பிட்டுவிட்டு. பணிந்து - பிறகு தரையில் விழுந்து அந்தக் கடவுளை வணங்கிவிட்டு. ஏத்தி - பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டு அந்தக் கடவுளைத் துதித்து. த்: சந்தி. திருவுள்ளம் - தம்முடைய திருவுள்ளத்தில் உண்டான. களி - ஆனந்தத்தில். சிறந்தார் - தலைசிறந்து நின்றார்.

இந்தப் பாடலில் குறிப்பிட்ட 'முளைத்தானை' என்று தொடங்கும் திருத்தாண்டகத்தை முன்பே எழுதியிருக்கிறோம்; ஆண்டுக் கண்டு கொள்க.

பிறகு உள்ள 405-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'சீர்த்தியோடு விளங்கும் பாண்டிய மன்னனுடைய பெருமையைப் பெற்ற பட்டமகிஷியாராகிய மங்கையர்க் கரசியார் விபூதியினுடைய சார்பைப் பெற்றுத் தன்னுடைய முதுகுக் கூனும் மார்புக் கூனும் நிமிரப் பெற்ற

தென்னாட்டை ஆட்சி புரியும் பாண்டியனாருடன் இந்த மண்ணுலகத்தில் வாழும் மக்கள் வாழ்த்தி வணங்கும் அந்தப் பாண்டிய மன்னருடைய முதலமைச்சராகிய குலச்சிறை நாயனார் வாகீசராகிய திருநாவுக்கரசு நாயனாரைத் தரையில் விழுந்து வணங்கிவிட்டு திருப்தி அடைதல் இல்லாத விருப்பம் மிகுதியாக உண்டாக அந்தக் குலச்சிறை நாயனார் அந்தத் திருநாவுக்கரசு நாயனாருடைய திருவடிகளை வாழ்த்தி வணங்க அந்த நாயனார் அந்த மதுரை மாநகரத்தில் தங்கிக் கொண்டிருந்தார்.' பாடல் வருமாறு:

"சீர்திகழும் பாண்டிமா
தேவியார் திருநீற்றின்
சார்வடையக் கூன்நிமிர்ந்த
தென்னவனார் தம்முடனே
பார்பரவும் குலச்சிறையார்
வாகீசர் தமைப்பணிவுற்
றாரகிலாக் காதல்மிக
அடிபோற்ற அங்கிருந்தார்."

சீர் - சீர்த்தியோடு. திகழும் - விளங்கும். பாண்டிமா தேவியார் - பாண்டிய மன்னனுடைய பெருமையைப் பெற்ற பட்ட மகிஷியாராகிய மங்கையர்க்கரசியார். திருநீற்றின் - விபூதியினுடைய. சார்வு - சார்பை. அடைய - பெற்று விளங்க. க்: சந்தி. கூன் - தன்னுடைய முதுகுக் கூனும் மார்புக் கூனும்; ஒருமை பன்மை மயக்கம். நிமிர்ந்த - நிமிரப் பெற்ற. தென்னவனார் தம்முடன் - தென்னாட்டை ஆட்சி புரியும் பாண்டிய மன்னடன். ஏ: அசைநிலை. பார் - இந்த மண்ணுலகத்தில் வாழும் மக்கள்; இட ஆகுபெயர். பரவும் - வாழ்த்தி வணங்கும். குலச்சிறையார் - அந்தப் பாண்டிய மன்னருடைய

முதலமைச்சராகிய குலச்சிறை நாயனார். வாகீசர் தமை - வாகீசராகிய திருநாவுக்கரசு நாயனாரை. தமை: இடைக்குறை. தம்: அசைநிலை. ப்: சந்தி. பணிவுற்று - தரையில் விழுந்து வணங்கிவிட்டு. ஆரகிலா - திருப்தி அடைதல் இல்லாத; இடைக்குறை. க்: சந்தி. காதல் - விருப்பம். மிக - மிகுதியாக உண்டாக. அடி - அந்தக் குலச்சிறை நாயனார் அந்தத் திருநாவுக்கரசு நாயனாருடைய திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். போற்ற - வாழ்த்தி வணங்க. அங்கு - அந்த மதுரை மாநகரத்தில். இருந்தார் - தங்கிக் கொண்டிருந்தார்.

பிறகு வரும் 406-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'மதுரை மாநகரத்தில் விளங்கும் திருவாலவாய் என்னும் திருக்கோயிலில் வீற்றிருந்த சிவந்திருக்கும் சுடர் விளக்கைப் போலத் திகழ்பவரை இனிய சொற் சுவை, பொருட் சுவை என்னும் செழுமையைப் பெற்றுப் பொலியும் இறையனார் அகப்பொருள் என்னும் இலக்கண நூலை வழங்கியருளிய சுந்தரேசப் பெருமானை அந்தத் திருநாவுக்கரசு நாயனார் ஒரு திருநேரிசையையும், ஒரு திருத்தாண்டகம் முதலாக உள்ள பெருமையையும் உண்மையையும் எடுத்துக் கூறும் செந்தமிழ் மொழியில் அமைந்த ஒரு திருப்பதிகத்தை அந்த நாயனார் பாடியருளிப் பிறகு தாம் விரும்பும் தமக்கு உரிய உழவாரத் திருப்பணியையும், வேறு பல திருப்பணிகளையும் புரிந்து கொண்டு பகைவர்களாகிய தாரகாட்சன், வித்யுன் மாலி, வாணன் என்னும் மூன்று அசுரர்களுக்கு உரிய பறக்கும் கோட்டைகளாகிய மூன்று புரங்களையும் எரித்தருளியவராகிய பூவணநாதேசுவரர் எழுந்தருளி யிருக்கும் திருப்பூவணத்திற்கு எழுந்தருளிச் சேர்ந்தார்.' பாடல் வருமாறு:

"திருவால வாய்அமர்ந்த
செஞ்சுடரைச் செழும்பொருள்நூல்
தருவானை நேரிசையும்
தாண்டகமும் முதலான
பெருவாய்மைத் தமிழ்பாடிப்
பேணுதிருப் பணிசெய்து
மருவார்தம் புரம்எரித்தார்
பூவணத்தை வந்தடைந்தார்."

திருவாலவாய் - மதுரை மாநகரத்தில் விளங்கும் திருவால வாய் என்னும் திருக்கோயிலில். அமர்ந்த - வீற்றிருந்த. செம் - சிவப்பாக இருக்கும். சுடரை - சுடர் விளக்கைப் போலத் தகிழ்பவரை; உவம ஆகு பெயர். ச்: சந்தி. செழும் - இனிய சொற்சுவை, பொருட்சுவை என்னும் செழுமையைப் பெற்றுப் பொலியும். பொருள் - இறையனார் அகப்பொருள் என்னும். நூல் - அகப்பொருள் இலக்கணத்தை. தருவானை - வழங்கியருளிய சுந்தரேசப் பெருமானை. நேரிசையும் - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் ஒரு திருநேரிசையையும். தாண்டகமும் - ஒரு திருத்தாண்டகத்தையும். முதலான - முதலாக உள்ள. பெரு - பெருமையையும். வாய்மை - உண்மையையும் எடுத்துக் கூறும். த்: சந்தி. தமிழ் - செந்தமிழ் மொழியில் அமைந்த ஒரு திருப்பதிகத்தை; ஆகுபெயர். பாடி - அந்த நாயனார் பாடியருளி. ப்: சந்தி. பேணு - பிறகு தாம் விரும்பும். திருப்பணி - தமக்கு உரிய உழவாரத் திருப்பணியையும் வேறு பல திருப்பணிகளையும்; ஒருமை பன்மை மயக்கம். செய்து - புரிந்து கொண்டு. மருவார்தம் - பகைவர்களாகிய தாரகாட்சன், வித்யுன்மாலி, வாணன் என்னும் மூன்று அசுரர்களுக்கு உரிய பறக்கும் கோட்டைகளாகிய மூன்று புரங்களையும்; ஒருமை பன்மை மயக்கம். தம்:

அசைநிலை. எரித்தார் - எரித்தருளியவராகிய பூவணநாதேசுவரர். பூவணத்தை - எழுந்தருளியிருக்கும் திருப்பூவணத்திற்கு; உருபு மயக்கம். வந்து - எழுந்தருளி. அடைந்தார் - சேர்ந்தார்.

அவ்வாறு திருநாவுக்கரசு நயானார் பாடியருளிய ஒரு திருநேரிசை வருமாறு:

"வழுவிலா துன்னை வாழ்த்தி
வழிபடும் தொண்ட னேன்உன்
செழுமலர்ப் பாதம் காணத்
தெண்டிரை நஞ்சம் உண்ட
குழகனே கோல வில்லீ
கூத்தனே மாத்தா யுள்ள
அழகனே ஆல வாயில்
அப்பனே அருள்செ யாயே."

அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"ஊரானை உலகேழாய் நின்றான் தன்னை
ஒற்றைவெண் பிறையானை உமையோ டென்றும்
பேரானைப் பிறக்கென்றும் அரியான் தன்னைப்
பிணக்காட்டில் நடமாடல் பேயோ டென்றும்
ஆரானை அமரர்களுக் கமுதீந் தானை
அருமறையால் நான்முகனும் மாலும் போற்றும்
சீரானைத் தென்கூடல் திருவால வாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே."

திருப்பூவணம்: இது பாண்டி நாட்டில் வைகையாற்றின் கரையில் உள்ளது. இங்கே கோயில் கொண்டிருப்பவர் பூவண நாதேசுவரர். அம்பிகை மின்னனையாள் அம்மை. தல விருட்சம் பலாமரம். இது

மதுரை மாநகரத்திற்குக் கிழக்குத் திசையில் 12 மைல் தூரத்தில் உள்ளது. பென்னனையாள் என்னும் விலை மாதுக்காகப் பூவண நாதேசுவரர் ஒரு சித்தராய் எழுந்தருளி வந்து வாதம் புரிந்து வழங்கியருளிய பொன்னைக் கொண்டு அந்த விலைமாது பூவண நாதேசுவரருடைய திருவுருவத்தைச் செய்யச் செய்து மகிழ்ச்சியை அடைந்த தலம் இது. தமிழ்நாட்டில் ஆட்சி புரிந்த மூன்று அரசர்களாகிய பாண்டியர், சேரர், சோழர் ஆகியோர் வழிபட்டுப் பேறுபெற்ற தலம் இது. பிரமதேவன் வழிபட்ட தலம் இது. இந்தத் தலத்தைப் பற்றித் தக்கேசிப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"அலையார் புனலை நீத்தவரும்
தேரரும் அன்புசெய்யா
நிலையா வண்ணம் மாயம்வைத்த
நின்மலன் தன்னிடமாம்
மலைபோல் துன்னி வெற்றிஓங்கும்
மாளிகை சூழ்ந்தயலே
சிலையார் புரிசை பரிசுபண்ணும்
தென்திருப் பூவணமே."

அந்த நாயனார் காந்தாரப் பஞ்சமப் பண்ணில் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"மாதமர் மேனிய னாகி வண்டொடு
போதமர் பொழிலணி பூவ ணத்துறை
வேதனை விரவலர் அரணம் மூன்றெய்த
நாதனை அடிதொழ நன்மை ஆகுமே."

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"கல்லாலின் நீழற் கலந்து தோன்றும்
கவின்மறைபோர் நால்வர்க்கு நெறிகள் அன்று
சொல்லாகச் சொல்லியவா தோன்றும் தோன்றும்
சூழரவும் மான்மறியும் தோன்றும் தோன்றும்
அல்லாத காலனைமுன் அடர்த்தல் தோன்றும்
மூவகையால் நினைவார்பால் அமர்ந்து தோன்றும்
பொல்லாத புலாலெலும்பு பூணாய்த் தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே."

இந்தத் தலத்தைப் பற்றி இந்தளப் பண்ணில் சுந்தரமூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"மின்னனை யாள்திரு மேனிவிளங் கவோர்
தன்னமர் பாகம தாகிய சங்கரன்
முன்நினை யார்புரம் மூன்றெரி ஊட்டிய
பொன்னனை யான்உறை பூவணம் ஈதோ."

இந்தத் தலத்தைப் பற்றிப் பஞ்சமப் பண்ணில் கருவூர்த் தேவர் பாடியருளிய ஒரு திருவிசைப்பா வருமாறு:

"திருவருள் புரிந்தான் ஆண்டுகொண் டிங்ஙன்
சிறியனுக் கினியது காட்டிப்
பெரிதருள் புரிந்தா னந்தமே தரும்நின்
பெருமையிற் பெரியதொன் றுளதோ?
மருதர சிருங்கோள் ககில்மரம் சாடி
வரைவளம் கவர்ந்திழி வையைப்
பொருதிரை மருங்கோங் காவண வீதிப்
பூவணம் கோயில்கொண் டாயே."

*பிறகு வரும் 407-ஆம் கவியின் கருத்து வருமாறு:*

'துவசங்களைக் கட்டித் தொங்க விட்டிருக்கும் மாடங்கள் நிலைபெற்று விளங்கும் திருப்பூவணத்தில் இருக்கும் பூவணநாதேசுவரருடைய திருக்கோயிலுக்குள்

நீண்ட திருவுருவத்தைப் பெற்ற திருமால் பன்றி உருவெடுத்துத் தேடிப் பார்த்தும் தம்முடைய திருவடிகளைத் தெரிந்து கொள்ள அரியவராகிய அந்தப் பூவண நாதேசுவரர் தமக்கு நேரில் தம்முடைய காட்சியை வழங்க அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அந்த ஈசுவரரைத் தரிசித்து வணங்கிவிட்டு, ''வடிவேறு திரிசூலம்'' என்று தொடங்கும் ஒரு திருத்தாண்டகத்தால் அந்த ஈசுவரரைப் புகழ்ந்துவிட்டு அப்பால் எழுந்தருளி விபூதியைத் தம்முடைய திருமேனி முழுவதும் பூசிக்கொண்டவரும் பரிசுத்தரும் ஆகிய சிவபெருமானார் எழுந்தருளியிருக்கும் திருத்தலங்கள் மற்றவற்றிற்கும் அந்த நாயனார் எழுந்தருளி அந்தத் தலங்களில் கோயில் கொண்டிருக்கும் சிவபெருமான்களை அந்த நாயனார் வணங்குவாரானார்.' பாடல் வருமாறு:

''கொடிமாடம் நிலவுதிருப்
பூவணத்துக் கோயிலினுள்
நெடியானுக் கறிவரியார்
நேர்தோன்றக் கண்டிறைஞ்சி
'வடிவேறு திரிசூல'த்
தாண்டகத்தால் வழுத்திப்போய்ப்
பொடிநீடு திருமேனிப்
புனிதர்பதி பிறபணிவார்.''

கொடி - துவசங்களைக் கட்டித் தொங்கவிட்டிருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். மாடம் - மாடங்கள்; ஒருமை பன்மை மயக்கம். நிலவு - நிலைபெற்று விளங்கும். திருப்பூவணத்து - திருப்பூவணத்தில் இருக்கும். க்: சந்தி. கோயிலினுள் - பூவண நாதேசுவரருடைய திருக் கோயிலுக்குள். நெடியானுக்கு - உயரமான திருவுரு வத்தைப் பெற்ற திருமால் பன்றியின் உருவெடுத்துத்

தேடிப் பார்த்தும் அவனுக்கு, அறிவரியார் - தம்முடைய திருவடிகளைத் தெரிந்து கொள்ள அரியவராகிய அந்தப் பூவணநாதேசுவரர். நேர் - தமக்கு நேரில். தோன்ற - தம்முடைய காட்சியை வழங்க. க்: சந்தி. கண்டு - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் அந்த ஈசுவரரைத் தரிசித்து. இறைஞ்சி - வணங்கிவிட்டு. 'வடிவேறு திரிசூலம்' - 'வடிவேறு திரிசூலம்' என்று தொடங்கும். த்: சந்தி. தாண்டகத்தால் - ஒரு திருத்தாண்டகத்தால். வழுத்தி - அந்த ஈசுவரரைப் புகழ்ந்துவிட்டு. ப்: சந்தி. போய் - அப்பால் எழுந்தருளி. ப்: சந்தி. பொடி - விபூதியை. நீடு திருமேனி - தம்முடைய உயரமாகிய திருமேனி முழுவதும் பூசிக்கொண்டு வரும்; ஆகுபெயர். ப்: சந்தி. புனிதர் - பரிசுத்தரும் ஆகிய சிவபெருமானார். பதிபிற - எழுந்தருளியிருக்கும் திருத்தலங்கள் மற்றவற்றிற்கும் அந்த நாயனார் எழுந்தருளி. பணிவார் - அந்தத் தலங்களில் கோயில் கொண்டிருக்கும் சிவபெருமான்களை அந்த நாயனார் வணங்குவாரானார்.

அவ்வாறு அந்த நாயனார் பாடியருளிய திருத்தாண்டகம் வருமாறு:

"வடிவேறு திரிசூலம் தோன்றும் தோன்றும்
வளர்சடைமேல் இளமதியம் தோன்றும் தோன்றும்
கடியேறு கமழ்கொன்றைக் கண்ணி தோன்றும்
காதில்வெண் குழைதோடு கலந்து தோன்றும்
இடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்றும்
எழில்திகழும் திருமுடியும் இலங்கித் தோன்றும்
பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே."

பிறகு வரும் 408-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'பாரத நாட்டிற்குத் தெற்கில் உள்ள இலங்கைக்கு அரசனாகிய இராவணனுடைய பத்துத் தலைகளையும் வெட்டி அருளிய அயோத்தி மாநகரத்தை ஆட்சி புரிந்தருளும் அரசனாகிய இராமபிரானுக்கு வரும் பெரியதாக இருக்கும் பிரமஹத்தியாகிய பாதகத்தைப் போக்கிய பின்னிய சடாபாரத்தைத் தம்முடைய தலையின்மேற் பெற்றவராகிய பூவணநாதேசுவரரை வணங்குவதற்காக எண்ணி அந்தத் திருப்பூவணத்துக்கு அந்தத் திருநாவுக்கரசு நாயனார் எழுந்தருளி பெரிய மகிழ்ச்சியைத் தம்முடைய திருவுள்ளத்தில் அடைந்து பக்தியினால் தம்முடைய திருவுள்ளம் அனலிடைப்பட்ட மெழுகைப் போலக் கரைந்து உருக்கத்தை அடையுமாறு அந்தப் பூவணநாதேசுவரரைத் தரையில் விழுந்து வணங்கிவிட்டு அந்தச் சொற்களுக்கு அரசராகிய திருநாவுக்கரசு நாயனார் பிறகு தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டிருந்தார்.' பாடல் வருமாறு:

"தென்னிலங்கை இராவணன்தன்
சிரமீரைந் தும்துணித்த
மன்னவனாம் இராமனுக்கு
வரும்பெரும்பா தகம்தீர்த்த
பிஞ்ஞகரைத் தொழுவதற்கு
நினைந்துபோய்ப் பெருமகிழ்ச்சி
துன்னிமனம் கரைந்துருகத்
தொழுதெழுந்தார் சொல்லரசர்."

இந்தப் பாடலில் விற்பூட்டுப் பொருள்கோள் அமைந்துள்ளது. சொல் - சொற்களுக்கு; ஒருமை பன்மை மயக்கம். அரசர் - அரசராகிய திருநாவுக்கரசு நாயனார். தென் - பாரத நாட்டிற்குத் தெற்கில் உள்ள. இலங்கை - இலங்கைக்கு அரசனாகிய; ஆகுபெயர். இராவணன்தன் -

இராவணனுடைய. தன்: அசைநிலை. சிரம் ஈரைந்தும் - பத்துத் தலைகளையும். சிரம்: ஒருமை பன்மை மயக்கம். துணித்த - வெட்டியருளி. மன்னவனாம் - அயோத்தி மாநகரத்தை ஆட்சி புரிந்தருளும் அரசனாகும். இராமனுக்கு - இராமபிரானுக்கு. வரும் - வந்த; கால மயக்கம். பெரும் - பெரியதாக இருக்கும். பாதகம் - பிரமஹத்தியாகிய பாதகத்தை. தீர்த்த - போக்கிய. பிஞ்ஞகரை - பின்னிய சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற் பெற்றவராகிய பூவணநாதேசுவரரை. த்: சந்தி. தொழுவதற்கு - வணங்குவதற்காக. நினைந்து - எண்ணி. போய் - அந்தத் திருப்பூவணத்திற்கு அந்தத் திருநாவுக்கரசு நாயனார் எழுந்தருளி. ப்: சந்தி. பெரு - பெரிய. மகிழ்ச்சி - மகிழ்ச்சியை. துன்னி - தம்முடைய திருவுள்ளத்தில் அடைந்து. மனம் - பக்தியினால் தம்முடைய திருவுள்ளம். கரைந்து - அனலிடைப் பட்ட மெழுகைப் போலக் கரைந்து. உருக - உருக்கத்தை அடையுமாறு. த்: சந்தி. தொழுது - அந்தப் பூவணநாதேசு வரரைத் தரையில் விழுந்து வணங்கிவிட்டுப் பிறகு. எழுந்தார் - தரையிலிருந்து எழுந்து நின்று கொண்டிருந்தார்.

திருஇராமேச்சுரத்தைப் பற்றிக் காந்தாரப் பஞ்சமப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"தேவியை வவ்விய தென்னிலங்
கைத்தச மாமுகன்
பூவிய லும்முடி பொன்றுவித்
தபழி போயற
ஏவிய லும்சிலை அண்ணல்செய்
தஇரா மேச்சுரம்

மேவிய சிந்தையி னார்கள்தம்
மேல்வினை வீடுமே."

இந்தத் தலத்தைப் பற்றித் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு திருநேரிசை வருமாறு:

"வாக்கினால் இன்பு ரைத்து
வாழ்கிலார் தம்மை எல்லாம்
போக்கினாற் புடைத்த வர்கள்
உயிர்களை உண்டு மால்தான்
தேக்குநீர் செய்த கோயில்
திருஇரா மேச்சு ரத்தை
நோக்கினால் வணங்கு வார்க்கு
நோய்வினை நுணுகும் அன்றே."

பிறகு உள்ள 409-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'தேவர்கள் வந்து வணங்கும் ஒப்பற்ற முதல்வராகிய இராமநாதேசுவரர் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் அழகிய இராமேச்சுரத்தில் விரும்பி எழுந்தருளிய சங்கரனாகிய இராமநாதேசுவரனை அவருடைய சந்நிதியில் அந்தத் திருநாவுக்கரசு நாயனார் நின்று கொண்டு விருப்பம் உண்டாகிய வார்த்தைகளால் பரவிய பல திருநேரிசைகள் முதலாக உள்ள செந்தமிழ் மொழியில் அமைந்தவற்றைப் பாடியருளித் திருநாவுக்கரசு நாயனார் தமக்கு உரிய உழவாரத் திருத்தொண்டினையும், வேறு பல திருத்தொண்டுகளையும் நன்மைகள் பெருகுமாறு புரிந்து கொண்டு அந்த இராமேச்சுரத்தில் தங்கிக் கொண்டிருந் தார்.' பாடல் வருமாறு:

"தேவர்தொழும் தனிமுதலைத்
திருவிரா மேச்சுரத்து
மேவியசங் கரனைஎதிர்
நின்றுவிருப் புறுமொழியால்

பாவுதிரு நேரிசைகள்
முதலான தமிழ்பாடி
நாவரசர் திருத்தொண்டு
நலம்பெருகச் செய்தமர்ந்தார்.''

நாவரசர் - நாவுக்கு அரசராகிய திருநாவுக்கரசு நாயனார். தேவர் - தேவர்கள்; ஒருமை பன்மை மயக்கம். தொழும் - வந்து வணங்கும். தனி - ஒப்பற்ற. முதலை - முதல்வராகிய இராமநாதேசுவரரை. த்: சந்தி. திரு - அழகிய; 'செல்வர்கள் வாழும்' எனலும் ஆம்; திணை மயக்கம். இராமேச்சுரத்து - இராமேச்சுரத்தில். மேவிய - விரும்பிய எழுந்தருளிய. சங்கரனை - சுகத்தைச் செய்பவனாகிய இராமநாதேசுவரனை. எதிர் - அவனுடைய சந்நிதியில். நின்று - அந்த நாயனார் நின்று கொண்டு. விருப்புறு - விருப்பம் உண்டாகிய. மொழியால் - செய்யுட் சொற்களால்; ஒருமை பன்மை மயக்கம். பாவு - பரவிய. திருநேரிசைகள் - பல திருநேரிசைகள். முதலான - முதலாக உள்ள. தமிழ் - செந்தமிழ் மொழியில் அமைந்தவற்றை; ஒருமை பன்மை மயக்கம். பாடி - பாடியருளி. திருத்தொண்டு - தமக்கு உரிய உழவாரத் திருத்தொண்டினையும் வேறு பல திருத்தொண்டு களையும்; ஒருமை பன்மை மயக்கம். நலம் - நன்மைகள்; ஒருமை பன்மை மயக்கம். பெருக - பெருகுமாறு. ச்: சந்தி. செய்து - புரிந்து கொண்டு. அமர்ந்தார் - அந்த இராமேச்சுரத் தில் தங்கிக் கொண்டிருந்தார்.

அவ்வாறு அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருநேரிசை வருமாறு:

''பாசமும் கழிக்க இல்லா
அரக்கரைப் படுத்துத் தக்க
வாசமிக் கலர்கள் கொண்டு
மதியினால் மால்செய் கோயில்

நேசமிக் கன்பி னாலே
நினைமின் நீர்நின்று நாளும்
தேசமிக் கான்இ ருந்த
திருஇ ராமேச் சுரமே.''

மற்றொரு திருநேரிசை வருமாறு:

''முற்றின நாள்கள் என்று
முடிப்பதே கார ணமாய்
உற்றவன் போர்க ளாலே
உணர்விலா அரக்கர் தம்மைச்
செற்றமால் செய்த கோவில்
திருஇரா மேச்சு ரத்தைப்
பற்றிநீ பரவு நெஞ்சே
படர்சடை ஈசன் பாலே.''

பிறகு வரும் 410-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'அந்தத் திருவிராமேச்சுரத்தில் அந்தத் திருநாவுக்கரசு நாயனார் தங்கிக் கொண்டிருந்து தம்முடைய நெற்றியில் ஒற்றைக் கண்ணைப் பெற்றவராகிய இராமநாதீசு வரருடைய திருவடிகளை அந்த நாயனார் தம்முடைய தலையின் மேல் வைத்துக் கும்பிட்டுவிட்டு அந்தத் திருஇராமேச்சுரத்திலிருந்து அதை விட்டுவிட்டு அப்பால் எழுந்தருளிப் புகழ் பொங்கி எழும் அழகிய செந்தமிழ் நாட்டிற்கு வெளியிடத்தில் உள்ள வயல்கள் சுற்றியிருக்கும் திருநெல்வேலியில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் சிவந்த கண்களைப் பெற்ற இடப வாகனத்தை ஓட்டுபவராகிய நெல்லையப்பர் நிலைபெற்று எழுந்தருளி யிருக்கும் திருக்கானப்பேர் ஆகிய காளையார் கோயில் முதலாக உள்ள எல்லா இடங்களிலும் உள்ள சிவத்தலங்கள் எல்லாவற்றிலும் நுழைந்து அந்தச் சிவத்தலங்களில்

கோயில் கொண்டிருக்கும் சிவபெருமான்களை அந்த நாயனார் வணங்குபவரானார்.' பாடல் வருமாறு:

"அங்குறைந்து கண்ணுதலார்
அடிசூடி அகன்றுபோய்ப்
பொங்குதமிழ்த் திருநாட்டுப்
புறம்பணைசூழ் நெல்வேலி
செங்கண்விடை யார்மன்னும்
திருக்கானப் பேர்முதலா
எங்கும்நிகழ் தானங்கள்
எல்லாம்புக் கிறைஞ்சுவார்."

அங்கு - அந்தத் திருவிராமேச்சுரத்தில். உறைந்து - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் தங்கிக் கொண்டிருந்தது. கண்ணுதலார் - தம்முடைய நெற்றியில் ஒற்றைக் கண்ணைப் பெற்றவராகிய இராமநாதீசுவரருடைய. அடி - திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். சூடி - அந்த நாயனார் தம்முடைய தலையின்மேல் வைத்துக் கும்பிட்டுவிட்டு. அகன்று - அந்தத் திருவிராமேச்சுரத்தி லிருந்து அதை விட்டு விட்டு. போய் - அப்பால் எழுந்தருளி. ப்: சந்தி. பொங்கு - புகழ் பொங்கி எழும். தமிழ்த்திருநாட்டு - அழகிய செந்தமிழ் நாட்டிற்கு. ப்: சந்தி. புறம் - வெளியிடத்தில் உள்ள. பணை - வயல்கள்; ஒருமை பன்மை மயக்கம். சூழ் - சுற்றியிருக்கும். நெல்வேலி - திருநெல்வேலியில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும்; ஆகுபெயர். செம் - சிவப்பாக இருக்கும். கண் - கண்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். விடையார் - இடப வாகனத்தை ஓட்டுபவராகிய நெல்லை யப்பர். மன்னும் - நிலைபெற்று எழுந்தருளியிருக்கும். திருக்கானப்பேர் - திருக்கானப்பேர் ஆகிய காளையார் கோயில். முதலா - முதலாக உள்ள. எங்கும் - எல்லா

இடங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். நிகழ் - இருந்து வரும். தானங்கள் - சிவத்தலங்கள். எல்லாம் - எல்லாவற்றிலும். புக்கு - நுழைந்து. இறைஞ்சுவார் - அந்தச் சிவத்தலங்களில் கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் சிவபெருமான்களை அந்த நாயனார் வணங்குபவர் ஆனார்.

திருநெல்வேலி: இது பாண்டி நாட்டில் தாமிரபருணி நதிக்கரையில் உள்ள சிவத்தலம். இங்கே கோயில் கொண்டிருப்பவருடைய திருநாமங்கள் நெல்லைப்பர், வேணுவனேசுவரர், சாலிவாடீசுவரர் என்பவை. அம்பிகையின் திருநாமங்கள் காந்திமதி அம்மை, வடிவுடை அம்மை என்பவை. தீர்த்தம் சிந்துபூந்துறை. இது பஞ்ச சபைகளில் ஒன்றாகிய தாம்பிர சபையைப் பெற்ற தலம். நெல்லையப்பர் தம்முடைய நிவேதனத்திற்காக வேத்சர்மா என்னும் அந்தணர் இரந்து கொண்டு வந்து உலர்த்தி வைத்திருந்த நெற்களை வெள்ளம் அடித்துக் கொண்டு போகாவண்ணம் வேலியைக் கட்டிப் பாதுகாத்தருளியமையினால் இந்தத் தலத்திற்குத் திருநெல்வேலி என்னும் பெயர் அமைந்தது. அகத்திய முனிவர், பிரம தேவன், திருமால் முதலியவர்கள் வழிபட்டுப் பேறு பெற்ற தலம் இது. இந்தத் தலத்தைப் பற்றிச் சாதாரிப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"மருந்தவை மந்திரம் மறுமைநன்
னெறியவை மற்றும் எல்லாம்
அருந்துயர் கெடுமவன் நாமமே
சிந்தை செய்நன் னெஞ்சமே
பொருந்துதண் புறவினிற் கொன்றை
பொன்சொரி தரத்துன்று பைம்பூம்

செருந்திசெம் பொன்மலர் திருநெல்
வேலியுறை செல்வர் தாமே.''

திருக்கானப்பேர்: இதற்கு இக்காலத்தில் வழங்கும் பெயர் காளையார் கோயில் என்பது. இங்கே கோயில் கொண்டிருப்பவருடைய திருநாமங்கள் காளையீசுவரர், சுந்தரேசுவரர், சோமேசுவரர் என்பவை. அம்பிகையின் திருநாமங்கள் சொர்ணவல்லி, மீனாட்சி, சௌந்தரநாயகி என்பவை. தீர்த்தம் யானைமடு. இது மதுரைக்குக் கிழக்குத் திசையில் 39 மைல் தூரத்தில் உள்ளது. இங்கே எழுந்தருளியிருக்கும் சோமேசுவரர் ஒரு காளையின் வடிவத்தை எடுத்துக் கொண்டு திருச்சுழியல் என்னும் சிவத்தலத்திலிருந்து சுந்தரமூர்த்தி நாயனாருக்குக் காட்சியை வழங்கியருளி, ''நம்முடைய இருப்பிடம் கானப்பேர்'' என்று திருவாய் மலர்ந்தருளிச் செய்து அவரையும் அவரோடு இருந்த சேரமான் பெருமாள் நாயனாரையும் அழைத்துக் கொண்டு எழுந்தருளித் தம்முடைய தரிசனத்தை வழங்கியருளிய தலம் இது. சாபத்தினால் ஒரு காட்டானையாய் மாறிய வெள்ளை யானையாகிய ஐராவதம் வழிபட்டுப் பேறு பெற்ற தலம் இது. இந்தத் திருக்கோயிலுக்குள் மூன்று சந்நிதிகள் உள்ளன. சோமேசர் - சௌந்தரநாயகி; காளீசர் - சொர்ணவல்லி; சுந்தரேசர் - மீனாட்சி என்பவை அவை. கோபுரம் பெரியது. மருதபாண்டியன் இதைக் கட்டுவித்தானாம். அது சோமேசர் சந்நிதிக்கு நேரே உள்ளது.

இந்தத் தலத்தைப் பற்றிக் கொல்லிப் பண்ணில் திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

''பிடியெலாம் பின்செலப்
பெருங்கைமா மலர்தழீஇ

விடியலே தடமூழ்கி
வீதியினால் வழிபடும்
கடியவாம் பூம்பொழிற்
கானப்பேர் அண்ணல்நின்
அஃடியால் அடைசரண்
உடையரோ அடியரே."

இந்தத் தலத்தைப் பற்றிப் புறநீர்மைப் பண்ணில் சுந்தரமூர்த்தி நாயனார் பாடியருளிய ஒரு பாசுரம் வருமாறு:

"தொண்டர் அடித்தொழலும்
சோதி இளம்பிறையும்
சூதன மென்முலையாள்
பாகமும் ஆகிவரும்
புண்டரி கப்பரிசாம்
மேனியும் வானவர்கள்
பூசலி டக்கடல்நஞ்
சுண்ட கருத்தமரும்
கொண்டல் எனத்திகழும்
கண்டமும் எண்தோளும்
கோல நறுஞ்சடை மேல்
வண்ணமும் கண்குளிரக்
கண்டு தொழப்பெறுவ
தென்றுகொ லோஅடியேன்
கார்வயல் சூழ்கானப்
பேருறை காளையையே."

பிறகு வரும் *411*-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் பல சிவத்தலங்களுக்கு எழுந்தருளி அந்தச் சிவத்தலங்களில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்களை வணங்கிவிட்டு

பல விதத்தினாலும் இனிய சுவையைப் பெற்ற செய்யுட் சொற்களைத் தொடுத்த மாலையாகிய சொற்சுவை, பொருட்சுவை என்னும் வளப்பத்தைப் பெற்ற செந்தமிழ் மொழியில் அமைந்த திருப்பதிகங்களைப் பாடியருளிய குற்றம் இல்லாதவையும் தமக்கு உரியவையுமான உழவாரத் திருப்பணியையும் வேறு பல திருப்பணி களையும் புரிந்து கொண்டு தம்முடைய திருவுள்ளத்தில் பக்தியினால் கசிவை அடைந்து எல்லா வேளைகளிலும் ஒழுகி வழியும் தம்முடைய கண்களிலிருந்து சொரியும் நீரும் நில்லாமல் சிவபெருமானுடைய திருவடிகளைத் தம்முடைய திருவுள்ளத்தில் தழுவிய உணர்ச்சியும் தங்கியிருக்கும் இயல்போடு வாழ்ந்து வந்தார்.' பாடல் வருமாறு:

''தொழுதுபல வகையாலும்
சொற்றொடைவண் டமிழ்பாடி
வழுவில்திருப் பணிசெய்து
மனம்கசிவுற் றெப்பொழுதும்
ஒழுகியகண் பொழிபுனலும்
ஓவாது சிவன்தாள்கள்
தழுவியசிந் தையில்உணர்வும்
தங்கியநீர் மையிற்சரித்தார்.''

தொழுது - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் பல சிவத்தலங்களுக்கு எழுந்தருளி அந்தச் சிவத்தலங்களில் திருக்கோயில் கொண்டிருக்கும் சிவபெருமான்களை வணங்கிவிட்டு. பலவகையாலும் - பல விதத்தினாலும். சொல் - செய்யுட் சொற்களை; ஒருமை பன்மை மயக்கம். தொடை - தொடுத்த மாலையாகிய. வண் - சொற்சுவை, பொருட்சுவை என்னும் வளப்பத்தைப் பெற்ற. தமிழ் - செந்தமிழ் மொழியில் அமைந்த திருப்பதிகங்களை;

ஆகுபெயர். பாடி - பாடியருளி. வழு - ஒரு குற்றமும்; செய்யுள் வழு. இல் - இல்லாத; கடைக்குறை. திருப்பணி - தமக்கு உரிய உழவாரத் திருப்பணியையும் வேறு பல திருப்பணிகளையும்; ஒருமை பன்மை மயக்கம். செய்து - புரிந்து கொண்டு. மனம் - தம்முடைய திருவுள்ளத்தில். கசிவுற்று - பக்தியினால் கசிவை அடைந்து. எப்பொழுதும் - எல்லா வேளைகளிலும்; ஒருமை பன்மை மயக்கம். ஒழுகிய - ஒழுகி வழியும். கண் - தம்முடைய கண்களிலிருந்து; ஒருமை பன்மை மயக்கம். பொழி - சொரியும். புனலும் - நீரும். ஓவாது - இடைவிடாமல். சிவன் - சிவபெருமானுடைய. தாள்கள் - இரண்டு திருவடிகளையும். தழுவிய சிந்தையில் - தம்முடைய திருவுள்ளத்தில் தழுவிய. உணர்வும் - உணர்ச்சியும். தங்கிய - தங்கியிருக்கும். நீர்மையில் - இயல்போடு; உருபு மயக்கம். சரித்தார் - அந்த நாயனார் வாழ்ந்து வந்தார்.

அடுத்து வரும் 412-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'தேனைச் சொரியும் மலர்கள் மலர்ந்திருக்கும் பல வகையாகிய மரங்கள் வளர்ந்து நிற்கும் செந்தமிழ் நாடாகிய பாண்டி நாட்டில் உள்ள எல்லாச் சிவத்தலங் களுக்கும் அந்தத் திருநாவுக்கரசு நாயனார் எழுந்தருளி அந்தச் சிவத்தலங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்களை வணங்கிவிட்டு பாம்புகளை அணிபவராகிய அந்தச் சிவபெருமான்களை வணங்குவாராகிப் பொன்னைக் கொழிக்கும் காவிரியாறு ஓடும் சோழ நாட்டை அந்த நாயனார் அடைந்து பாயும் நீர் நிரம்பிய குளம், ஏரி, ஆறு, குட்டை, கிணறு, வாவி, பொய்கை முதலிய நீர் நிலைகள் சுற்றியிருக்கும் நீர்வளம், நிலவளம், செல்வ வளம், நன்மக்கள் வளம், ஆலய வளம் முதலிய வளங்களைப் பெற்ற சிவத்தலங்களுக்குப் பிறகும்

அந்த நாயனார் எழுந்தருளி அந்தச் சிவத்தலங்களில் திருக்கோயில் கொண்டிருக்கும் சிவபெருமான்களைப் பணிந்துவிட்டு பொய்யான பாசபந்தத்தைப் போக்கியருளு பவராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார் பூம்புகலூருக்கு எழுந்தருளி அடைந்தார்.' பாடல் வருமாறு:

''தேம்பொழியும் செந்தமிழ்நாட்
டினில்எங்கும் சென்றிறைஞ்சிப்
பாம்பணிவார் தமைப்பணிவார்
பொன்னிநா டதுஅணைந்து
வாம்புனல்சூழ் வளநகர்கள்
பின்னும்போய் வணங்கியே
பூம்புகலூர் வந்தடைந்தார்
பொய்ப்பாசம் போக்குவார்.''

தேம் - தேனை. பொழியும் - சொரியும் மலர்கள் மலர்ந்திருக்கும் பல வகையாகிய மரங்கள் வளர்ந்து நிற்கும். செந்தமிழ் நாட்டினில் - செந்தமிழ் நாடாகிய பாண்டி நாட்டில் உள்ள. எங்கும் - எல்லாச் சிவத்தலங் களுக்கும். சென்று - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் எழுந்தருளி. இறைஞ்சி - அந்தச் சிவத்தலங்களில் திருக் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் களை வணங்கிவிட்டு. ப்: சந்தி. பாம்பு - பாம்புகளை; ஒருமை பன்மை மயக்கம். அணிவார் தமை - புனைபவர் களாகிய அந்தச் சிவபெருமான்களை. அணிவார்: ஒருமை பன்மை மயக்கம். தமை - இடைக்குறை. தம்: அசைநிலை. ப்: சந்தி. பணிவார் - வணங்குவாராகி; முற்றெச்சம். பொன்னி - பொன்னைக் கொழிக்கும் காவிரியாறு ஓடும். நாடது - சோழ நாட்டை. அது: பகுதிப் பொருள் விகுதி. அணைந்து - அந்த நாயனார் அடைந்து. வாம் - பாயும். புனல் - நீர் நிரம்பிய குளம், ஏரி, ஆறு, குட்டை, கிணறு,

வாவி, பொய்கை முதலிய நீர்நிலைகள் உள்ள; ஆகுபெயர். சூழ் - சுற்றியிருக்கும். வள - நீர்வளம், நிலவளம், செல்வ வளம், நன்மக்கள் வளம், ஆலய வளம் முதலிய வளங்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். நகர்கள் - சிவத்தலங்களுக்கு. பின்னும் - பிறகும். போய் - அந்த நாயனார் எழுந்தருளி. வணங்கி - அந்தச் சிவத்தலங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்களைப் பணிந்து விட்டு. ஏ: அசை நிலை. பொய் - பொய்யாக உள்ள. ப்: சந்தி. பாசம் - பாச பந்தத்தை. போக்குவார் - போக்கியருளுபவராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார். பூம்புகலூர் - பூம்புகலூருக்கு. வந்து - எழுந்தருளி. அடைந்தார் - சேர்ந்தார்.

பிறகு வரும் 413-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் பொய்கை தன்னைச் சுற்றி விளங்கும் பூம்புகலூரில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் பரிசுத்தராகிய அக்கினீசுவரருடைய செந்தாமரை மலர்களைப் போன்ற திருவடிகளை அந்த நாயனார் பணிந்துவிட்டு பக்தியினால் உருகும் திருவுள்ளத்தில் உண்டாகிய ஆர்வத்தோடும் ஒவ்வொரு நாளும் அந்த அக்கினீசுவரருடைய ஆலயத்தினுடைய அழகிய முற்றத்தில் தம்முடைய கைகள் சேர்ந்து புரியும் உழவாரத் திருத்தொண்டினையும், வேறு பல திருத்தொண்டுகளையும் புரிந்து கொண்டு பெருகி எழும் விருப்பத்தோடு அந்தத் திருப்புகலூரில் தங்கிக் கொண்டிருக்கும் காலத்தில் கணக்கைக் கடந்த சொற் சுவை, பொருட் சுவை என்னும் வளப்பத்தைப் பெற்ற செந்தமிழ் மொழியில் அமைந்த மாலைகளாகிய பல திருப்பதிகங்களை அந்த நாயனார் பாடியருள்வாரானார்.' பாடல் வருமாறு:

"பொய்கைசூழ் பூம்புகலூர்ப்
புனிதர்மலர்த் தாள்வணங்கி
நையுமனப் பரிவினொடும்
நாடோறும் திருமுன்றில்
கைகலந்த திருத்தொண்டு
செய்துபெரும் காதலுடன்
வைகும்நாள் எண்ணிறந்த
வண்டமிழ்மா லைகள்மொழிவார்."

பொய்கை - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் பொய்கை. சூழ் - தன்னைச் சுற்றி விளங்கும். பூம்புகலூர் - பூம்புகலூரில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும்; ஆகு பெயர். ப்: சந்தி. புனிதர் - பரிசுத்தராகிய அக்கினீசுவரருடைய. மலர் - செந்தாமரை மலர்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தாள் - திருவடிகளை; ஒருமை பன்மை மயக்கம். வணங்கி - அந்த நாயனார் பணிந்துவிட்டு. நையும் - பக்தியினால் உருகும். மன - தம்முடைய திருவுள்ளத்தில் உண்டாகிய. ப்: சந்தி. பரிவினொடும் - ஆர்வத்தோடும். நாள்தோறும் - ஒவ் வொரு நாளும். திருமுன்றில் - அந்த அக்கினீசுவரர் எழுந்தருளியிருக்கும் ஆலயத்தினுடைய அழகிய முற்றத்தில். கை - தம்முடைய கைகள்; ஒருமை பன்மை மயக்கம். கலந்த - சேர்ந்து புரியும். திருத்தொண்டு - தமக்கு உரிய உழவாரத் திருத்தொண்டினையும் வேறு பல திருத்தொண்டுகளையும்; ஒருமை பன்மை மயக்கம். செய்து - புரிந்து கொண்டு. பெரும் - தம்முடைய திருவுள்ளத்தில் பெருகி எழும். காதலுடன் - விருப்பத்தோடு. வைகும் - அந்தத் திருப்புகலூரில் தங்கிக் கொண்டிருக்கும். நாள் - காலத்தில். எண் - கணக்கை. இறந்த - கடந்த. வண் - சொற்சுவை, பொருட்சுவை

என்னும் வளப்பத்தைப் பெற்ற. தமிழ் - செந்தமிழ் மொழியில் அமைந்த. மாலைகள் - மாலைகளாகிய பல திருப்பதிகங்களை. மொழிவார் - அந்த நாயனார் பாடியருள்வாரானார்.

பிறகு வரும் 414-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் திருநாவுக்கரசு நாயனார் நின்ற திருத்தாண்டகம், நீளமாக உள்ள தனித் திருத்தாண்டகம், திருச்சிற்றம்பலத்தில் எழுந்தருளியிருப்பவராகிய நடராஜப் பெருமானார் எழுந்தருளியிருக்கும் பல சிவத்தலங்களில் கோயில் கொண்ட சிவபெருமான்களைப் புகழ்ந்து பாடியருளிய ஒரு திருத்தாண்டகம், கொன்றை மலர் மாலையை அணிந்து கொண்டிருக்கும் சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற் . பெற்றவராகிய சிவபெருமானிடத்தில் பக்தியோடும் பாடியருளிய குறைந்த திருநேரிசை ஆகியவை அமைந்த தனி நேரிசை முதலாக உள்ள பல திருப்பதிகங்களை மாலைகள்ாகக் கட்டி அந்த நாயனார் அமைத்தருளினார்.' பாடல் வருமாறு:

"நின்றதிருத் தாண்டகமும்
நீடுதனித் தாண்டகமும்
மன்றுறைவார் வாழ்பதிகள்
வழுத்துதிருத் தாண்டகமும்
கொன்றைமலர்ச் சடையார்பால்
குறைந்ததிரு நேரிசையும்
துன்றுதனி நேரிசையும்
முதலான தொடுத்தமைத்தார்."

நின்ற திருத்தாண்டகமும் - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் நின்ற திருத்தாண்டகங்கள் அமைந்த பல திருப்பதிகங்களையும்; இட ஆகுபெயர். நீடு -

நெடுங்காலமாக இருக்கத் தகும். தனித்திருத்தாண்டகமும் - தனித்திருத்தாண்டகம் அமைந்த ஒரு திருப்பதிகத்தையும்; இட ஆகு பெயர். மன்று - சிற்சபையில். உறைவார் - எழுந்தருளுபவராகிய நடராஜப் பெருமானார். வாழ் - எழுந்தருளியிருக்கும். பதிகள் - பல சிவத்தலங்களில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் சிவ பெருமான்களை; ஆகுபெயர். வழுத்து - புகழ்ந்து பாடியருளிய. திருத்தாண்டகமும் - ஒரு திருத் தாண்டகத்தையும். கொன்றை மலர் - கொன்றை மலர் மாலையை அணிந்து கொண்டிருக்கும்; ஆகுபெயர். ச்: சந்தி. சடையார் பால் - சடாபாரத்தைத் தம்முடைய தலையின் மேற் பெற்றவராகிய சிவபெருமானிடத்தில். குறைந்த திருநேரிசையும் - பக்தியோடு பாடியருளிய ஒரு குறைந்த திருநேரிசையையம். துன்று - ஆகியவை அமைந்த. தனி நேரிசையும் - தனி நேரிசையையும். முதலான - முதலாக உள்ள பல திருப்பதிகங்களை. தொடுத்து - மாலைகளாகக் கட்டி. அமைத்தார் - அந்த நாயனார் அமைத்தருளினார்.

அவ்வாறு திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஒரு நின்ற திருத்தாண்டகம் வருமாறு:

"ஆவாகி ஆவினில் ஐந்தும் ஆகி
அறிவாகி அழலாகி அவியும் ஆகி
நாவாகி நாவுக்கோர் உரையும் ஆகி
நாதனாய் வேதத்தின் உள்ளோன் ஆகி
பூவாகிப் பூவுக்கோர் நாற்ற மாகிப்
புக்குளால் வாசமாய் நின்றா னாகித்
தேவாகித் தேவர் முதலு மாகிச்
செழுஞ்சுடராய்ச் சென்றடிகள் நின்ற வாறே."

அவ்வாறு அந்தத் திருநாவுக்கரசு நாயனார்

திருவதிகை வீரட்டானத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு ஏழைத் திருத்தாண்டகம் வருமாறு:

"வெறிவிரவு கூலிளநல் தொங்க லானை
வீரட்டத் தானைவெள் ளேற்றி னானைப்
பொறியரவி னானைப்புள் ளூர்தி யானைப்
பொன்னி றத்தினானைப் புகழ்தக் கானை
அறிதற் கரியசீர் அம்மான் தன்னை
அதியரைய மங்கை அமர்ந்தான் தன்னை
எறிகெடிலத் தானை இறைவன் தன்னை
ஏழையேன் நான்பண்டி கழ்ந்த வாறே."

அந்த நாயனார் அந்தத் தலத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு அடையாளத் திருத்தாண்டகம் வருமாறு:

"சந்திரனை மாகங்கைத் திரையால் மோதச்
சடாமகுடத் திருத்துமே சாம வேத
கந்தருவம் விரும்புமே கபாலம் ஏந்தும்
கையனே மெய்யனே கனக மேனிப்
பந்தணவு மெல்விரலாள் பாக னாமே
பசுவேறு மேபிரம யோகி யாமே
ஐந்தலைய மாகணங்கொண் டரையார்க் கும்மே
அவனாகில் அதிகைவீ ரட்ட னாமே."

அந்த நாயனார் அந்தத் தலத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருவடித் திருத்தாண்டகம் வருமாறு:

"அரவணையான் சிந்தித் தாற்றும்மடி
அருமறையான் சென்னிக் கணியாமடி
சரவணத்தான் கைதொழுது சாரும்மடி
சார்ந்தார் கட்கெல்லாம் சரணாமடி
பரவுவார் பாவம் பறைக்கும்மடி
பதினெண் கணங்களும் பாடும்மடி

திரைவிரவி தென்கெடில நாடன்னடி
திருவீரட் டானத்தெம் செல்வன்னடி.''

அந்த நாயனார் அந்தத் தலத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு காப்புத் திருத்தாண்டகம் வருமாறு:

''செல்வப் புனற்கெடில வீரட்டமும்
சிற்றேமமும் பெருந்தண் குற்றாலமும்
தில்லைச்சிற் றம்பலமும் தென்கூடலும்
தென்னானைக் காவும்சி ராப்பள்ளியும்
நல்லூரும் தேவன்குடி மருகலும்
நல்லவர்கள் தொழுதேத்து நாரையூரும்
கல்லலகு நெடும்பருவக் கபாலம் ஏந்திக்
கட்டங்கத் தோடுறைவார் காப்புக்களே.''

அந்த நாயனார் திருக்காளத்தியைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''விற்றூணொன் றில்லாத நல்கூர்ந் தான்காண்
வியன்கச்சிக் கம்பன்காண் பிச்சை அல்லால்
மற்றூணொன் றில்லாத மாச துரன்காண்
மயானத்து மைந்தன்காண் மாசொன் றில்லாப்
பொற்றூண்காண் மாமணிநற் குன்றொப் பான்காண்
பொய்யாது பொழிலேழும் தாங்கி நின்ற
கற்றூண்காண் காளத்தி காணப் பட்ட
கணநாதன் காணவனென் கண்ணு ளானே.''

அந்த நாயனார் திருஆமாத்தூரைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''வண்ணங்கள் தாம்பாடி வந்து நின்று
வலிசெய்து வளைகவர்ந்தார் வகையால் நம்மைக்
கண்ணம்பால் நின்றெய்து கலைப் பேசிக்
கடியதோர் விடையேறிக் கபாலி யார்

சுண்ணங்கள் தாம்கொண்டு துதையப் பூசித்
தோலுடுத்து நூல்பூண்டு தோன்றத் தோன்ற
அண்ணலார் போகின்றார் வந்து காணீர்
அழகியரே ஆமாத்தூர் ஐய னாரே.''

அந்த நாயனார் திருப்பந்தணை நல்லூரைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''நோதங்கம் இல்லாதார் நாகம் பூண்டார்
நூல்பூண்டார் நூல்மேலோர் ஆமை பூண்டார்
பேய்தங்கு நீள்காட்டில் நட்ட மாடிப்
பிறைசூடும் சடைமேலோர் புனலும் சூடி
ஆதங்கு பைங்குழலாள் பாகம் கொண்டார்
அனல்கொண்டார் அந்திவாய் வண்ணம் கொண்டார்
பாதங்க நீறேற்றார் பைங்கண் ஏற்றார்
பலியேற்றார் பந்தணைநல் லூர ராரே.''

அந்த நாயனார் திருக்கழிப்பாலையைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''ஊனுடுத்தி ஒன்பது வாசல் வைத்து
ஒள்ளெலும்பு தூணா உரோமம் மேய்ந்து
தாமெடுத்த கூரை தவிரப் போவார்
தயக்கம் பலபடைத்தார் தாம ரையினார்
கானெடுத்த மாமயில்கள் ஆலும் சோலைக்
கழிப்பாலை மேய கபாலப் பனார்
வானிடத்தை ஊடறுத்து வல்லைச் செல்லும்
வழிவைத்தார்க் கவ்வழியே போதும் நாமே.''

அந்த நாயனார் திருப்புறம்பயத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''கொடிமாடம் நீள்தெருவு கூடல் கேட்டுக்
கொடுங்கோளூர் தண்வளவி கண்டி யூரும்

நடமாடு நன்மருகல் வைகி நாளும்
நலமாகும் ஒற்றியூர் ஒற்றி யாகப்
படுமாலை வண்டறையும் பழனம் பாசூர்
பழையாறும் பாற்குளமும் கைவிட் டிந்நாள்
பொடியேறு மேனியராய்ப் பூதம் சூழப்
புறம்பயம்நம் ஊரென்று போயி னாரே.''

அந்த நாயனார் திருநல்லூரைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''நினைந்துருகும் அடியாரை நைய வைத்தார்
நில்லாமே தீவினைகள் நீங்க வைத்தார்
சினந்திருகு களிற்றுரிவைப் போர்வை வைத்தார்
செழுமதியின் தளிர்வைத்தார் சிறந்து வானோர்
இனந்துருவி மணிமகுடத் தேறத் துற்ற
இனமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப் பில்கி
நனைந்தனைய திருவடிஎன் தலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே.''

அந்த நாயனார் திருக்கருகாவூரைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''குருகாம் வயிரமாம் கூறு நாளாம்
கொள்ளும் கிழமையாம் கோளே தானாம்
பருகா அமுதமாம் பாலின் நெய்யாம்
பழத்தின் இரசமாம் பாட்டிற் பண்ணாம்
ஒருகால் உமையாளோர் பாக னுமாம்
உள்நின்ற நாவுக் குரையா டியாம்
கருவாய் உலகுக்கு முன்னே தோன்றும்
கண்ணாம் கருகாவூர் எந்தை தானே.''

அந்த நாயனார் திருவிடைமருதூரைப் பற்றிப் பாடி அருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''சூலப் படையுடையார் தாமே போலும்
சுடர்த்திங்கட் கண்ணி உடையார் போலும்
மாலை மகிழ்ந்தொருபால் வைத்தார் போலும்
மந்திரமும் தந்திரமும் ஆனார் போலும்
வேலைக் கடனஞ்சம் உண்டார் போலும்
மேல்வினைகள் தீர்க்கும் விகிர்தர் போலும்
ஏலக் கமழ்குழலாள் பாகர் போலும்
இடைமருது மேவிய ஈச னாரே.''

அந்த நாயனார் திருப்பூவணத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''தன்னடியார்க் கருள்புரிந்த கதவு தோன்றும்
சதுர்முகனைத் தலையளித்த தன்மை தோன்றும்
மின்னனைய நுண்ணிடையாள் பாகம் தோன்றும்
வேழத்தின் உரிவிரும்பிப் போர்த்தல் தோன்றும்
துன்னியசெஞ் சடைமேலோர் புனலும் பாம்பும்
தூயமா மதியுடனே வைத்தல் தோன்றும்
பொன்னனைய திருமேனி பொலிந்து தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனித னார்க்கே.''

அந்த நாயனார் திருஆலவாயைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''நீர்த்திரளை நீள்சடைமேல் நிறைவித் தானை
நிலமருவி நீரோடக் கண்டான் தன்னைப்
பாற்றிரளைப் பயின்றாட வல்லான் தன்னைப்
பகைத்தெழுந்த வெங்கூற்றைப் பாய்ந்தான் தன்னைக்
காற்றிரளாய் மேகத்தி னுள்ளே நின்று
கடுங்குரலாய் இடிப்பானைக் கண்ணோர் நெற்றித்
தீத்திரளைத் தென்கூடல் திருவால வாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே.''

அந்த நாயனார் திருநள்ளாற்றைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''ஆதிக்கண் நான்முகத்தில் ஒன்று சென்று
அல்லாத சொல்லுரைக்கத் தன்கை வாளால்
சேதித்த திருவடியைச் செல்ல நல்ல
சிவலோக நெறிவகுத்துக் காட்டு வானை
மாதிமைய மாதொருகூ றாயி னானை
மாமலர்மேல் அயனோடு மாலும் காணா
நாதியை நம்பியை நள்ளாற் றானை
நானடியேன் நினைக்கப்பெற் றுய்ந்த வாறே.''

அந்த நாயனார் திருஆக்கூரைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''முடித்தா மரைஅணிந்த மூர்த்தி போலும்
மூவுலகும் தாமாகி நின்றார் போலும்
கடித்தா மரைஏய்ந்த கண்ணார் போலும்
கல்லலகு பாணி பயின்றார் போலும்
கொடித்தா மரைக்காடே நாடும் தொண்டர்
குற்றேவல் தாம்மகிழ்ந்த குழகர் போலும்
அடித்தா மரைமலர்மேல் வைத்தார் போலும்
ஆக்கூரில் தான்றோன்றி யப்ப னாரே.''

அந்த நாயனார் திருநாகைக் காரோணத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''பாரார் பரவும் பழனத் தானைப்
பருப்பதத் தானைப் பைஞ்ஞீலி யானைச்
சீரார் செழும்பவளக் குன்றொப் பானைத்
திகழும் திருமுடிமேல் திங்கள் சூடிப்
பேரா யிரமுடைய பெம்மான் தன்னைப்
பிறர்தன்னைக் காட்சிக் கரியான் தன்னைக்

காரார் கடல்புடைசூழ் அந்தண் நாகைக்
காரோணத் தெஞ்ஞான்றும் காண லாமே.''

அந்த நாயனார் திருமறைக்காட்டைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''தூண்டு சுடரனைய சோதி கண்டாய்
தொல்லமரர் சூளா மணிதான் கண்டாய்
காண்டற் கரிய கடவுள் கண்டாய்
கருதுவார்க் காற்ற எளியான் கண்டாய்
வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்
மெய்ந்நெறி கண்டான் விரதம் எல்லாம்
மாண்ட மனத்தார் மனத்தான் கண்டாய்
மறைக்காட் டுறையும் மணாளன் தானே.''

அந்த நாயனார் திருஆரூர் அரநெறியைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''கற்பகமும் இருசுடரும் ஆயி னானைக்
காளத்தி கயிலாய மலையு ளானை
விற்பயிலும் மதனழிய விழித்தான் தன்னை
விசயனுக்கு வேடுவனாய் நின்றான் தன்னைப்
பொற்பமரும் பொழியலாரூர் மூலட் டானம்
பொருந்தியஎம் பெருமானைப் பொருந்தார் சிந்தை
அற்புதனை அரநெறியில் அப்பன் தன்னை
அடைந்தடியேன் அருவினைநோய் அறுத்த வாறே.''

அந்த நாயனார் திருவெண்காட்டைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''தூண்டு சுடர்மேனித் தூநீ றாடிச்
சூலங்கை ஏந்தியோர் சுழல்வாய் நாகம்
பூண்டு பொறியரவம் காதிற் பெய்து
பொற்சடைக ளவைதாழப் புரிவெண் ணூலர்

நீண்டு கிடந்திலங்கு திங்கள் சூடி
நெடுந்தெருவே வந்தெனது நெஞ்சம் கொண்டார்
வேண்டு நடைநடக்கும் வெள்ளே றேறி
வெண்காடு மேவிய விகிர்த னாரே.''

அந்த நாயனார் திருநெய்த்தானத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''தந்தைதாய் இல்லாதாய் நீயே என்றும்
தலையார் கயிலாயன் நீயே என்றும்
எந்தாய்எம் பிரானானாய் நீயே என்றும்
ஏகம்பத் தென்னீசன் நீயே என்றும்
முந்தியமுக் கண்ணாய் நீயே என்றும்
மூவலூர் மேவினாய் நீயே என்றும்
சிந்தையாய்த் தேனூராய் நீயே என்றும்
நின்றநெய்த் தானாஎன் நெஞ்சு ளானே.''

அந்த நாயனார் திருச்சோற்றுத்துறையைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''மூத்தவனாய் உலகுக்கு முந்தி னானே
முறைமையால் எல்லாம் படைக்கின் றானே
ஏத்தவனாய் ஏழுலகும் ஆயி னானே
இன்பனாய்த் துன்பம் களைகின் றானே
காத்தவனாய் எல்லாம்தான் காண்கின் றானே
கடுவினையேன் தீவினையைக் கண்டு போகத்
தீர்த்தவனே திருச்சோற்றுத் துறையு ளானே
திகழொளியே சிவனேஉன் அபயம் நானே.''

அந்த நாயனார் திருவொற்றியூரைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''கடிய விடையேறி காள கண்டர்
கலையோடு மழுவாளோர் கையில் ஏந்தி

இடிய பலிகொள்ளார் போவார் அல்லர்
எல்லாந்தான் இவ்வடிகள் யாரென் பாரே
வடிவுடைய மங்கையும் தாமும் எல்லாம்
வருவாரை எதிர்கண்டோம் மயிலாப் புள்ளே
செடிபடுவெண் தலையொன் றேந்தி வந்து
திருவொற்றி யூர்புக்கார் தீய வாறே.''

அந்த நாயனார் திருவாவடுதுறையைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''நம்பனை நால்வேதம் கரைகண் டானை
ஞானப் பெருங்கடலை நன்மை தன்னைக்
கம்பனைக் கல்லால் இருந்தான் தன்னைக்
கற்பகமாய் அடியார்கட் கருள்செய் வானைச்
செம்பொன்னைப் பவளத்தைத் திரளும் முத்தைத்
திங்களை ஞாயிற்றைத் தீயை நீரை
அம்பொன்னை ஆவடுதண் டுறையுள் மேய
அரனடியே அடிநாயேன் அடைந்துய்ந் தேனே.''

அந்த நாயனார் திருக்கோகரணத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''சந்திரனும் தண்புனலும் சந்தித் தான்காண்
தாழ்சடையான் காண்சார்ந்தார்க் கமுதானான் காண்
அந்தரத்தில் அசுரர்புரம் மூன்றட் டான்காண்
அவ்வுருவில் அவ்வுருவம் ஆயி னான்காண்
பந்தரத்து நான்மறைகள் ஆயி னான்காண்
பலபலவும் பாணி பயில்கின் றான்காண்
மந்திரத்து மறைப்பொருளும் ஆயி னான்காண்
மாகடல்சூழ் கோகரணம் மன்னி னானே.''

அந்த நாயனார் திருவெண்ணியூரைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"தொண்டிலங்கும் அடியவர்க்கோர் நெறியி னாரும்
தூநீறு துதைந்திலங்கு மார்பி னாரும்
புண்டரிகத் தயனொடுமால் காணா வண்ணம்
பொங்குதழற் பிழம்பாய புராண னாரும்
வண்டமரும் மலர்க்கொன்றை மாலை யாரும்
வானவர்க்காய் நஞ்சுண்ட மைந்த னாரும்
விண்டவர்தம் புரமூன்றும் எரிசெய் தாரும்
வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்த னாரே."

அந்த நாயனார் திருவானைக்காவைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"எத்தாயர் எத்தந்தை எச்சுற்றத் தார்
எம்மாடு சும்மாடாம் ஏவர் நல்லார்
செத்தால்வந் துதவுவார் ஒருவர் இல்லை
சிறுவிறகால் தீமூட்டிச் செல்லா இல்லை
சித்தாய வேடத்தாய் நீடு பொன்னித்
திருவானைக் காவுடைய செல்வா என்றன்
அத்தாஉன் பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்லகண்டம் கொண்டடியேன் என்செய் கேனே."

அந்த நாயனார் திருஏகம்பத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"வருந்தான்காண் மனமுருகி நினையா தார்க்கு
வஞ்சகன்காண் அஞ்செழுத்து நினைவார்க் கென்றும்
மருந்தவன்காண் வான்பிணிகள் தீரும் வண்ணம்
வானகமும் மண்ணகமும் மாற்று மாகிப்
பரந்தவன்காண் படர்சடையெட் டுடையான் தாள்காண்
பங்கயத்தோன் தன்சிரத்தை ஏந்தி ஊரூர்
இரந்தவன்காண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காணவனென் எண்ணத் தானே."

அந்த நாயனார் திருநாகேச்சரத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"தாயவனை வானோர்க்கும் ஏனோ ருக்கும்
தலைமகனை மலையவளை உலகம் எல்லாம்
ஆயவனைச் சேயவனை அணியான் தன்னை
அழலவனை நிழலவனை அறிய ஒண்ணா
மாயவனை மறையவனை மறையோர் தங்கள்
மந்திரனைத் தந்திரனை ஊரா நின்ற
தீயவனைத் திருநாகேச் சரத்து ளானைச்
சேராதார் நன்னெறிக்கட் சேரா தாரே."

அந்த நாயனார் திருக்கீழ்வேளூரைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"ஆளான அடியவர்கட் கன்பன் தன்னை
ஆனஞ்சும் ஆடியைநான் அபயம் புக்க
தாளானைத் தன்னொப்பார் இல்லா தானைச்
சந்தனமும் குங்குமமும் சாந்தும் தோய்ந்த
தோளானைத் தோளாத முத்தொப் பானைத்
தூவெளுத்த கோவணத்தை அரையில் ஆர்த்த
கீளானைக் கீழ்வேளூர் ஆளும் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடி லாரே."

அந்த நாயனார் பாடியருளிய க்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகம் ஒன்று வருமாறு:

"தில்லைச்சிற் றம்பலமும் செம்பொன் பள்ளி
தேவன்குடி சிராப்பள்ளி தெங்கூர்
சொல்லிக் குளிரறைப் பள்ளி கோவல்
வீரட்டம் கோகரணம் கோடிகாவும்
முல்லைப் புறவம் முருகன் பூண்டி
முளையூர் பழையாறை சத்திமுற்றம்

கல்லில் திகழ்சீரார் காளத் தியும்
கயிலாய நாதனையே காணலாமே."

அந்த நாயனார் பாடியருளிய ஓர் அடைவு திருத்தாண்டகம் வருமாறு:

"பொருப்பள்ளி வரைவில்லாப் புரமூன் றெய்து
புலந்தழியச் சலந்தரனைப் பிளந்தான் பொற்பில்
கரப்பள்ளி திருக்காட்டுப் பள்ளி கள்ளார்
கமழ்கொல்லி யறைப்பள்ளி கலவஞ் சாரற்
சிரப்பள்ளி சிவப்பள்ளி செம்பொன் பள்ளி
செழுநனி பள்ளிதவப் பள்ளி சீரார்
பரப்பள்ளி என்றென்று பகர்வோ ரெல்லாம்
பரலோகத் தினிதாகப் பாலிப் பாரே."

அந்த நாயனார் திருவலஞ்சுழியைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"அலையார் புனற்கங்கை நங்கை காண
அம்பலத்தில் அருநட்டம் ஆடி வேடம்
தொலையாத வென்றியார் நின்றி யூரும்
நெடுங்களமும் மேவிவிடை யைமேல் கொண்டு
இலையார் படைகையில் ஏந்தி எங்கும்
இமையவரும் உமையவளும் இறைஞ்சி ஏத்த
மலையார் திரளருவிப் பொன்னி சூழ்ந்த
வலஞ்சுழியே புக்கிடமா மருவி னாரே."

அந்த நாயனார் திருக்குடந்தைக் கீழ்க்கோட்டத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"சொன்மலிந்த மறைநான்கா றங்க மாகிச்
சொற்பொருளும் கடந்தசுடர்ச் சோதி போலும்
கன்மலிந்த கயிலைமலை வாணர் போலும்
கடல்நஞ்சம் உண்டிருண்ட கண்டர் போலும்

மன்மலிந்த மணிவளரத் திண்தோளர் போலும்
மலையரையன் மடப்பாவை மணாளர் போலும்
கொன்மலிந்த மூவிலைவேற் குழகர் போலும்
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெம் கூத்த னாரே.''

அந்த நாயனார் திருப்புத்தூரைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''புரிந்தமரர் தொழுதேத்தும் புகழ்தக் கோன்காண்
போர்விடையின் பாகன்காண் புவனம் ஏழும்
வரிந்துபல உயிராகி விளங்கி னான்காண்
விரைக்கொன்றைக் கண்ணியன்காண் வேதம் நான்கும்
தெரிந்துமுதல் படைத்தோனைச் சிரங்கொண் டோன்காண்
தீர்த்தன்காண் திருமாலோர் பாகத் தான்காண்
திருந்துவயல் புடைதழுவு திருப்புத் தூரில்
திருத்தளியான் காணவனென் சிந்தை யானே.''

அந்த நாயனார் திருவாய்மூரைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''பாட அடியார் பரவக் கண்டேன்
பத்தர்கணம் கண்டேன் மொய்த்த பூதம்
ஆடல் முழவம் அதிரக் கண்டேன்
கொக்கினிதழ் கண்டேன் கொன்றை கண்டேன்
வாடல் தலையொன்று கையில் கண்டேன்
வாய்மூர் அடிகளைநான் கண்ட வாறே.''

அந்த நாயனார் திருமாற்பேற்றைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''பாரானைப் பாரினது பயனா னானைப்
படைப்பாகிப் பல்லுயிர்க்கும் பரிவோன் தன்னை
ஆராத இன்னமுதை அடியார் தங்கட்
கனைத்துலகும் ஆனானை அமரர் கோனைக்

காராரும் கண்டனைக் கயிலை வேந்தைக்
கருதுவார் மனத்தானைக் காவற் செற்ற
சீரானைச் செல்வனைத் திருமாற் பேற்றெம்
செம்பவளக் குன்றினைசென் றடைந்தேன் நானே.''

அந்த நாயனார் திருக்கோடிகாவைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''கண்டலம்சேர் நெற்றியிளங் காளை கண்டாய்
கல்மதில்சூழ் கந்தமா தனத்தான் கண்டாய்
மண்டலம்சேர் மயக்கறுக்கும் மருந்து கண்டாய்
மதிற்கச்சி ஏகம்பம் மேயான் கண்டாய்
விண்டலம்சேர் விளக்கொளியாய் நின்றான் கண்டாய்
மீயச்சூர் பிரியாத விகிர்தன் கண்டாய்
கொண்டலம்சேர் கண்டத்தெம் கூத்தன் கண்டாய்
கோடிகா அமர்ந்துறையும் குழகன் தானே.''

அந்த நாயனார் திருக்காய்க்காட்டைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''வானத் திளமதியம் பாம்பும் தன்னில்
வளர்சடைமேல் ஆதரிப்ப வைத்தார் போலும்
தேனைத் திளைத்துண்டு வண்டு பாடும்
தில்லை நடமாடும் தேவர் போலும்
ஞானத்தின் ஒண்சுடராய் நின்றார் போலும்
நன்மையும் தீமையும் ஆனார் போலும்
தேனொத் தடியார்க் கினியார் போலும்
திருக்காய்க்காட் டினிதுறையும் செல்வர் தாமே.''

அந்த நாயனார் திருச்செங்காட்டங்குடியைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''பெருந்தகையைப் பெறற்கரிய மாணிக் கத்தை
பேணிநினைந் தெழுவார்தம் மனத்தே மன்னி

இருந்தமணி விளக்கதனை நின்ற பூமேல்
எழுந்தருளி இருந்தானை எண்தோள் வீசி
அருந்திறல்மா நடமாடும் அம்மான் தன்னை
அங்கனகச் சுடர்க்குன்றை அன்றா லின்கீழ்
திருந்துமறைப் பொருள்நால்வர்க் கருள்செய் தானைச்
செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே.''

அந்த நாயனார் திருமுண்டீச்சரத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''ஆர்த்தான்காண் அழல்நாகம் அரைக்கு நாணா
அடியவர்கட் கன்பன்காண் ஆனைத் தோலைப்
போர்த்தான்காண் புரிசடைமேல் புனலேற்றான் காண்
புறங்காட்டில் ஆடல் புரிந்தான் தான்காண்
காத்தான்காண் உலகேழும் கலங்கா வண்ணம்
கனைகடல்வாய் நஞ்சதனைக் கண்டத் துள்ளே
சேர்த்தான்காண் திருமுண்டீச் சரத்து மேய
சிவலோகன் காணவனென் சிந்தை யானே.''

அந்த நாயனார் திருவாலம்பொழிலைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

''கருவாகிக் கண்ணுதலாய் நின்றான் தன்னைக்
கமலத்தோன் தலையரிந்த காபா லிய்யை
உருவார்ந்த மலைமகளோர் பாகத் தானை
உணர்வெலாம் ஆனானை ஓசை யாகி
வருவானை வலஞ்சுழிஎம் பெருமான் தன்னை
மறைக்காடும் ஆவடுதண் டுறையும் மேய
திருவானைத் தென்பரம்பைக் குடியின் மேய
திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே.''

அந்த நாயனார் திருச்சிவபுரத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"வானவன்காண் வானவர்க்கும் மேலோ னான்காண்
வடமொழியும் தென்தமிழும் மறைகள் நான்கும்
ஆனவன்காண் ஆனைந்தும் ஆடி னான்காண்
ஐயன்காண் கையிலனல் ஏந்தி ஆடும்
கானவன்காண் கானவனுக் கருள்செய் தான்காண்
கருதுவார் இதயத்துக் கமலத் தூறும்
தேனவன்காண் சென்றடையாச் செல்வன் தான்காண்
சிவனவன்காண் சிவபுரத்தெம் செல்வன் தானே."

அந்த நாயனார் திருஇன்னம்பரைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"அல்லிமலர் நாற்றத் துள்ளார் போலும்
அன்புடையார் சிந்தை அகலார் போலும்
சொல்லின் அருமறைகள் தாமே போலும்
தூநெறிக்கு வழிகாட்டும் தொழிலார் போலும்
வில்லின் புரமூன் றெரித்தார் போலும்
வீங்கிருளும் நல்லொளியும் ஆனார் போலும்
எல்லி நடமாட வல்லார் போலும்
இன்னம்பர்த் தான்தோன்றி ஈச னாரே."

அந்த நாயனார் திருக்கஞ்சனூரைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"ஏடேறு மலர்க்கொன்னற அரவு தும்பை
இளமதியம் எருக்குவான் இழிந்த கங்கை
சேடெறிந்த சடையானைத் தேவர் கோவைச்
செம்பொன்மால் வரையானைச் சேர்ந்தார் சிந்தைக்
கேடிலியைக் கீழ்வேளூர் ஆளும் கோவைச்
சிறிபேசி மடவார்பெய் வளைகள் கொள்ளும்
காடவனைக் கஞ்சனூர் ஆண்ட கோவைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே."

அந்த நாயனார் திருஎறும்பியூரைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"பன்னியசெந் தமிழறியேன் கவியேன் மாட்டேன்
எண்ணோடு பண்நிறைந்த கலைக ளாய
தன்னையும்தன் திறத்தறியாப் பொறியி லேனைத்
தன்திறமும் அறிவித்து நெறியும் காட்டி
அன்னையையும் அத்தனையும் போல அன்பாய்
அடைந்தேனைத் தொடர்ந்தென்னை ஆளாக் கொண்ட
தென்எறும்பி யூர்மலைமேல் மாணிக் கத்தைச்
செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேன் நானே."

அந்த நாயனார் திருக்கழுக்குன்றத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"பல்லாண்டு தலைசடைமேல் உடையான் தன்னைப்
பாய்புலித்தோல் உடையானைப் பகவன் தன்னைச்
சொல்லோடு பொருளனைத்தும் ஆனான் தன்னைச்
சுடருருவில் என்பறாக் கோலத் தானை
அல்லாத காலனைமுன் அடர்த்தான் தன்னை
ஆலின்கீழ் இருந்தானை அமுதா னானைக்
கல்லாடை புனைந்தருளும் காபா லியைக்
கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே."

அந்த நாயனார் பாடியருளிய பலவகைத் திருத்தாண்டகங்களில் ஒரு திருத்தாண்டகம் வருமாறு:

"நேர்ந்தொருத்தி ஒருபாகத் தடங்கக் கண்டு
நிலைதளர ஆயிரமா முகத்தி னோடு
பாய்ந்தொருத்தி படர்சடைமேற் பயிலக் கண்டு
கடஅரவும் பனிமதியும் வைத்த செல்வர்
தாந்திருத்தித் தம்மனத்தை ஒருக்காத் தொண்டர்
தனித்தொரு தண்டூன்றிமெய் தளரா முன்னம்

பூந்துருத்தி பூந்துருத்தி என்பீ ராகில்
பொல்லாப் புலால்துருத்தி போக்க லாமே.''

அந்த நாயனார் பாடியருளிய ஒரு நின்ற திருத்தாண்டகம் வருமாறு:

''இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி
இயமானனாய் எறியும் காற்று மாகி
அருநிலைய திங்களாய் ஞாயி றாகி
ஆகாச மாய்அட்ட மூர்த்தி யாகிப்
பெருநலமும் குற்றமும் பெண்ணும் ஆணும்
பிறருருவும் தம்முருவும் தாமே ஆகி
நெருநலையாய் இன்றாகி நாளை ஆகி
நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே.''

பிறகு வரும் 415-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்த திருநாவுக்கரசு நாயனார் ''ஆருயிரின் திருவிருத்தம்'', ''தசபுருணத் தடைவு'' என்பவற்றையும் இந்த மண்ணுலகத்தில் வாழும் மக்கள் புகழ்ந்து பாராட்டும் ''பாவநாசப் பதிகம்'' என்னும் திருப்பதிகத்தையும், நேராக அமையுமாறு நின்று கொண்டு அறை கூவும் திருப்பதிகம் முதலாக உள்ள வேறு பல திருப்பதிகங்களையும் பெருமையைப் பெற்று விளங்கும் திருவருளாகிய சமுத்திரத்தை வழங்கியருளும் சிவபெருமானை அந்த நாயனார் பாடியருளினார்.'' பாடல் வருமாறு:

''ஆருயிரின் திருவிருத்தம் தசபுராணத் தடைவும்
பார்பரவும் பாவநாசப் பதிகம் பன்முறையும்
நேர்படநின் றறைகூவும் திருப்பதிகம் முதல்பிறவும்
பேரருளின் கடல்அளிக்கும் பெருமானைப் பாடினார்.''

ஆருயிரின் திருவிருத்தம் - ஆருயிரின் திருவிருத்தம் என்னும் திருவிருத்தத்தையும். தசபுராணத் தடைவும் -

தசபுராணத்தடைவு என்ற திருப்பதிகத்தையும். பார் - இந்த மண்ணுலகத்தில் வாழும் மக்கள்; இட ஆகு பெயர். பரவும் - புகழ்ந்து பாராட்டும். பாவநாசப் பதிகம் - பாவநாசப் பதிகம் என்னும் திருப்பதிகத்தையும். பல் - பல. முறையும் - தடவைகளாகவும்; ஒருமை பன்மை மயக்கம். நேர்பட - நேராக அமையுமாறு. நின்று - நின்றுகொண்டு. அறை கூவும் திருப்பதிகம் - அறை கூவும் திருப்பதிகத்தையும். முதல் - முதலாக உள்ள. பிறவும் - வேறு பல திருப்புதிகங் களையும். பேரருளின் - பெருமையைப் பெற்று விளங்கும் திருவருளாகிய. கடல் - சமுத்திரத்தை; உருவகம். அளிக்கும் - வழங்கியருளும். பெருமானை - சிவபெருமானை. ப்: சந்தி. பாடினார் - அந்தத் திருநாவுக் கரசு நாயனார் பாடியருளினார்.

திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய ஓர் ஆருயிர்த் திருவிருத்தம் வருமாறு:

"பைம்மாண் அரவல்குற் பங்கயச்
சீறடி யாள்வெருவக்
கைம்மா வரிசிலைக் காமனை
அட்ட கடவுள்முக்கண்
எம்மான் இவனென் றிருவரும்
ஏத்த எரிநிமிர்ந்த
அம்மான் அடிநிழற் கீழதன்
றோஎன்றன் ஆருயிரே."

அந்த நாயனார் பழம்பஞ்சுரப் பண் அமையப் பாடியருளிய ஒரு தசபுராணப் பாசுரம் வருமாறு:

"பருவரை ஒன்றுசுற்றி அரவம் கைவிட்ட
இமையோர் இரிந்து பயமாய்த்
திருநெடு மால்நிறத்தை அடுவான் விசும்பு
சுடுவா னெழுந்து விசைபோய்ப்

பெருகிட மற்றிதற் கொர்பிதி காரம்ஒன்றை
அருளாய் பிரானே எனலும்
அருள்கொடு மாவிடத்தை எரியா மல்உண்ட
அவனண்ட கண்ட ரரசே.''

அந்த நாயனார் பழம்பஞ்சுரப் பண்ணில் பாடியருளிய பாவநாசத் திருப்பதிகத்தில் வரும் ஒரு பாசுரம் வருமாறு:

''பற்றற்றார் சேர்பழம் பதியைப்
பாசூர் நிலாய பவளத்தைச்
சிற்றம் பலத்தெம் திகழ்கனியைத்
தீண்டற் கரிய திருவுருவை
வெற்றி யூரில் விரிசுடரை
விமலர் கோனைத் திரைசூழ்ந்த
ஒற்றி யூரெம் உத்தமனை
உள்ளத் துள்ளே வைத்தேனே.''

பிறகு வரும் 416-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'அந்த நிலையில் திருவதிகை வீரட்டானேசுவரர் தடுத்து ஆட்கொண்ட திருநாவுக்கரசு நாயனார் தமக்கு உரிய உழவாரத் திருப்பணிகளையும் வேறு பல திருப்பணி களையும் புரிந்து கொண்டு இருக்க அந்த நாயனாருடைய நல்ல நிலையைக் காட்டுபவராகி நம்பராகிய அக்கினீசுவரர் தம்முடைய ஆலயத்தில் இருக்கும் அழகிய திருமுற்றத்தில் வரும் உழவாரப் படை நுழைந்த இடங்கள் எல்லா வற்றிலும் தங்கக் காசுகளோடும் முத்து, பவளம், நீலமணி, மாணிக்கம், புஷ்பராகம், பதுமராகம், கோமேதகம், வஜ்ரம், வயிடூரியம் என்னும் ஒன்பது இரத்தினங்களும் தோற்றப் பொலிவோடு விளங்குமாறு அந்த அக்கினிசுவரர் திருவருளைப் புரிந்தார்.' பாடல் வருமாறு:

"அந்நிலை மையினில் ஆண்ட
அரசுபணி செய்யஅவர்
நன்னி லைமை காட்டுவார்
நம்பர்திரு மணிமுன்றில்
தன்னில் வரும் உழவாரம்
நுழைந்தஇடம் தானெங்கும்
பொன்னினொடு நவமணிகள்
பொலிந்திலங்க அருள்செய்தார்."

அந்நிலைமை - அந்த நிலையில். ஆண்ட - திருவதிகை வீரட்டானேசுவரர் தடுத்து ஆட்கொண்ட. அரசு - திருநாவுக்கரசு நாயனார்; அரசு மயக்கம். பணி - தமக்கு உரிய உழவாரத் திருப்பணியையும் வேறு பல திருப்பணிகளையும்; ஒருமை பன்மை மயக்கம். செய்ய - புரிந்து கொண்டு இருக்க. அவர் - அந்த நாயனாருடைய. நன்னிலைமை - நல்ல நிலையை. காட்டுவார் - காட்டு பவராகி; முற்றெச்சம். நம்பர் - தம்முடைய பக்தர்களுக்குப் பல விதமான நம்பிக்கைகளை உண்டாக்குபவராகிய அக்கினீசுவரர். அந்த நம்பிக்கைகள் இன்ன என்பதை வேறு ஓரிடத்தில் கூறினோம்; ஆண்டுக் கண்டுணர்க. திருமணி முன்றில்தன்னில் - தம்முடைய ஆலயத்தில் இருக்கும் அழகிய திருமுற்றத்தில். தன்: அசைநிலை. இல்முன்: முன் பின்னாகத் தொக்க தொகை. வரும் - அந்த நாயனார் புரிந்து வரும். உழவாரம் - உழவாரப் படை.. நுழைந்த இடம்தான் எங்கும் - நுழைந்த இடங்கள் எல்லாவற்றிலும். இடம்: ஒருமை பன்மை மயக்கம். தான்: அசை நிலை. பொன்னினொடு - தங்கக் காசுகளோடு; ஆகுபெயர். நவமணிகள் - முத்து, பவளம், நீலமணி, மாணிக்கம், புஷ்பராகம், பதுமராகம், கோமேதகம், வஜ்ரம், வயிடூரியம் என்னும் ஒன்பது இரத்தினங்களும். பொலிந்து

- தோற்றப் பொலிவை அடைந்து. இலங்க - விளங்குமாறு. அருள் - அந்த அக்கினீசுவரர் திருவருளை. செய்தார் - புரிந்தார்.

பிறகு வரும் 417-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அவ்வாறு வந்த சிவந்த தங்கக் காசுகளையும், முத்து, பவளம், நீலமணி, மாணிக்கம், புஷ்பராகம், பதுமராகம், கோமேதகம், வஜ்ரம், வயிடூரியம் என்னும் ஒன்பது இரத்தினங்களையும் நெடுந்தூரத்தில் ஒளியை வீசிக் கொண்டு திகழ அந்தத் திருமுற்றத்தில் அந்தத் தங்கக் காசுகள், ஒன்பது இரத்தினங்கள் ஆகியவற்றையும் தேவர்களினுடைய தலைவராகிய அக்கினீசுவரருடைய திருக்கோயிலில் உள்ள அழகிய முற்றத்தில் உருளுகின்ற பரற் கற்களோடு சமானமாக அடியேங்களுடைய தலைவரும் வாகீசரும் ஆகிய திருநாவுக்கரசு நாயனார் தம்முடைய உழவாரப் படையில் எடுத்து நறுமணம் கமழும் மென்மையாகிய தாமரை மலர்கள் மலர்ந்திருக்கும் ஒரு வாவியில் போய் விழுமாறு எறிந்தருளினார்.' பாடல் வருமாறு:

"செம்பொன்னும் நவமணியும்
சேண்விளங்க ஆங்கெவையும்
உம்பர்பிரான் திருமுன்றில்
உருள்பருக்கை யுடன்ஒக்க
எம்பெருமான் வாகீசர்
உழவாரத் தினில்ஏந்தி
வம்பலர்மென் பூங்கமல
வாவியினிற் புகஎறிந்தார்."

செம் - சிவப்பாக இருக்கும். பொன்னும் - அவ்வாறு வந்த தங்கக் காசுகளையும்; ஆகு பெயர். நவமணியும் -

முத்து, பவளம், நீலமணி, மாணிக்கம், புஷ்பராகம், பதுமராகம், சோமேதகம், வஜ்ரம், வயிடூரியம் என்னும் ஒன்பது இரத்தினங்களையும். மணி: ஒருமை பன்மை மயக்கம். சேண் - நெடுந்தூரத்தில். விளங்க - ஒளியை வீசிக் கொண்டு திகழ. ஆங்கு - அந்தத் திருமுற்றத்தில். எவையும் - வந்த தங்கக் காசுகள், ஒன்பது இரத்தினங்கள் ஆகியவற்றையும். உம்பர் - தேவர்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். பிரான் - தலைவராகிய அக்கினீசு வரருடைய. திருமுன்றில் - திருக்கோயிலில் உள்ள அழகிய முற்றத்தில். உருள் - உருண்டு ஓடும். பருக்கையுடன் - பருக்கைக் கற்களோடு; ஒருமை பன்மை மயக்கம். ஒக்க - சமானமாக. எம்பெருமான் - அடியேங்களுடைய தலை வரும். இது சேக்கிழார் தம்மையும் பிற தொண்டர்களையும் சேர்த்துக் கூறியது. வாகீசர் - வாகீசருமாகிய திருநாவுக்கரசு நாயனார். உழவாரத்தினில் - தம்முடைய உழவாரப் படையில். ஏந்தி - எடுத்து. வம்பு - நறுமணம். அலர் - கமழும். மென் - மென்மையாகிய. பூங்கமல - தாமரை மலர்கள் மலர்ந்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். வாவியினில் - ஒரு வாவியில். புக - போய் விழுமாறு. எறிந்தார் - அந்த நாயனார் எறிந்தருளினார்.

பிறகு உள்ள 418-அம் கவியின் உள்ளுறை வருமாறு:

'புற்களோடும், பருக்கைக் கற்களோடும் தங்கக்காசு களோடும், ஒன்பது இரத்தினங்களோடும் சொல்லுகின்ற ஓடுகளோடும் வித்தியாசம் இல்லாத நிலையில் உறுதியாக இருந்த நல்லவராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனாருக்கு முன்னால் திருப்புகலூரில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் தலைவராகிய அக்கினீசுவரர் வழங்கிய திரு அருளினால் வில் ஓடுகின்ற நெற்றிகளைப் பெற்ற மடப்பத்தைக் கொண்ட பெண்மணிகள்

ஆகாயத்தின் வழியே அந்தத் திருமுற்றத்திற்கு வந்து இறங்கினார்கள்.' பாடல் வருமாறு:

"புல்லோடும் கல்லோடும்
பொன்னோடும் மணியோடும்
சொல்லோடும் வேறுபா
டிலாநிலைமை துணிந்திருந்த
நல்லோர்முன் திருப்புகலூர்
நாயகனார் திருவருளால்
வில்லோடு நுதல்மடவார்
விசும்பூடு வந்திழிந்தார்."

புல்லோடும் - புற்களோடும்; ஒருமை பன்மை மயக்கம். கல்லோடும் - பருக்கைக் கற்களோடும்; ஒருமை பன்மை மயக்கம். பொன்னொடும் - தங்கக் காசுகளோடும்; ஆகு பெயர். மணியோடும் - முத்து, பவளம், நீலமணி, மாணிக்கம், மரகதம், புஷ்பராகம், பதுமராகம், கோமேதகம், வயிடூரியம் என்னும் ஒன்பது இரத்தினங்களோடும். மணி: ஒருமை பன்மை மயக்கம். சொல் - இழிவாகக் கூறுப்படும். ஓடும் - ஓடுகளோடும்; ஒருமை பன்மை மயக்கம். வேறுபாடு - வேற்றுமை. இலா - இல்லாத; இடைக்குறை. நிலைமை - நிலையாக உள்ள பான்மையில். துணிந்து இருந்த - உறுதியை அடைந்திருந்த. நல்லோர் - நல்லவராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனாருக்கு. முன் - முன்னால். திருப்புகலூர் - திருப்புகலூரில். நாயகனார் - தலைவனாகிய அக்கினீசுவரர். திருவருளால் - வழங்கிய திருவருளினால். வில் - விற்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஓடு - கண்டு ஓடுகின்ற. நுதல் - நெற்றிகளைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம். மடவார் - மடப்பத்தைக் கொண்ட தேவலோகத்துப் பெண்மணிகள்; ஒருமை பன்மை மயக்கம். விசும்பூடு - ஆகாயத்தின் வழியே. வந்து

- அந்தத் திருமுற்றத்திற்கு வந்து. இழிந்தார் - இறங்கினார் கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு உள்ள 419-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'ஆகாயமாகிய இடத்தில் தோன்றும் மின்னற்கொடி கள் தரைக்கு வந்து இறங்கினாற் போல வந்து சுரஸ்தானத் தில் நிரம்பிய சுருதிகளில் அளிக்கும் அலங்காரங்களி னுடைய பான்மையோடு இசைப் பாடலாகிய அமுதம் பரந்து தோன்றும் கோவைப் பழங்களைப் போன்ற அதரங்களைப் பெற்ற தம்முடைய திருவாயிலிருந்து பிரகாசத்தைப் பரவுமாறு புரிய நீலோற்பல மலர்களைப் போன்ற நீளமான தங்களுடைய கண்களை வெளியிடத்தில் பரவச் செய்து இசைப்பாடல்களை அந்தத் தேவலோகத்தி லிருந்து வந்த அணங்குகள் பாடுவாரானார்கள்.' பாடல் வருமாறு:

"வானகமின் னுக்கொடிகள்
வந்திழிந்தால் எனவந்து
தானநிறை சுருதிகளில்
தரும்அலங்கா ரத்தன்மை
கானஅமு தம்பரக்கும்
கனிவாயில் ஒளிபரப்பப்
பானல்நெடும் கண்கள்வெளி
பரப்பிஇசை பாடுவார்."

வான் அக - ஆகாயமாகிய இடத்தில் தோன்றும். மின்னு - மின்னலாகிய. க்: சந்தி. கொடிகள் வந்து - கொடிகள் தரைக்கு வந்து. கொடிகள்: உவம ஆகுபெயர். இழிந்தால் என - இறங்கின என்று கூறுமாறு. வந்து - தரைக்கு வந்து. தானம் - சுரஸ்தானத்தில். நிறை - நிரம்பிய. சுருதிகளில் தரும் - சுருதிகளோடு வழங்கும்; உருபு

மயக்கம். அலங்கார - அலங்காரங்களினுடைய; ஒருமை பன்மை மயக்கம். த்: சந்தி. தன்மை - பான்மையோடு. கான - இசைப் பாடலாகிய. அமுதம் பரக்கும் - அமுதம் பரந்து தோன்றும். கனி - கோவைப் பழங்களைப் போன்ற அதரங்களைப் பெற்ற; ஒருமை பன்மை மயக்கம்; உவம ஆகுபெயர். வாயில் - தம்முடைய திருவாயிலிருந்து. ஒளி - பிரகாசத்தை. பரப்ப - பரவுமாறு புரிய. ப்: சந்தி. பானல் - நீலோற்பல மலர்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். நெடும் - காதளவும் நீளமாக இருக்கும். கண்கள் - தங்களுடைய விழிகளை. வெளி - வெளியிடத்தில். பரப்பி - பரவச் செய்து. இசை - இசைப்பாடல்களை; ஒருமை பன்மை மயக்கம். பாடுவார் - அந்தத் தேவலோகத்திலிருந்து இறங்கி வந்த அணங்குகள் பாடுபவரானார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு வரும் 420-ஆம் பாடலின் உள்ளுறை வருமாறு:

'ஆகாயத்திலிருந்து இறங்கி வந்த தேவலோகத்துப் பெண்மணிகள் கற்பக மரத்தில் மலர்ந்த பூங்கொடிகளில் உள்ள தளிர்களைப் போன்ற திருவடிகள் செல்லும் விருப்பம் மருவிய தேர் ஓடுவதைப் போல் ஓடுவதைப் புரிய செங்கழுநீர் அரும்புகளைப் போன்ற கைகளில் உள்ள விரல்கள் வட்டமாகிய அணையோடும் அந்தப் பெண்மணிகளுடைய கைகள் பிறழ்ந்து வர தோற்றப் பொலிவை அடைந்திருக்கும் அந்தக் கைகளின் வழியாகவே போர் புரியும் கயல் மீன்களைப் போன்ற அந்தப் பெண்மணிகளுடைய விழிகள் பக்கங்களில் பிறழ்ந்து வர அற்புதத்தைப் பெற்ற தங்கக் கொடிகள் வளைந்து ஆடுபவற்றைப் போல அந்தப் பெண்மணிகள் திருநாவுக்கரசு நாயனாருக்கு முன்னால் நடனம் புரிவார்கள்.' பாடல் வருமாறு:

"கற்பகப்பூந் தளிரடிபோல்
காமருசா ரிகைசெய்ய
உற்பலமென் முகிழ்விரல்வட்
டணையோடும் கைபெயரப்
பொற்புறும்அக் கையின்வழிப்
பொருகயற்கண் புடைபெயர
அற்புதப்பொற் கொடிநுடங்கி
ஆடுவபோல் ஆடுவார்."

கற்பக - ஆகாயத்திலிருந்து இறங்கி வந்த தேவலோகத்துப் பெண்மணிகள் கற்பக மரத்தில் மலர்ந்த. ப்: சந்தி. பூந்தளிர் போல் - பூங்கொடிகளில் உள்ள தளிர்களைப் போல. தளிர்: ஒருமை பன்மை மயக்கம். காமரு - திருவடிகள் செல்லும் விருப்பம் மருவிய. சாரிகை - தேர் ஓடுவதைப் போல. செய்ய - ஓடுவதைப் புரிய. உற்பல - செங்கழுநீர் மலர்களில் மலர்ந்திருக்கும்; ஒருமை பன்மை மயக்கம். மென் - மென்மையாகிய. முகிழ் - அரும்புகளைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். விரல் - கைகளில் உள்ள விரல்கள்; ஒருமை பன்மை மயக்கம். வட்டணையோடும் - வட்டமாகிய அணையோடும். கை - அந்தப் பெண்மணிகளுடைய கைகளில் உள்ள; ஒருமை பன்மை மயக்கம். பெயர - பிறழ்ந்து வர. ப்: சந்தி. பொற்பு - தோற்றப் பொலிவை. உறும் - அடைந்திருக்கும். அக்கையின் வழி - அந்தக் கைகளின் வழியாகவே. கை: ஒருமை பன்மை மயக்கம். ப்:சந்தி. பொரு - போர் புரியும். கயல் - கயல் மீன்களைப் போன்ற; ஒருமை பன்மை மயக்கம். கண் - அந்தப் பெண்மணிகளினுடைய விழிகள்; ஒருமை பன்மை மயக்கம். புடை - இரண்டு பக்கங்களிலும்; ஒருமை பன்மை மயக்கம். பெயர - பிறழ்ந்து வர. அற்புத - அற்புதத்தை உண்டாக்கும்.

அற்புதம் - வியப்பு. ப்: சந்தி. பொற்கொடி - தங்கக் கொடிகள்; ஒருமை பன்மை மயக்கம். நுடங்கி - வளைந்து வளைந்து. ஆடுவபோல் - ஆடுபவற்றைப் போல. ஆடுவார் - அந்தப் பெண்மணிகள் திருநாவுக்கரசு நாயனாருக்கு முன்னால் நடனம் புரிவார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு வரும் 421-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'அந்தத் தேவலோகத்திலிருந்து திருப்புகலூருக்கு இறங்கி வந்த தெய்வப் பெண்மணிகள் திருநாவுக்கரசு நாயனாருக்கு முன்னால் நடனம் ஆடுவார்கள்; பாட்டுக்களைப் பாடுவார்கள்; மலர் மழையை அந்தத் திருநாவுக்கரசு நாயனாருக்கு மேலே சொரிவார்கள்; அந்த நாயனாரைப் புணர்பவர்களைப் போல் அந்த நாயனாரைத் தழுவிக் கொள்வார்கள்; தங்களுடைய கூந்தல்கள் அவிழ்ந்து விழுமாறு தங்களுடைய இடுப்புக்கள் அசைய அங்கும் இங்கும் ஓடுவார்கள்; காமவேளோடு திரும்பி வருவார்கள்; பிரகாசம் பெருகி வீச நெடுநேரமாக இருப்பார்கள்; தாங்கள் உடுத்திருந்த மெல்லிய ஆடைகள் அசையுமாறு நின்று கொண்டிருப்பவர்களுமாக ஆனார்கள்.' பாடல் வருமாறு:

"ஆடுவார்; பாடுவார்;
அலர்மாரி மேற்பொழிவார்;
கூடுவார் போன்றணைவார்;
குழல்அவிழ இடைநுடங்க
ஓடுவார்; மாரவே
ளுடன்மீள்வர்; ஒளிபெருக
நீடுவார் துகில்அசைய
நிற்பாரும் ஆயினார்."

ஆடுவார் - அந்தத் தேவலோகத்திலிருந்து திருப்புகலூருக்கு இறங்கி வந்த தெய்வப் பெண்மணிகள் திருநாவுக்கரசு நாயனாருக்கு முன்னால் நடனம் ஆடுவார்கள்; ஒருமை பன்மை மயக்கம். பாடுவார் - இசைப் பாடல்களைப் பாடுவார்கள்; ஒருமை பன்மை மயக்கம். அலர்மாரி - கற்பக மரத்தில் மலர்ந்த மலர்களை மழையைப் போல; உவம ஆகுபெயர். மேல் - அந்தத் திருநாவுக்கரசு நாயனாரின் மேலே. பொழிவார் - சொரிவார்கள்; ஒருமை பன்மை மயக்கம். கூடுவார் போன்று - அந்த நாயனாரைப் புணர்பவர்களைப் போல இருந்து. கூடுவார்: ஒருமை பன்மை மயக்கம். அணைவார் - அந்த நாயனாரைத் தழுவிக் கொள்வார்கள்; ஒருமை பன்மை மயக்கம். குழல் - தங்களுடைய கூந்தல்கள்; ஒருமை பன்மை மயக்கம். அவிழ - அவிழ்ந்து விழுமாறு. இடை - தங்களுடைய இடுப்புக்கள்; ஒருமை பன்மை மயக்கம். நுடங்க - அசைய. ஓடுவார் - அங்கும் இங்கும் ஓடுவார்கள்; ஒருமை பன்மை மயக்கம். மாரவேளுடன் - காமவே ளோடு. மீள்வர் - திரும்பி வருவார்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஒளி - தங்களுடைய திருமேனிகளிலிருந்து வீசும் பிரகாசம். பெருக - பெருகி வீச. நீடுவார் - நெடுநேரமாக இருப்பார்கள்; ஒருமை பன்மை மயக்கம். துகில் - தாங்கள் உடுத்துக் கொண்டிருந்த மெல்லிய ஆடைகள்; ஒருமை பன்மை மயக்கம். அசைய - அசையுமாறு. நிற்பாரும் - நின்று கொண்டிருப்பவர்களுமாக; ஒருமை பன்மை மயக்கம். ஆயினார் - ஆனார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு வரும் 422-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'இந்தப் பான்மையில் தேவலோகத்துப் பெண்மணி கள் எந்த வகையிலும் நடனமாடுதல், பாடுதல் முதலிய

செயல்களைச் செய்ய தந்தையாரைப் போன்றவராகிய அக்கினீசுவரருடைய திருவடிகளின் கீழே தம்முடைய திருவுள்ளத்தில் நினைக்கும் நினைவிலிருந்து அகலாத பக்தியினால் உருக்கத்தை அடையும் உண்மையான பான்மையைப் பெற்ற உணர்ச்சியைப் பெற்ற மேலான தவத்தைப் புரிந்த மேம்பாட்டைப் பெற்றவராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார் தம்முடைய திருவுள்ளத்தின் நிலைமை சற்றும் மாறாதவாறு தமக்கு உரிய உழவாரத் திருப்பணிகளிலும், வேறு பல திருப்பணிகளிலும் அந்த நாயனார் தலைசிறந்து நின்றார்.' பாடல் வருமாறு:

"இத்தன்மை அரம்பையர்கள்
எவ்விதமும் செயல்புரிய
அத்தனார் திருவடிக்கீழ்
நினைவகலா அன்புருகும்
மெய்த்தன்மை உணர்வுடைய
விழுத்தவத்து மேலோர்தம்
சித்தநிலை திரியாது
செய்பணியின் தலைநின்றார்."

இத்தன்மை - இந்தப் பான்மையில். அரம்பையர்கள் - தேவலோகத்துப் பெண்மணிகள்; 'அரம்பை, மேனகை, திலோத்தமை, ஊர்வசி முதலிய அணங்குகள்' எனலும் ஆம். எவ்விதமும் - எந்த வகைகளிலும்; ஒருமை பன்மை மயக்கம். செயல் - நடனமாடுதல், பாடுதல் முதலிய செய்களை; ஒருமை பன்மை மயக்கம். புரிய - செய்ய. அத்தனார் - தந்தையாரைப் போன்றவராகிய அக்கினீசு வரருடைய; உவம ஆகு பெயர். திருவடிக்கீழ் - திருவடிகளின் கீழே; ஒருமை பன்மை மயக்கம். நினைவு - தம்முடைய திருவுள்ளத்தில் நினைக்கும் நினைவிலிருந்து. அகலா - நீங்காத. அன்பு - பக்தியினால். உருகும் -

உருக்கத்தை அடையும். மெய் - உண்மையான. த்: சந்தி. தன்மை - பான்மையைப் பெற்ற. உணர்வு - உணர்ச்சியை. உடைய - பெற்ற. விழு - மேலான. த்: சந்தி. தவத்து - தவத்தைப் புரிந்த. மேலோர் - மேம்பாட்டைப் பெற்றவராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார். தம் - தம்முடைய. சித்த - திருவுள்ளத்தின். நிலை - நிலைமை. திரியாது - சற்றும் மாறாதவாறு. செய் - தாம் புரியும். பணியில் - உழவாரத் திருப்பணியும் வேறு பல திருப்பணிகளும்; ஒருமை பன்மை மயக்கம். தலை நின்றார் - தலை சிறந்து நின்றார்.

பிறகு வரும் 423-ஆம் கவியின் கருத்து வருமாறு:

'இந்த மாயமாகிய மானிடப் பிறவி என்னும் பிணைப்பு ஆகும் புண்ணியம் பாவம் என்னும் இரண்டு வினைகளையும் பார்த்து, ''உங்களால் இந்தத் திருப்புகலூரில் அடியேன் என்ன குறையைப் பெற்றவன்; திருவாரூரில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் அம்மானாகிய வன்மீக நாதருக்கு அடியேன் அடிமையாகி விட்டேன்; நீங்கள் அடியேனை அலைக்க வேண்டாம்'' என, ''பொய்ம்மாயப் பெருங்கடலுள்'' என்று வரும் ஒரு திருத்தாண்டகத்தை அந்தத் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளினார்.' பாடல் வருமாறு:

''இம்மாயப் பவத்தொடக்காம்
இருவினைகள் தமைநோக்கி
'உம்மால்இங் கென்னகுறை
உடையேன்யான் திருவாரூர்
அம்மானுக் காளானேன்;
அலையேன்மின் நீர்'என்று
'பொய்ம்மாயப் பெருங்கடலுள்'
எனும்திருத்தாண் டகம்புகன்றார்.''

இம்மாய - இந்த மாயமாகிய. ப்: சந்தி. பவத்தொடக்காம் - மானிடப் பிறவி என்னும் பிணைப்பு ஆகும். இருவினைகள் தமை - புண்ணியம் பாவம் என்னும் இரண்டு வினைகளையும்; தமை: இடைக்குறை. தம்: அசை நிலை. நோக்கி - திருநாவுக்கரசு நாயனார் பார்த்து. உம்மால் - உங்கள் இருவராலும். யான் - அடியேன். இங்கு என்ன குறை - இந்தத் திருப்புகலூரில் என்ன குறைவை. உடையேன் - பெற்றவன். திருவாரூர் - திருவாரூரில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும்; ஆகுபெயர். அம்மானுக்கு - அம்மானாகிய வன்மீக நாதருக்கு. ஆள் ஆனேன் - அடியேன் அடிமையாகி விட்டேன். நீர் - நீங்களும் இருவரும். அலையேன்மின் - அடியேனை அலைக்க வேண்டாம். என்று - என வரும். ''பொய்ம் மாயப் பெருங்கடலுள்'' எனும் - ''பொய்ம்மாயப் பெருங்கடலுள்'' என்று வரும். எனும்: இடைக்குறை. திருத்தாண்டகம் - ஒரு திருத்தாண்டகத்தை. புகன்றார் - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளினார்.

இந்தப் பாடலில் குறிப்பிட்ட திருவாரூரைப் பற்றிய திருத்தாண்டகம் வருமாறு:

''பொய்ம்மாயப் பெருங்கடலிற் புலம்பா நின்ற
புண்ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள்
இம்மாயப் பெருங்கடலை அரித்துத் தின்பீர்க்
கில்லையே கிடந்துதான் யானேல் வானோர்
அம்மானைத் தலைமகனைத் தண்ண லாரூர்த்
தடங்கடலைத் தொடர்ந்தோரை அடங்கச் செய்யும்
எம்மான்றன் அடித்தொடர் வானுழிதர் கின்றேன்
இடையிலேன் கெடுவீர்கள் இடறேன் மின்னே.''

பிறகு வரும் 424-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'அந்தத் தேவலோகத்திலிருந்து திருப்புகலூருக்கு இறங்கி வந்த அணங்குகளாகிய அந்தப் பெண்மணிகள் தம்முடைய பக்கத்தில் தம்மைத் தழுவிக் கொள்வதற்காக வந்து சேர்ந்து மன்மதனுடைய வசத்தில் அகப்பட்ட காம மயக்கத்தைப் பெற்றவர்களாகிய அந்த அணங்குகள் செய்து நடக்கும் வஞ்சகமாகிய செயல்களைப் புரிந்திட்டும் வேறுபாடு இல்லாத ஓர் உணர்ச்சியில் பெரியவராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனாரைத் தம்முடைய நிலையிலிருந்து மாற்றுவதற்கு உரிய எந்த ஒரு செயலும் இல்லாமையினால் அந்த அணங்குகள் திருநாவுக்கரசு நாயனாரை வணங்கி விட்டு அந்த நாயனாருக்கு எதிரிலிருந்து தங்களுடைய தேவலோகத்துக்கே போய் விட்டார்கள்.' பாடல் வருமாறு:

"மாதரவர் மருங்கணைய
வந்தெய்தி மதனவசக்
காதலவர் புரிந்தொழுகும்
கைதவங்கள் செய்திடவும்
பேதமிலா ஒருணர்விற்
பெரியவரைப் பெயர்விக்க
யாதும்ஒரு செயலில்லா
மையில்இறைஞ்சி எதிர்அகன்றார்."

மாதர் - அந்தத் தேவலோகத்திலிருந்து திருப்புகலூருக்கு இறங்கிவந்த. அவர் - அணங்குகளாகிய அந்தப் பெண்மணிகள்; ஒருமை பன்மை மயக்கம். மருங்கு - தம்முடைய பக்கத்தில். அணைய - தம்மைத் தழுவிக் கொள்வதற்காக. வந்து எய்தி - திருப்புகலூருக்கு வந்து சேர்ந்து. மதனவச - மன்மதனுடைய வசத்தில் அகப்பட்ட. க்: சந்தி. காதல் - காம மயக்கத்தைப் பெற்றவர்களாகிய. அவர் - அந்த அணங்குகள்; ஒருமை பன்மை மயக்கம்.

புரிந்து ஒழுகும் - செய்து நடக்கும். கைதவங்கள் - வஞ்சமாகிய செயல்களை. செய்திடவும் - புரிந்திட்டும். பேதம் - வேறுபாடு. இலா - இல்லாத; இடைக்குறை. ஓர் உணர்வில் - ஓர் உணர்ச்சியில். பெரியவரை - பெருமையைப் பெற்றவராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனாரை. ப்: சந்தி. பெயர்விக்க - தம்முடைய நிலையிலிருந்து மாற்றுவதற்குரிய. யாதும் ஒரு செயல் - எந்த ஒரு செயலும். இல்லாமையில் - இல்லாமையினால்; உருபு மயக்கம். இறைஞ்சி - அந்த அணங்குகள் திருநாவுக்கரசு நாயனாரை வணங்கிவிட்டு. எதிர் - அந்த நாயனாருக்கு எதிரிலிருந்து. அகன்றார் - தங்களுடைய தேவலோகத்துக்கே போய் விட்டார்கள்; ஒருமை பன்மை மயக்கம்.

பிறகு உள்ள 425-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'இந்த நிலைமையை ஏழு உலகங்களிலும் வாழ்பவர்கள் அடையுமாறு தெரிந்து கொண்டு தம்முடைய இயல்பைப் புகழ்ந்து பாராட்டத் தம்மிடம் நிலைபெற்று விளங்கிய ஆதரவைப் பெற்ற பக்தியினுடைய வடிவமான வாகீசராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார் மின்னலைப் போல் விளங்கும் சடாபாரத்தைத் தம்முடைய தலையின்மேற் பெற்றவராகிய அக்கினீசுவரர் வழங்கியெருளிய உண்மையான திருவருளை அடையுமாறு வரும் அந்த நிலைமை சமீபத்தில் இருப்பதாகச் சில தினங்கள் அந்தத் திருப்புகலூரில் அந்த நாயனார் தங்கிக் கொண்டிருந்தார்.' பாடல் வருமாறு:

"இந்நிலைமை உலகேழும்
எய்தஅறிந் தியல்பேத்த
மன்னியஅன் புறுபத்தி
வடிவான வாகீசர்

மின்னிலவும் சடையார்தம்
மெய்யருள்தான் எய்தவரும்
அந்நிலைமை அணித்தாகச்
சிலநால்அங் கமர்ந்திருந்தார்.''

இந்நிலைமை - இந்த நிலைமையை. உலகு ஏழும் - ஏழு உலகங்களில் வாழ்பவர்களும்; இட ஆகு பெயர். உலகு: ஒருமை பன்மை மயக்கம். எய்த - அடையுமாறு. அறிந்து - தெரிந்து கொண்டு. இயல்பு - தம்முடைய இயல்பை. ஏத்த - புகழ்ந்து பாராட்ட. மன்னிய - நிலைபெற்று விளங்கிய. அன்பு - ஆதரவை. உறு - பெற்ற. பத்தி - பக்தியினுடைய. வடிவான - வடிவமாக விளங்கிய. வாகீசர் - வாகீசராகிய அந்தத் திருநாவுக்கரசு நாயனார். மின் - மின்னலைப் போல; உவம ஆகு பெயர். நிலவும் - நிலவி விளங்கும். சடையார்தம் - சடாபாரத்தைத் தம்முடைய தலையின்மேற் பெற்றவராகிய அக்கினீசுவரர். தம்: அசைநிலை. மெய் - உண்மையாகிய. அருள்தான் - வழங்கியருளிய திருவருளை. தான்: அசைநிலை. எய்த - அடையுமாறு. வரும் அந்நிலைமை - வரும் அந்த நிலைமை. அணித்தாக - சமீபத்தில் இருப்பதாக. ச்: சந்தி. சிலநாள் - சில தினங்கள்; ஒருமை பன்மை மயக்கம். அங்கு - அந்தத் திருப்புகலூரில். அமர்ந்திருந்தார் - இருந்த ஒரு திருமடத்தில் தங்கிக் கொண்டிருந்தார்.

பிறகு வரும் 426-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தம்மிடம் நிலைபெற்று விளங்கிய அந்தக் கரணங்களாகிய மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பவை பொருந்திய தலைமையாகிய பாடலினால், ''தன்னுடைய சரணான தமியேனைப் புகலூரன் என்னையினிச் சேவடிக்கீழ் இருத்திடும்'' எனத் தம்முடைய திருவுள்ளத்தில் எழுந்து தோன்றுகின்ற திருநாவுக்கரசு

நாயனார் முன்பிறவியில் இருந்த உணர்ச்சியினுடைய இடைவிடாத முயற்சியோடு திருவிருத்தங்கள் பல வற்றைப் பாடியருளினார்.' பாடல் வருமாறு:

''மன்னியஅந் தக்கரணம்
மருவுதலைப் பாட்டினால்
'தன்னுடைய சரணான
தமியேனைப் புகலூரன்
என்னையினிச் சேவடிக்கீழ்
இருத்திடும்'என் றெழுகின்ற
முன்னுணர்வின் முயற்சியினால்
திருவிருத்தம் பலமொழிந்தார்.''

மன்னிய - தம்மிடம் நிலைபெற்று விளங்கிய. அந்தக் கரணம் - அகக்கரணங்களாகிய மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பவை. கரணம்: ஒருமை பன்மை மயக்கம். மருவு - பொருந்திய. தலைப்பாட்டினால் - தலைமையாகிய பாசுரத்தினால். 'தன்னுடைய சரணான தமியேனைப் புகலூரன் என்னையினிச் சேவடிக்கீழ் இருந்திடும்' என்று - 'தன்னுடைய சரணான தமியேனைப் புகலூரன் என்னையினிச் சேவடிக் கீழ் இருத்திடும்' என்று. எழுகின்ற - தம்முடைய திருவுள்ளத்தில் எழுந்து தோன்றுகின்ற. முன் - அந்தத் திருநாவுக்கரசு நாயனார் முன் பிறப்பில். உணர்வின் - இருந்த உணர்ச்சியினுடைய; உருபு மயக்கம். முயற்சியினால் - இடைவிடாத முயற்சியோடு; உருபு மயக்கம். திருவிருத்தம் பல - பல வகையான திருவிருத்தங்களை; ஒருமை பன்மை மயக்கம். மொழிந்தார் - பாடியருளினார்.

அந்தச் சிதம்பரத்தைப் பற்றி அந்த நாயனார் பாடியருளிய ஒரு திருவிருத்தம் வருமாறு:

"கருநட்ட கண்டனை அண்டத்
தலைவனைக் கற்பகத்தைச்
செருநட்ட மும்மதில் எய்யவல்
லானைச்செந் தீமுழங்கத்
திருநட்டம் ஆடியைத் தில்லைக்
கிறையைச்சிற் றம்பலத்துப்
பெருநட்டம் ஆடியை வானவர்
கோனென்று வாழ்த்துவனே."

அந்த நாயனார் திருக்கழுமலத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருவிருத்தம் வருமாறு:

"பார்கொண்டு மூடிக் கடல்கொண்ட
ஞான்றுநின் பாதமெல்லாம்
நாலஞ்சு புள்ளினம் ஏந்தின
என்பர் நளிர்மதியம்
கால்கொண்ட வண்கைச் சடைவிரித்
தாடும் கழுமலவர்க்
காளன்றி மற்றுமுண் டோஅந்த
ணாழி அகலிடமே."

அந்த நாயனார் அதே திருக்கழுமலத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருவிருத்தம் வருமாறு:

"படையார் மழுவொன்று பற்றிய
கையன பதிவினவில்
கடையார் கொடிநெடு மாடங்கள்
ஓங்கும் கழுமலமாம்
மடைவாய்க் குருகினம் பாளை
விரிதொறும் வண்டினங்கள்
பெடைவாய் மதுவுண்டு பேரா
திருக்கும் பெரும்பதியே."

அந்த நாயனார் பாடியருளிய ஓர் ஆருயிர்த் திருவிருத்தம் வருமாறு:

"எட்டாம் திசைக்கும் இருதிசைக்
கும்இறை வாமுறைஎன்
றிட்டார் அமரர்வெம் பூசல்
எனக்கேட் டெரிவிழியா
ஒட்டாக் கயவர் திரிபுரம்
மூன்றையும் ஓரம்பினால்
அட்டான் அடிநிழற் கீழதன்
றோஎன் ஆருயிரே."

அந்த நாயனார் திருவொற்றியூரைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருவிருத்தம் வருமாறு:

"செற்றுக் களிற்றுரி கொள்கின்ற
ஞான்றுசெரு வெண்கொம்பொன்
றிற்றுக் கிடந்தது போலும்
இளம்பிறை பாம்பதனைச்
சுற்றிக் கிடந்தது கிம்புரி
போலச்சுடர் இமைக்கும்
நெற்றிக்கண் மற்றதன் முத்தொக்கு
மால்ஒற்றி யூரனுக்கே."

அந்த நாயனார் திருப்பழனத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருவிருத்தம் வருமாறு:

"வேவித்து நின்று விளைந்தன
வெந்துயர் துக்கமெல்லாம்
ஆவித்து நின்று கழிந்தன
அல்லல் அவையறுப்பான்
பாவித்த பாவனை நீஅறி
வாய்பழ னத்தரசே

கூவித்துக் கொள்ளுந தனைஅடி
யேனைக் குறிக்கொள்வதே.''

அந்த நாயனார் திருநெய்த்தானத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருவிருத்தம் வருமாறு:

''பாரிடர் சாடிய பல்லுயிர்
வான்அம ரர்க்கருளிக்
காரடைந் தகடல் வாயுமிழ்
நஞ்சமு தாகவுண்டான்
ஊரடைந் திவ்வுல கிற்பலி
கொள்வது நாமறியோம்
நீரடைந் தகரை நின்றநெய்த்
தானத் திருந்தவனே.

அந்த நாயனார் திருவையாற்றைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருவிருத்தம் வருமாறு:

''குறுவித்த வாகுற்ற நோய்வினை
காட்டிக் குறுவித்தநோய்
உறுவித்த வாவுற்ற நோய்வினை
தீர்ப்பான் உகந்தருளி
அறிவித்த வாறடி யேனைஐ
யாறன் அடிமைக்குளே
செறிவித்த வாதொண்ட னேனைத்தன்
பொன்னடிக் கீழெனையே.''

அந்த நாயனார் திருவீழிமிழலையைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருவிருத்தம் வருமாறு:

''வான்சொட்டச் சொட்டநின் றட்டும்
வளர்மதி யோடயலே
தேன்சொட்டச் சொட்டநின் றட்டும்
திருக்கொன்றை சென்னிவைத்தீர்

மான்பெட்டை நோக்கி மணாளீர்
மணிநீர் மிழலையுள்ளீர்
நான்கட்ட நும்மை மறக்கினும்
என்னைக் குறிக்கொண்மினே.''

அந்த நாயனார் திருநல்லூரைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருவிருத்தம் வருமாறு:

''அட்டுமின் இப்பலி என்றென்
றகங்கடை தோறும்வந்து
மட்டவி முங்குழ லார்வளை
கொள்ளும் வகையென்கொலோ
கொட்டிய பாணி எடுத்திட்ட
பாதமும் கோளரவும்
நட்டம்நின் றாடிய நாதர்நல்
லூரிடம் கொண்டவரே.''

அந்த நாயனார் திருவையாற்றைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருவிருத்தம் வருமாறு:

''அந்திவட் டத்திங்கட் கண்ணியன்
ஐயாறமர்ந் துதந்தென்
புந்திவட் டத்திடைப் புக்குநின்
றானையும் பொய்யென்பனோ
சிந்திவட் டச்சடைக் கற்றை
அலம்பச் சிறிதலர்ந்த
நந்திவட் டத்தொடு கொன்றை
வளாவிய நம்பனையே.''

அந்த நாயனார் திருஇன்னம்பரைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருவிருத்தம் வருமாறு:

''மன்னும் மலைமகள் கையால்
வருடின மாமறைகள்

சொன்ன துறைதொறும் தூப்பொருள்
ஆயின தூக்கமலத்
தன்ன வடிவின அன்புடைத்
தொண்டர்க் கமுதருத்தி
இன்னல் களைவன இன்னம்ப
ரான்றன் இணையடியே.''

அந்த நாயனார் திருவாரூரைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருவிருத்தம் வருமாறு:

''வேம்பினைப் பேசி விடக்கினை
ஓம்பி வினைபெருக்கித்
தூம்பினைத் தூர்த்தங்கோர் சுற்றம்
துணையென் றிருத்திர்தொண்டர்
ஆம்பலம் பூம்பொய்கை ஆரூர்
அமர்ந்தான் அடிநிழற்கீழ்ச்
சாம்பலைப் பூசிக் கலமின்றித்
தொண்டுபட் டுய்ம்மின்களே.''

அந்த நாயனார் திருவதிகை வீரட்டானத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருவிருத்தம் வருமாறு:

''மாசில்ஒள் வாள்போல் மறியும்
மணிநீர்த் திரைத்தொகுதி
ஊசிலை ஆடியங் கொண்சிறை
அன்னம் உறங்கலுற்றால்
பாசறை நீலம் பருகிய
வண்டுபண் பாடல்கண்டு
வீசும் கெடில வடகரைத்
தேஎந்தை வீரட்டமே.''

அந்த நாயனார் திருக்கடவூர் வீரட்டத்தைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருவிருத்தம் வருமாறு:

"மருள்துயர் தீரஅன் றர்ச்சித்த
மாணிமார்க் கண்டயற்காய்
இருட்டிய மேனி வளைவாள்
எயிற்றெரி போலும்குஞ்சிச்
சுருட்டிய நாவில்வெங் கூற்றம்
பதைப்ப உதைத்துங்ஙனே
உருட்டிய சேவடி யான்கட
வூருறை உத்தமனே."

அந்த நாயனார் திருமாற்பேற்றைப் பற்றிப் பாடியருளிய ஒரு திருவிருத்தம் வருமாறு:

"மாணிக் குயிர்பெறக் கூற்றை
உதைத்தன மாவலிபால்
காணிக் கிரந்தவன் காண்டற்
கரியன கண்டதொண்டர்
பேணிக் கிடந்து பரவப்
படுவன பேர்த்துமஃதே
மாணிக்க மாவன மாற்பே
றுடையான் மலரடியே."

அந்த நாயனார் பாடியருளிய பசுபதித் திருவிருத்தம் ஒன்று வருமாறு:

"சாம்பலைப் பூசித் தரையிற்
புரண்டுநின் தாள்பரவி
ஏம்பலிப் பார்கட் கிரங்குகண்
டாயிருங் கங்கையென்னும்
காம்பலைக் கும்பணைத் தோளி
கதிர்ப்பூண் வனமுலைமேல்
பாம்பலைக் கும்சடை யாய்எம்மை
ஆளும் பசுபதியே."

அந்த நாயனார் பாடியருளிய ஒரு சரக்கறைத் திருவிருத்தம் வருமாறு:

''விடையும் விடைப்பெரும் பாகாளன்
விண்ணப்பம் வெம்மழுவாள்
படையும் படையாய் நிறைத்தபல்
பூதமும் பாய்புலித்தோல்
உடையு முடைதலை மாலையும்
மாலைப் பிறைஒதுங்கும்
சடையு மிருக்குஞ் சரக்க றை
யோஎன் தனிநெஞ்சமே.''

பிறகு உள்ள 427-ஆம் கவியின் உள்ளுறை வருமாறு:

'மண்ணுலகாம் முதலாம் உலகங்களில் வாழ்பவர்கள் துதித்துப் பாடுமாறு நிலைபெற்ற ஒரு திருத்தாண்டகத்தை ''புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்'' என்று பாடியருளி யாரும் அடைவதற்கு அருமையாக உள்ள சிவானந்தத்தைத் தரும் மெய்ஞ்ஞானத்தின் வடிவமே ஆகி அண்ணலாராகிய அக்கினீசுவரருடைய செந்தாமரை மலர்களைப் போல்ச் சிவந்து விளங்கும் திருவடிகளின் கீழ் திருவதிகை வீரட்டானேசுவரர் தடுத்து ஆட்கொண்ட அந்தத் திருநாவுக்கரசு நாயனார் தங்கிக் கொண்டிருந்தார்.' பாடல் வருமாறு:

''மண்முதலாம் உலகேத்த
மன்னுதிருத் தாண்டகத்தைப்
'புண்ணியா உன்னடிக்கே
போதுகின்றேன்' எனப்புகன்று
நண்ணரிய சிவானந்த
ஞானவடி வேயாகி
அண்ணலார் சேவடிக்கீழ்
ஆண்டஅர சமர்ந்திருந்தார்.''

மண் - இந்த மண்ணுலகம். முதலாம் - முதலாக இருக்கும். உலகு - உலகங்களில் வாழ்பவர்கள்; இட ஆகு பெயர். உலகு: ஒருமை பன்மை மயக்கம். ஏத்த - துதித்துப் பாடுமாறு. மன்னு - நிலைபெற்ற. திருத்தாண்டகத்தை - ஒரு திருத்தாண்டகத்தை. ப்: சந்தி. 'புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்' என - 'புண்ணியா உன்னடிக்கே போதுகின்றேன்' என்று. என: இடைக்குறை. ப்: சந்தி. புகன்று - பாடியருளி. நண்ணரிய - யாரும் அடைவதற்கு அருமையாக உள்ள. நண்ணரிய - நண்ண அரிய; தொகுத்தல் விகாரம். சிவானந்த - சிவானந்தத்தை அளிக்கும். ஞான - மெய்ஞ் ஞானத்தின். வடிவேயாகி - வடிவமே ஆகி. அண்ணலார் - தலைவராகிய அக்கினீசு வரருடைய. சேவடிக்கீழ் - செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்த திருவடிகளின் கீழே. அடி: ஒருமை பன்மை மயக்கம். ஆண்ட - திருவதிகை வீரட்டானேசுவரர் தடுத்து ஆட்கொண்ட. அரசு - அந்தத் திருநாவுக்கரசு நாயனார்; திணை மயக்கம். அமர்ந்திருந்தார் - தங்கிக் கொண்டிருந் தார்.

பிறகு வரும் 428-ஆம் பாடலின் கருத்து வருமாறு:

'தேவலோகத்தில் வாழும் தேவர்கள் கற்பக மரத்தில் மலர்ந்திருக்கும் மலர்களை மழையைப் போல் இந்த மண்ணுலகத்தில் நிறையவும், தேவலோகத்திற்கு மேலே நிரம்பிய நாகசுரம், ஒத்து, மத்தளம், கஞ்சதாளம், வீணை என்னும் ஐந்து பெருமையைப் பெற்ற வாத்தியங்கள் எழுப்பிய இனிய கானமும், பிரமதேவன் முதலாக உள்ள யோனிகளாக உள்ளவை யாவும் தங்களுடைய திருவுள்ளங் களில் நிரம்பியுள்ள பெரிய மகிழ்ச்சி நிரம்பியிருக்கும் சித்திரை மாதத்தில் வரும் சதயமாகும் திருநட்சத்திரத்தில்.' பாடல் வருமாறு:

''வானவர்கள் மலர்மாரி
மண்ணிறைய விண்ணுலகின்
மேனிறைந்த ஐந்துபே
ரியஒலியும் விரிஞ்சன்முதல்
யோனிகளா யினஎல்லாம்
உள்நிறைந்த பெருமகிழ்ச்சி
தானிறைந்த சித்திரையிற்
சதயமாம் திருநாளில்.''

இந்தப் பாடல் குளகம். வானவர்கள் - தேவலோகத்தில் வாழும் தேவர்கள். மலர் - கற்பக மரத்தில் மலர்ந்திருக்கும் மலர்களை; ஒருமை பன்மை மயக்கம். மாரி - மழையைப் போல; உவம ஆகு பெயர். மண் - இந்த மண்ணுலகத்தில். நிறைய - நிறையவும். விண்ணுலகின் - தேவலோகத்துக்கு. மேல் - மேலே. நிறைந்த - இனிய நாதம் நிரம்பியுள்ள. ஐந்து பேரிய - நாகசுரம், ஒத்து, மத்தளம், கஞ்சதாளம், வீணை என்னும் ஐந்து பெருமையைப் பெற்ற வாத்தியங்கள்; ஒருமை பன்மை மயக்கம். ஒலியும் - எழுப்பிய இனிய கானமும். விரிஞ்சன் - பிரமதேவன். முதல் - முதலாக உள்ள. யோனிகளாயின -எண்பத்து நான்கு லட்சம் யோனிகளில் பிறந்த உயிர்களான. எல்லாம் - யாவும். உள் - தங்களுடைய திருவுள்ளங்களில்; ஒருமை பன்மை மயக்கம். நிறைந்த - நிரம்பியுள்ள. பெருமகிழ்ச்சி - பெரிய ஆனந்தம். தான்: அசைநிலை. நிறைந்த - நிரம்பியிருக்கும். சித்திரையில் - ஒரு சித்திரை மாதத்தில் வரும். சதயமாம் - சதயமாகும். திருநாளில் - திருநட்சத்திரத்தில்.

அடுத்து வரும் பாசுரம் இந்தத் திருநாவுக்கரசு நாயனார் புராணத்தில் இறுதியாக உள்ளது. அந்தப் பாசுரத்தின் கருத்து வருமாறு:

'அடியேன் பேரார்வத்தால் திருவதிகை வீரட்டானேசுவரர் தடுத்து ஆட்கொண்ட திருநாவுக்கரசு நாயனாருடைய வரலாற்றின் முறையை அடியேன் தெரிந்து கொண்ட வண்ணம் பாடினேன்; அந்த மேலான முனிவனாகிய திருநாவுக்கரசின் நறுமணம் கமழும் மென்மையான செந்தாமரை மலர்களைப் போன்ற சிவந்து விளங்கும் திருவடிகளை அடியேனுடைய கைகளை அடியேனுடைய தலையின்மேல் குவித்துக் கும்பிட்டு விட்டு அந்தத் திருநாவுக்கரசு நாயனாரை வணங்கிவிட்டு பாண்டிய மன்னனுடைய முதல் அமைச்சராகிய குலச்சிறை நாயனார் இறுதி இல்லாத திருத்தொண்டுகளாகிய இடைவிடாத முயற்சியை இனிமேல் அடியேன் பாடத் தொடங்குகிறேன்.' பாடல் வருமாறு:

"அடியனேன் ஆதரவால்
ஆண்டஅர சின்சரிதப்
படியையான் அறிந்தபடி
பகர்ந்தேன்; அப்பரமுனிவன்
கடிமலர்மென் சேவடிகள்
கைதொழுது குலச்சிறையார்
முடிவில்புகழ் திருத்தொண்டின்
முயற்சியினை மொழிகின்றேன்."

இந்தப் பாடல் சேக்கிழார் அடுத்து வரும் குலச்சிறை நாயனார் புராணத்திற்குத் தோற்றுவாயாகப் பாடியருளியது. அடியனேன் - அடியேன்; இது சேக்கிழார் தம்மைக் கூறிக் கொண்டது. ஆதரவால் - பேரார்வத்தால். ஆண்ட - திருவதிகை வீரட்டானேசுவரர் தடுத்து ஆட்கொண்ட. அரசின் - திருநாவுக்கரசு நாயனாருடைய; திணை மயக்கம். சரிதப்படியை - வரலாற்றின் முறையை. யான் - அடியேன்; இதுவும் சேக்கிழார் தம்மைக் கூறிக்

கொண்டது. அறிந்தபடி - தெரிந்து கொண்ட வண்ணம். பகர்ந்தேன் - பாடினேன். அப்பர முனிவன் - அந்த மேலோனாகிய முனிவனாகிய திருநாவுக்கரசன். கடி - நறுமணம் கமழும். மலர்மென் - மென்மையாகிய. சேவடிகள் - செந்தாமரை மலர்களைப் போலச் சிவந்து விளங்கும் திருவடிகளை. மலர்: ஒருமை பன்மை மயக்கம். கை - அடியேனுடைய இரண்டு கைகளையும்; ஒருமை பன்மை தமயக்கம். தொழுது - அடியேனுடைய தலையின்மேல் குவித்துக் கும்பிட்டு விட்டு அந்தத் திருநாவுக்கரசு நாயனாரை வணங்கிவிட்டு. குலச்சிறையார் - பாண்டிய மன்னனுடைய முதல் அமைச்சராகிய குலச்சிறை நாயனாருடைய. முடிவு - இறுதி. இல் - இல்லாத; கடைக்குறை. புகழ் - புகழைப் பெற்ற. திருத்தொண்டின் - திருத்தொண்டுகளாகிய; ஒருமை பன்மை மயக்கம். முயற்சியினை - இடைவிடாத முயற்சியை. மொழிகின்றேன் - இனிமேல் அடியேன் பாடத் தொடங்குகிறேன்.

★



கி.வா. ஜகந்நாதன் பிறப்பு : விசுவாவசு வருடம், பங்குனி மாதம், சனிக்கிழமை, 29-ஆம் தேதி (11.04.1906); தந்தையார் - வாசு தேவ ஐயர்; தாயார் - பார்வதி அம்மாள். பிறந்த ஊர் கிருஷ்ண ராயபுரம் (திருச்சி மாவட்டம்); படித்த இடங்கள் - கிருஷ்ணராய புரம், மோகனூர், குளித்தலை, சென்னை; படிப்பு - வித்துவான், எம்.ஏ. (தமிழ்); திருமணம்- 1932; (பெற்ற பட்டங்கள் - ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் வழங்கிய 'திருமுருகாற்றுப் படை அரசு', 'வாகீச கலாநிதி', சிருங்கேரி சங்கராசார்யர் அவர்கள் வழங்கிய 'தமிழ்க்கவி பூஷணம்', புஷ்பகிரி சங்கராசார்யர் வழங் கிய 'உபந்நியாச கேசரி', மதுரை ஞானசம்பந்தர் மடாதிபதி வழங் கிய 'திருநெறித்தவமணி'. மற்ற பட்டங்கள் - 'கந்தர் அலங்காரச் செம்மல்', 'தமிழ் முனிவர்', 'செந்தமிழ்ச் செல்வர்' முதலியன.

பரிசுகள் : திருப்பனந்தாள் மடத்தில் வித்துவான் பரீட்சை யில் முதல்வராகத் தேர்ச்சி பெற்றவருக்குத் தரும் பரிசு ரூ.100/-, சாகித்திய அகாடமியார் 'வீரர் உலகம்' என்ற புத்தகத்திற்கு அளித்த பரிசு ரூ. 5000/-, திருச்சி தமிழ் சங்கத்தினர் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களின் பரம்பரையில் வந்தவர்களுக்கு அளிக்கும் பரிசு ரூ. 5000/-

எழுதிய புத்தகங்கள் : சிறுகதைத் தொகுதிகள் - 10 நூல்கள், கவிதை நூல்கள் - 8, கந்தர் அலங்கார விளக்கம் - 20 நூல்கள் (தற் போது 6 பகுதிகள்), திருமுறை மலர்கள் - 12 பகுதிகள் (தற்போது 3 பகுதிகள்), அபிராமி அந்தாதி - மூலமும் உரையும் ஒரு நூல்; விளக்க உரை --நாவல்களின் தோற்றமும் வளர்ச்சியும் - ஒன்று, முருகனைப் பற்றிய கட்டுரைத் தொகுதிகள் - 4 நூல்கள், பதிப்பு : திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு, சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம், பதினோராம் திருமுறை, திருவாசகம் முதலியன மொத்தப் புத்த கங்கள் 200க்கும் மேல்.

புதல்வர்கள் மூவர், பெண் ஒருத்தி.

பிரயாணங்கள் : பாரீஸ், லண்டன், ரோம், கோலாலம்பூர், பர்மா, இலங்கை, இந்தியாவில் பல இடங்கள்.

## கி.வா.ஜ. நூற்றாண்டு வெளியீடுகள்

1. நவக்கிரகங்கள்
2. கி.வா.ஜ. பதில்கள் - 3 பாகங்கள்
3. பெரிய புராண விளக்கம் - 10 பகுதிகள்
4. எல்லாம் தமிழ்
5. இலங்கைக் காட்சிகள்
6. நாயன்மார் கதை - 2 பாகங்கள்
7. முந்நீர் விழா
8. தமிழ் நூல் அறிமுகம்
9. நல்ல சேனாதிபதி
10. கரிகால் வளவன்
11. கற்பக மலர்
12. காவியமும் ஓவியமும்
13. குமரியின் மூக்குத்தி
14. பயப்படாதீர்கள்
15. அன்பு மாலை
16. திரு அம்மானை
17. பவள மல்லிகை
18. சுதந்திரமா!
19. சிலம்பு பிறந்த கதை
20. சகல கலா வல்லி
21. புகழ் மாலை
22. பேசாத பேச்சு
23. பெரும் பெயர் முருகன்
24. சங்க நூற் காட்சிகள் - 2 பாகங்கள்
25. அற்புதத் திருவந்தாதி
26. வளைச் செட்டி
27. வீரர் உலகம்
28. புது டைரி
29. திருவெம்பாவை
30. கந்தரலங்காரச் சொற்பொழிவுகள் - 7 பாகங்கள்
31. திருமுறை மலர்கள்-3 பாகங்கள்
32. விளையும் பயிர்
33. அழியா அழகு
34. நாடோடி இலக்கியம்
35. அப்பர் தேவார அமுது
36. பல்வகைப் பாடல்கள்
37. கதை சொல்கிறார் கி.வா.ஜ.
38. அதிசயப் பெண்
39. கந்தவேள் கதையமுதம்
40. கதிர்காம யாத்திரை
41. ஏற்றப் பாடல்களும் தொழிற் பாடல்களும்
42. முருகன் பெருமை
43. புது மெருகு
44. வாழும் தமிழ்
45. தமிழ்க் காப்பியங்கள்
46. கண்டறியாதன கண்டேன்
47. நல்ல பிள்ளையார்
48. கஞ்சியிலும் இன்பம்
49. முல்லை மணம்
50. மச்சு வீடு
51. குழந்தை உலகம்
52. கலைஞன் தியாகம்
53. ஞான மாலை
54. வாழ்க்கை சூழல்
55. வழிகா . .
56. கி.வா.ஜ. பேசுகிறார்
57. மனிதப் பறவை
58. மருமகள் (அ) மன்மதன் காதலி
59. சித்திர மேகலை
60. கலைச் செல்வி
61. தமிழ் நாவல்களின் தோற்றமும் வளர்ச்சியும்
62. அறுந்த தந்தி
63. திருமுருகாற்றுப் படை விளக்கம்
64. அபிராமி அந்தாதி (மூலமும் உரையும்)
65. அபிராமி அந்தாதி - 4 தொகுதிகள்
66. வாருங்கள் பார்க்கலாம்
67. நாம் அறிந்த கி.வா.ஜ. (அனந்தன்)
68. கிராமியப் பாடல்கள்
69. கன்னித் தமிழ்
70. கோவூர்க் கிழார்
71. தமிழின் வெற்றி
72. பாரிவேள்
73. அதிகமான் நெடுமான் அஞ்சி
74. தமிழ் வையை
75. ஆலைக் கரும்பு
76. தமிழ்ப் பழமொழிகள் - 4 பாகங்கள்
77. நாயன்மார் கதை - 2 பாகங்கள்
78. அநுபூதி விளக்கம் - ? பகுதிகள்

*கலா நிலையம், மயிலாப்பூர் சென்னை 4*